بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

# أصول في التفسير

بقلم الفقير إلى ربه محمد بن صالح العثيمين رحمه الله تعالى

# அல்குர்ஆன் விரிவுரையின் சில அடிப்படைகள்


ஆசிரியர்

முஹம்மது ஸாலிஹ் அல் உஸைமீன் رحمه الله

மொழிபெயர்ப்பு

உமர் ஷரீஃப் அப்துஸ் ஸலாம்




بِسْمِ اللَّهِ الرَّحْمَنِ الرَّحِيمِ

# أصول في التفسير

بقلم الفقير إلى ربه محمد بن صالح العثيمين رحمه الله تعالى

# அல்குர்ஆன் விரிவுரையின் சில அடிப்படைகள்


ஆசிரியர்

**முஹம்மது ஸாலிஹ் அல் உஸைமீன்** رحمه الله

மொழிபெயர்ப்பு

**உமர் ஷரீஃப் அப்துஸ் ஸலாம்**




## About This Book


| | |
|---|---|
| Name of the Book | : அல்குர்ஆன் விரிவுரையின் சில அடிப்படைகள் |
| Name in Arabic | : أُصُولٌ فِي التَّفْسِيْر |
| Subject | : உஸூலுத் தஃப்ஸீர் |
| Author | : Assheik Muhammad Saalih Al Uthaimin ﵀ |
| Translator | : OMAR SHERIFF ABDUS SALAM |
| Language | : Tamil |
| Edition | : 1st, June 2020. |
| Total Pages | : 0000 |
| Copies | : 2000 |
| Ref. No. | : DH-TAML 2065 |
| Printed by | : Patel Graphics, Chennai - 6. |

**HADIYAH: RS. 120/-**

**DH-TML 2065**

Published by:




**DARUL HUDA**

QUALITY ISLAMIC BOOK PUBLISHERS

# 211 (102), 1st Floor, Linghi Street, Mannady, Chennai-600001.

Phone : +91-44-25247866, | darulhuda.chennai@gmail.com

Mobile : +91-98401 74121 | www.darulhuda.net

# பதிப்புரை

அல்லாஹ்விற்கே எல்லாப்புகழும். ஸலவாத்தும் ஸலாமும் அல்லாஹ்வுடைய தூதர் மீதும் அவர்களின் குடும்பத்தார் மற்றும் தோழர்கள் மீதும் நிலவட்டும்.

மனித குலத்திற்கு நேர்வழிகாட்டியாக அல்லாஹ் இறக்கிய இறுதி வேதம்தான் அல்குர்ஆன்.

அல்குர்ஆனை நாம் எப்படி அணுக வேண்டும், அதிருந்து நேர்வழியை நாம் எப்படி அடைய பெறுவது, அறிஞர்கள் சட்டங்களை அல்குர்ஆனில் இருந்து எப்படி ஆய்வு செய்கிறார்கள் என்பதையெல்லாம் சுருக்கமாக விளக்கி கூறுவதற்கு எழுதப்பட்டதுதான் இந்த நூல்.

இது ஒரு அடிப்படை நூல். மார்க்க கல்வியை கற்கின்ற ஒவ்வொரு மாணவரும் கண்டிப்பாக இந்நூலை கற்பது மிக அவசியமாகும்.

அல்குர்ஆன் விரிவுரையின் அடிப்படைகளை அறியாத காரணத்தால் பலர் தவறான இன்னும் வழிகேடான கருத்துகளை குர்ஆனின் பெயரால் மார்க்கத்திற்குள் புகுத்தி மக்களை வழிகெடுப்பதை நாம் பார்க்கிறோம்.

ஆகவே, அல்குர்ஆன் விஷயத்தில் தவறான புரிதல் இருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்கும் அல் குர்ஆனுக்கு விரிவுரை கூறும்போது ஏற்படக்கூடிய தவறுகளிருந்து பாதுகாப்பு பெறுவதற்கும் இந்நூலை வாசித்து, அறிவது மிக மிக முக்கியமாகும்.

துபாய் மர்கஸுல் ஹுதாவில் நடைபெற்ற ஐந்து நாள் சிறப்பு கல்வி

வகுப்பில் இந்நூலை மாணவிகளுக்கு பயிற்று வித்தோம். அல்ஹம்து ல்லாஹ். மாணவிகள் மிகுந்த பலன் பெற்றார்கள்.

அதைத்தொடர்ந்து இந்நூலை பொதுவாக வெளியிட்டு மக்களுக்கெல்லாம் இந்த கல்வியை சேர்க்க வேண்டும் என்ற ஆவல் இந்நூலை வெளியிடுகிறோம்.

அல்லாஹ் எங்களின் இந்த நூலையும் மற்ற நூல்களையும் ஏற்று, உலகில் உள்ள தமிழ் மக்கள் எல்லோரும் இறுதி நாள் வரை நற்பலனும் நேர்வழியும் பெறும் படி செய்வானாக. ஆமீன்.

இந்நூல் தவறுகள், குறைகள் ஏதும் இருப்பின் எங்களுக்கு சுட்டிக்காட்டி மார்க்கப் பணி சிறப்பாக நடைபெறுவதற்கு உதவுங்கள். அல்லாஹ் உங்களுக்கு நற்கூ வழங்குவானாக.

அல்லாஹ்வே எங்களை மன்னிப்பாயாக! எங்களிடமிருந்து இதை ஏற்றுக் கொள்வாயாக! நீதான் நன்கறிந்தவன், நன்கு செவியுறுபவன்.

உன்னுடைய மார்க்கப் பணி நடைபெறுவதற்கு எங்களுக்கு உதவக்கூடிய சகோதர சகோதரிகள் அனைவருக்கும் நீயும் உதவி செய்வாயாக! அ வர்களுக்கு சொர்க்கத்தை கூயாக தருவாயாக! நிச்சயமாக நீ மாபெரும் கொடை வள்ளல் ஆவாய். ஆமீன்.

உமர் ஷரீஃப் அப்துஸ் ஸலாம்

குர்ஆன், ஸுன்னா பணியாளர்

தாருல் ஹுதா, சென்னை.

# தாருல் ஹுதா
# அறிமுகம்

எல்லாப் புகழும் அகிலங்களின் இறைவன் அல்லாஹ் ஒருவனுக்கே! இறையருளும் ஈடேற்றமும் நபி முஹம்மது ﷺ அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள், அவர்களைப் பின்பற்றும் அனைவருக்கும் உண்டாகட்டும்.

இஸ்லாமியச் சகோதர சகோதரிகளே!

அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு

தாருல் ஹுதா அறிமுகத்தின் வாயிலாக உங்களைச் சந்திப்பதில் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறோம். இதில் தாருல் ஹுதாவின் நோக்கத்தையும் அதன் பணிகளையும் விவரிப்பதுடன் அதன் இன்றைய தேவையையும் தங்கள் முன் சமர்ப்பிக்கிறோம்.

*அல்லாஹுதஆலா கூறுகிறான்: ‘இறை நம்பிக்கையுடைய ஆண்களும், இறை நம்பிக்கையுடைய பெண்களும் (தங்களுக்குள்) ஒருவருக்கொருவர் உறுதுணையாக இருக்கின்றனர். அவர்கள், (ஒருவர் மற்றவரை) நன்மை செய்யும்படித் தூண்டியும், பாவம் செய்யாது தடுத்தும், தொழுகையைக் கடைப்பிடித்து, (மார்க்க வரி) ஜகாத்து கொடுத்தும் வருவார்கள். அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கட்டுப்பட்டு நடப்பார்கள். இத்தகை யோருக்கு வெகு விரைவில் அல்லாஹ் அருள்புரிவான்…”*

*(அல்குர்ஆன் 9:71)*

*மேலும், அல்லாஹு தஆலா கூறுகிறான்: (நம்பிக்கையாளர்களே!)*

***உங்களில் ஒரு கூட்டத்தார் மனிதர்களைச் சிறந்ததின் பக்கம் அழைத்து, நன்மையைச் செய்யும்படி ஏவி, பாவமான காரியங்களில் இருந்து அவர்களை விலக்கிக் கொண்டும் இருக்கட்டும். இத்தகையவர்கள்தாம் வெற்றியாளர்கள். (அல்குர்ஆன் 3:104)***

நபி ﷺ அவர்கள் கூறுகிறார்கள்: உங்களில் யாராவது ஒரு தவறைக் கண்டால் அதை தனது கரத்தால் மாற்றட்டும். அது இயலாவிட்டால் தனது நாவால் மாற்றட்டும். அதுவும் இயலாவிட்டால் உள்ளத்தால் (வெறுத்து விலகி விடட்டும்). இது ஈமானின் குறைந்தபட்ச அளவாகும். (ஸஹீஹுல் புகாரி)

மேலும் நபி ﷺ கூறுகிறார்கள்: இறைநம்பிக்கையாளர்கள் தங்களிடையே நேசங்கொள்வதற்கும், கருணை காட்டுவதற்கும், அன்பு செலுத்துவதற்கும் உதாரணம் ஓர் உடலைப் போல! உடலில் ஏதேனும் ஓர் உறுப்பு பாதிக்கப்பட்டால் அனைத்து உறுப்புகளும் காய்ச்சல் மற்றும் தூக்கமின்மையால் முறையிடுகின்றன. (ஸஹீஹுல் புகாரி)

இன்று நமது சமுதாயத்தில் சிறியோர் முதல் பெரியோர் வரை பெரும்பாலோர் சரியான மார்க்க ஞானத்திற்கும் முறையான வழிகாட்டலுக்கும் அதிகம் தேவையுள்ளவர்களாக இருப்பதைப் பார்க்கிறோம். ஆகவே, மேற்கூறப்பட்ட குர்ஆன் வசனங்கள் மற்றும் நபி மொழிகளுக்கிணங்க சமுதாய சீர்திருத்தப் பணியில் ஈடுபடுவது மார்க்கக் கடமை என்பதை உணர்ந்து, அல்குர்ஆன் மற்றும் நபி வழியின் அடிப்படையில் அந்த உயர்ந்த பணியை நிறைவேற்றி இறைப்பொருத்தத்தை அடைய வேண்டும் என்ற தூய எண்ணத்தில் தொடங்கப்பட்டதுதான் **தாருல் ஹுதா.**

## பணிகளும் தொண்டுகளும்:

### அழைத்தல்:

இதுவே இஸ்லாமின் அடிப்படையாகும். உலகில் இப்பணி இறைத் தூதர்கள் வாயிலாக நிலை நிறுத்தப்பட்டது. இறுதித் தூதர் முஹம்மது (ஸல்) அவர்களுக்குப் பின் அவர்களுடைய சமுதாயத்தினர் அனைவரின் மீதும் இப்பணி கடமையாக்கப்பட்டது. மேன்மைமிகு குர்ஆனும், சிறப்புமிகு நபி மொழியும் இதன் அவசியத்தை நமக்கு வலியுறுத்துகின்றன. இதற்கிணங்க இயன்ற அளவு அனைத்து வழிகளிலும் மனித சமுதாயத்திற்கு இஸ்லாமை அறிமுகப்படுத்துவதும், அதன் உயர்வுகளை விளங்கச் செய்வதும் தாருல் ஹுதாவின் தலையாயப் பணியாகும்.

**கற்பித்தல்:**

இஸ்லாமை அறிய விரும்பும் சிறுவர்கள், வாலிபர்கள், முதியவர்கள், ஆண்கள், பெண்கள் என அனைவருக்கும் மேன்மைமிகு குர்ஆன், சிறப்புமிகு நபிமொழிகளை அவரவர் தகுதிக்கேற்ப கற்றுத் தருவது தாருல் ஹுதாவின் இரண்டாவது முக்கிய பணியாகும்.

**நூல் வெளியிடுதல்:**

மேன்மைமிகு குர்ஆன், சிறப்புமிகு நபிமொழி இவ்விரண்டையும் அடிப்படையாகக் கொண்டு சமுதாயப் பேரறிஞர்களால் அரபி மொழியில் எழுதப்பட்ட நூல்களை தமிழிலும் ஏனைய உலக மொழிகளிலும் மொழியாக்கம் செய்து, அந்நூற்களைச் சலுகை விலையில் மக்களுக்கு வழங்குவது தாருல் ஹுதாவின் மூன்றாவது சிறப்புப் பணியாகும்.

**உதவுதல்:**

அல்லாஹு தஆலாவே அனைவரின் தேவைகள், துன்பங்கள் அனைத்தையும் நிவர்த்தி செய்பவன். மிகப்பெரிய வள்ளலாகிய அல்லாஹ் தன் சார்பாக உலகில் ஏழை, எளியோர், நலிந்தோர் ஆகியோரின் துயர் துடைக்கும் வள்ளல் பெருமக்களுக்கு பெரும் வெகுமதிகளை ஈருலகிலும் வழங்குவதாக வாக்களித்துள்ளான். பிறர் துன்பங்களில் பங்கெடுப்பது, பிறர் தேவைகளை நிறைவேற்ற இயன்ற வரை உதவுவது முஸ்லிம்களுடைய அடிப்படைப் பண்புகளாகும். இவ்வுன்னதப் பணிக்காக **பைத்துல்மால்** (பொது நிதி) ஏற்பாடு செய்து இரக்கச் சிந்தையும், மார்க்கப்பற்றும் கொண்ட வள்ளல் பெருமக்களிடமிருந்து கடமையான, உபரியான தர்மங்களைப் பெற்று தேவையுடையோருக்கு உதவுதல் தாருல் ஹுதாவின் நான்காவது பணியாகும்.

மேற்கூறிய பணிகளைத் தவிர, இஸ்லாம் முழுமையாக ஒவ்வொருவரின் வாழ்விலும் வரவேண்டும் என்பதற்காகவும், மனிதச் சமுதாயங்களுக்குள் நல்லுறவும், அன்பும், கருணையும், சமூக புரிந்துணர்வும் ஏற்பட வேண்டும் என்பதற்காகவும் இயன்றவரை அல்லாஹ்வுக்காக தொண்டாற்ற வேண்டும் என்பது தாருல் ஹுதாவின் குறிக்கோளாகும்.

இப்பணிகள் அனைத்தும் தொய்வின்றி தொடர்ந்து சிறப்பாக, திறம்பட நடைபெறவும், அவற்றை அல்லாஹ் அங்கீகரிக்கவும் தாங்கள் துஆ செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்வதுடன் தங்களால் இயன்றவரை இப்பணிகளில் பங்கு பெறவும் அழைக்கிறோம்.

பேராற்றலுடைய அல்லாஹ்விடமே உதவி தேடுகிறோம்! அவனையே முன்னோக்கி நிற்கிறோம்!!

உங்களால் முடிந்த உதவிகளை அல்லாஹ்வின் பொருத்தம் நாடி தந்துதவுங்கள்.

***நன்மையான காரியங்களில் எவற்றை நீங்கள் உங்களுக்காக (மரணம் வருவதற்கு) முன்னதாகவே செய்து கொள்கிறீர்களோ அவற்றை அல்லாஹ்விடத்தில் மிகச் சிறந்ததாகவும், மகத்தான கூலியாகவும் பெற்றுக் கொள்வீர்கள். (அல்குர்ஆன் 73:20)***

அல்லாஹ் தங்களுக்கு நற்கூலி வழங்குவானாக!

--------------------



பேரருளாளன் பேரன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்

# முன்னுரை

அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும்! அவனை நாங்கள் புகழ்கிறோம்; அவனிடம் நாங்கள் உதவி தேடுகிறோம்; அவனிடம் நாங்கள் பாவமன்னிப்புத் தேடுகிறோம்; அவன் பக்கமே நாங்கள் திருந்தி திரும்புகிறோம்; எங்களின் ஆன்மாக்களின் தீமைகளை விட்டும் எங்களின் கெட்ட செயல்களை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுகிறோம்; அல்லாஹ் யாரை நேர்வழிப்படுத்தினானோ அவரை வழிகெடுப்பவர் யாரும் இல்லை. அவன் யாரை வழிகெடுத்தானோ அவரை நேர்வழிப்படுத்துபவர் யாரும் இல்லை. “நிச்சயமாக வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறவே இல்லை, அவன் தனித்தவன், அவனுக்கு இணை அறவே இல்லை” என்று சாட்சி கூறுகின்றேன். மேலும், நிச்சயமாக முஹம்மது அவர்கள் அவனுடைய அடியாரும் தூதரும் ஆவார்கள் என்று சாட்சி கூறுகின்றேன். அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தார் மற்றும் தோழர்கள், நன்மையில் அவர்களை பின்பற்றிய அனைவர் மீதும் அல்லாஹ்வுடைய ஸலாத்தும் சலாமும் நிலவட்டும்.

ஒவ்வொரு கலையிலும் அந்தக் கலையை சரியாக புரிவதற்கு உறுதுணையான அடிப்படைகளை முதலாவதாக கற்க வேண்டும். அந்த அடிப்படைகளைத்தான் அரபியில் உஸூல் என்று கூறுகின்றோம்.

மேலும், உஸூலை தெரிவதன் மூலமாகத்தான் உறுதியான, வலிமை மிக்க அஸ்திவாரத்தின் மீதும் தூண்களின் மீதும் கல்வியை நிலை நிறுத்த முடியும்.

முன்னோர்கள் கூறினார்கள்:

مَنْ حُرِمَ الْأُصُولَ حُرِمَ الْوُصُولَ

யார் அடிப்படைகளை இழந்தாரோ அவர் சேர்வதை இழந்தார்

அதாவது, யார் ஒரு கல்வியின் அடிப்படைகளை கற்கவில்லையோ அவர் அந்தக் கல்வியின் பலனை பெறமாட்டார்.

கல்விகளில் மிக சிறப்பு மிக்கது, மேன்மை மிக்கது தஃப்ஸீருல் குர்ஆன் -குர்ஆன் விரிவுரையின் கல்வியாகும். அல்லாஹ்வின் பேச்சாகிய குர்ஆனின் பொருள்களையும் கருத்துகளையும் இந்த கல்வியின் மூலமாகத்தான் நாம் தெளிவாக அறிய முடியும். ஹதீஸ் கல்வி மற்றும் ஃபிக்ஹ் கல்விக்கு உஸூல் -அடிப்படைகளை அறிஞர்கள் அமைத்தது போன்று இல்முத் தஃப்ஸீர் -குர்ஆன் விரிவுரை கல்விக்கும் அறிஞர்கள் அடிப்படைகளை அமைத்திருக்கிறார்கள்.

ஆகவே, இந்த கல்வி சம்பந்தமான சில அடிப்படைகளை, இமாம் முஹம்மது இப்னு ஸூஊத் பல்கலை கழகத்தில் கல்வி பயிலும் மாணவர்களுக்காக நான் எழுதியிருந்தேன். அவற்றை தனி ஒரு நூலாக வெளியிட வேண்டும் என்று சிலர் என்னிடம் கேட்டுக் கொண்டதை ஏற்றுக் கொண்டு, அந்த அடிப்படைகளை பின்வருகின்ற தலைப்புகளில் அமைத்து நூலாக வெளியிடுகின்றேன். அல்லாஹ் இதன் மூலம் மக்களுக்கு பலன் தர வேண்டும் என்று அல்லாஹ்விடம் வேண்டுகிறேன்.

அந்த தலைப்புகள் பின்வருமாறு...

## اَلْقُرْآنُ الْكَرِيْمُ - **கண்ணியமிகு குர்ஆன்**

1). நபி ﷺ அவர்கள் மீது குர்ஆன் எப்போது இறங்கியது? நபி ﷺ அவர்களிடம் குர்ஆனை கொண்டு வந்த வானவர் யார்?

2). குர்ஆனில் முதலாவதாக இறங்கிய வசனங்கள்.

3). குர்ஆன் இரு வகையாக இறங்குதல். ஒன்று, **سببي** ஸபபி -ஒரு காரணத்தை முன்னிட்டு இறங்குதல், மற்றொன்று **ابتدائي** இப்திதாயி -பொதுவாக இறங்குதல்.

4). குர்ஆன் (உடைய வசனங்கள் அல்லது அத்தியாயங்கள்) மக்கி இன்னும் மதனி என இரு வகைப்படும். குர்ஆன் பிரித்துப் பிரித்து, சிறிது சிறிதாக இறக்கப்பட்டதில் உள்ள தத்துவம். மற்றும் குர்ஆனின் வரிசைமுறை.

5). அபூ பக்ர் மற்றும் உஸ்மான் ﵄ அவர்களின் காலத்தில் குர்ஆன் ஒன்று சேர்க்கப்படுவது.

## اَلتَّفْسِيْرُ – தஃப்ஸீர்

1). அரபி மொழியில் மற்றும் கல்வி வழக்கத்தில் தஃப்ஸீர் என்பதன் பொருள். மற்றும் தஃப்ஸீர் உடைய சட்டத்தையும் அதனுடைய நோக்கத்தையும் விளக்குவது.

2). குர்ஆனுக்கு தஃப்ஸீர் செய்யும் போது முஸ்லிம்கள் பின்பற்ற கட்டாயமான வழிமுறைகள்.

3). தஃப்ஸீரில் -குர்ஆன் விரிவுரையில் மூல ஆதாரங்களாக, மேற்கோள் காட்டுவதற்காக எடுத்துக் கொள்ளப்படுபவை பின்வருமாறு:

### அ). كَلَامُ اللهِ அல்லாஹ்வுடைய பேச்சு.

அதாவது, குர்ஆனின் மூலம் குர்ஆனுக்கு தஃப்ஸீர் -விரிவுரை கூறுவது.

### ஆ). سُنَّةُ الرَّسُولِ ﷺ ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடைய சுன்னா.

ஏனெனில், ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள்தான் அல்லாஹ்விடமிருந்து

குர்ஆனை(யும் மார்க்கத்தையும்) நமக்கு எடுத்துரைத்தவர்கள். அல்லாஹ்வின் வேதத்திலுள்ள அல்லாஹ்வின் நோக்கத்தை(யும் கருத்தையும்) மக்களிலேயே அவர்கள்தான் நன்கறிந்தவர்கள்.

**இ). كَلَامُ الصَّحَابَةِ ஸஹாபா ﵃ - நபித் தோழர்களின் கூற்றுகள்.**

அவர்களிலும் குறிப்பாக, கல்விமான்கள் மற்றும் தஃப்ஸீரில் அதிக கவனமும் ஈடுபாடும் உள்ளவர்கள். ஏனெனில், குர்ஆன் அவர்களுடைய மொழியில்தான், அவர்களுடைய காலத்தில்தான் இறங்கியது. ஆகவே, அவர்கள் குர்ஆனின் விளக்கத்தை நம்மைவிட அதிகம் அறிந்தவர்கள்.

**ஈ). كَلَامُ كِبَارِ التَّابِعِينَ நபித்தோழர்களிடமிருந்து தஃப்ஸீரை கற்பதற்கு மிகுந்த முக்கியத்துவமும் கவனமும் செலுத்திய பெரிய தாபியீன் உடைய கூற்றுகள்.**

**உ). வசனத்தின் முன்பின் தொடருக்கு ஏற்ப மார்க்க ரீதியான அல்லது மொழி ரீதியான பொருள்களில் எது பொருத்தமானதோ அதைக் கொண்டு தஃப்ஸீர் செய்வது.**

மார்க்க ரீதியான பொருளுக்கும் மொழி ரீதியான பொருளுக்கும் இடையில் வேறுபாடுகள் இருந்தால் மார்க்க ரீதியான பொருளைத்தான் தஃப்ஸீரில் முன்னிலைப் படுத்தப்படும். ஆனால், மொழி ரீதியான பொருளை முன்னிலைப்படுத்துவதற்கு வலு சேர்க்கும் ஆதாரம் இருந்தால் மொழி ரீதியான பொருளைத்தான் தஃப்ஸீரில் எடுத்துக் கொள்ளப்படும்.

4). **تفسير مأثور** (ஸஹாபா அல்லது தாபியீன் வாயிலாக) அறிவிக்கப்பட்ட தஃப்ஸீர் -விளக்கங்களில் வருகின்ற கருத்து வேற்றுமைகளின் வகைகள்.

5). **تَرْجَمَةُ الْقُرْآن** குர்ஆனுக்கு தர்ஜமா -மொழிபெயர்ப்பு செய்வது, அதன் வரையறை, அதன் வகைகள், மற்றும் ஒவ்வொரு வகையின் சட்டம்.

6). குர்ஆனுக்கு விரிவுரை கூறுவதில் பிரபலமான ஐவரின் அறிமுகம்.

மூன்று நபித்தோழர்களின் அறிமுகம், மற்றும் இரண்டு தாபியீன் உடைய அறிமுகம்.

7). குர்ஆன் (வசனங்களில்) **محكم** முஹ்கம் -பொருள் உறுதி செய்யப்பட்டது, **متشابه** முதஷாபிஹ் -பொருள் தெரியாதது என இரு வகைகள் இருப்பது. முதஷாபிஹ் வசனங்களை அணுகுவதில் **الراسخون في العلم** கல்வியில் தேர்ச்சிமிக்கவர்கள் மற்றும் வழிகேடர்களின் நிலைப்பாடு.

## தஷாபுஹ் இரு வகைப்படும்:

ஒன்று, **حقيقي** ஹகீக்கி -உண்மையில் பொருள் உறுதி செய்யப்படாதவை. மற்றொன்று **نسبي** நிஸபி -சிலருக்கு பொருள் தெரியாதவை.

குர்ஆன் வசனங்களை முஹ்கம் மற்றும் முதஷாபிஹ் என்று இரு வகையாக இருப்பதில் உள்ள தத்துவம்.

8). **تَعَارُضْ** குர்ஆன் வசனங்களில் முரண்பாடுகள் இருப்பதாக தோன்றும் இடங்களும் அவற்றின் பதில்களும் சில உதாரணங்களுடன்.

9). **قَسَمْ** சத்தியம்: அதன் வரையறை, அதற்குப் பயன்படுத்தப்படுகின்ற பதங்கள், சத்தியம் செய்து கூறுவதால் ஏற்படும் பிரயோசனங்கள்.

10). **قَصَصْ** வரலாறுகள்: அவற்றின் வரையறை, அவற்றின் நோக்கம், அவை திரும்பத் திரும்ப கூறப்படுவதிலும் விரிவாக, அல்லது சுருக்கமாக, இன்னும் பலதரப்பட்ட வாக்கிய அமைப்புகளில் கூறப்படுவதிலும் உள்ள தத்துவம்.

11). **إِسْرَائِيلِيَّات** குர்ஆன் விரிவுரையில் நுழைக்கப்பட்ட

இஸ்ரவேலர்களின் அறிவிப்புகள், மற்றும் அவற்றை அங்கீகரிப்பதில் அறிஞர்களின் நிலைப்பாடு.

12). **ضمير** ழமீர்: பிரதிப் பெயர்ச்சொல் அதன் வரையறை, அதன் **مرجع** மர்ஜிஃ -மீளுமிடங்கள், ழமீராக கூற வேண்டிய இடத்தில் **إظهار** வெளிப்படுத்தி கூறுவது, மற்றும் அதன் பயன்கள்.

**التفات** இல்திஃபாத் -வாக்கியத்தில் ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்கு மாறுவது, மற்றும் அதன் பலன்கள்.

**ضمير الفصل** -ழமீருல் ஃபஸ்ல் மற்றும் அதன் பலன்கள்.

# اَلْقُرْآنُ الْكَرِيْمُ

## கண்ணியமிகு குர்ஆன்

குர்ஆன் என்பது قَرَأَ கரஅ என்ற சொல்லின் மஸ்தர் -வேர்ச் சொல்லாகும். அரபி மொழியில் قَرَأَ கரஅ என்றால் ஓதினான், படித்தான், அல்லது ஒன்று சேர்த்தான் என்று பொருளாகும்.

அரபி மொழியில் மஸ்தர் வேர்ச்சொல் மூன்று பொருள்களில் வரும். ஒன்று செய்தல், இரண்டாவது செய்யக் கூடியவன், மூன்றாவது செய்யப்படுபவன்.

ஆகவே, இங்கு குர்ஆன் என்ற பதத்தை ஓதினான் பொருளிலிருந்து எடுத்தால் **مقروء** ஓதப்படக்கூடிய ஒரு புத்தகம் என்ற பொருள் வரும். ஒன்று சேர்த்தான் என்ற பொருளிலிருந்து எடுத்தால் மறைவான செய்திகளையும் இறை சட்டங்களையும் தனக்குள் ஒன்று சேர்த்து வைத்திருக்கக்கூடிய ஒரு புத்தகம் என்ற பொருளாகும்.

மார்க்கத்தில் குர்ஆன் என்றால், அல்லாஹ் தனது ரஸூல் முஹம்மது ﷺ அவர்கள் மீது அல்லாஹ் இறக்கிய அல்லாஹ்வுடைய பேச்சாகும். இதனுடைய ஆரம்பம் அல்ஃபாத்திஹா என்ற அத்தியாயம் ஆகும். இதனுடைய முடிவு அன்னாஸ் என்ற அத்தியாயம் ஆகும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

إِنَّا نَحنُ نَزَّلنَا عَلَيكَ القُرءَانَ تَنزِيلا

(நபியே!) நிச்சயமாக நாம்தான் இந்த குர்ஆனைச் சிறிது சிறிதாக உம்மீது இறக்கி வைக்கிறோம். (அல்குர்ஆன் 76 : 23)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

إِنَّا أَنْزَلْنَاهُ قُرْآنًا عَرَبِيًّا لَعَلَّكُمْ تَعْقِلُونَ

நீங்கள் நன்கறிவதற்காக இதை அரபி மொழியிலுள்ள குர்ஆனாக நிச்சயமாக நாமே இறக்கி வைத்தோம். (அல்குர்ஆன் 12 : 2)

மகத்துவமிக்க குர்ஆனில் கூட்டுதல், குறைத்தல், மாற்றுதல் ஆகிய எதுவும் நிகழ முடியாதவாறு அல்லாஹு தஆலா அதை பாதுகாத்திருக்கின்றான். மேலும், குர்ஆனை பாதுகாப்பதற்குரிய பொறுப்பை அல்லாஹ்வே ஏற்று இருக்கின்றான்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

إِنَّا نَحْنُ نَزَّلْنَا الذِّكْرَ وَإِنَّا لَهُ لَحَافِظُونَ

நிச்சயமாக நாம்தான் இந்த திக்ரை (குர்ஆனை) இறக்கி வைத்தோம். ஆகவே, (அதில் எத்தகைய மாறுதலும் அழிவும் ஏற்படாதவாறு) நிச்சயமாக நாமே அதை பாதுகாப்போம். (அல்குர்ஆன் 15 : 9)

ஆகவேதான், குர்ஆன் இறக்கப்பட்டதிலிருந்து பல நூறு ஆண்டுகள் உருண்டோடி விட்டன. இந்த குர்ஆனின் எதிரிகளில் யாரும் மாற்றம் செய்வதற்கு அல்லது அதிகப்படுத்துவதற்கு அல்லது குறைப்பதற்கு முயற்சி செய்தால் அவர்களின் அந்த முயற்சியை அல்லாஹ் பகிரங்கப்படுத்தி, அவர்களை கேவலப்படுத்தி விடுகிறான்.

அல்லாஹு தஆலா பல அழகிய பெயர்களைக் கொண்டும் உயர்வான வர்ணிப்புகளைக் கொண்டும் குர்ஆனை புகழ்ந்து இருக்கின்றான்.

இவ்வாறு புகழ்ந்திருப்பது குர்ஆனின் மகத்துவத்தையும் அதன் பரகத்துகளையும் அது எத்தகைய நல்ல தாக்கங்களை உடையது என்பதையும் நமக்கு உணர்த்துகிறது. மேலும், எல்லா

வேதங்களுக்கும் அதிபதியாக, நீதிபதியாக குர்ஆன் இருக்கின்றது என்பதையும் (நமக்கு) உணர்த்துகிறது.[1]

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَلَقَدْ آتَيْنَاكَ سَبْعًا مِنَ الْمَثَانِي وَالْقُرْآنَ الْعَظِيمَ

(நபியே!) நிச்சயமாக நாம் உமக்கு திரும்பத் திரும்ப ஓதப்படக்கூடிய ஏழு வசனங்களை (உடைய 'அல்ஹம்து' என்னும் அத்தியாயத்தை)யும், இந்த மகத்தான (முழு) குர்ஆனையும் அளித்திருக்கிறோம். (அல்குர்ஆன் 15 : 87)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

ق وَالْقُرْآنِ الْمَجِيدِ

காஃப். (நபியே!) மிக்க மேலான இந்த குர்ஆன் மீது சத்தியமாக! (அல்குர்ஆன் 50 : 1)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

كِتَابٌ أَنْزَلْنَاهُ إِلَيْكَ مُبَارَكٌ لِيَدَّبَّرُوا آيَاتِهِ وَلِيَتَذَكَّرَ أُولُو الْأَلْبَابِ

(நபியே! இது) நற்பாக்கியம் மிகுந்த வேதமாகும். இதை நாம் உமக்கு இறக்கினோம், அவர்கள் ஆழ்ந்தாராய வேண்டும் என்பதற்காகவும், அறிவுடையவர்கள் (இதன் மூலம்) நல்லுணர்ச்சி பெற வேண்டும் என்பதற்காகவும். (அல்குர்ஆன் 38 : 29)

---

1. அதாவது, முந்திய வேதங்களில் எது சரியானது, எது தவறானது, எது உண்மை, எது பொய் என்பதை இந்த குர்ஆன் நமக்கு தெளிவுப் படுத்துகின்றது. முந்திய வேதங்களில் அல்லாஹ் இறக்கிய உண்மைகள் இந்த குர்ஆனில் அழகிய முறையில் கூறப்பட்டுவிடுவதால் இனி முந்திய வேதங்களை தேடிப் போகவேண்டிய அவசியமில்லை. அந்த வகையிலும் முந்திய வேதங்களை இந்தக் குர்ஆன் பாதுகாத்து விடுகின்றது. மேலும், குர்ஆனில் கூறப்பட்டுள்ள உண்மைகளுக்கு முரணாக எது முந்திய வேதங்களில் இருக்குமோ அது மனித கரங்களால் அந்த முந்திய வேதங்களில் இடை சேர்க்கை செய்யப்பட்டவை என்பதை தீர்ப்பளிக்கக் கூடியதாக இந்த குர்ஆன் இருக்கின்றது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَهٰذَا كِتَابٌ أَنْزَلْنَاهُ مُبَارَكٌ فَاتَّبِعُوهُ وَاتَّقُوا لَعَلَّكُمْ تُرْحَمُونَ

(மனிதர்களே!) இது நற்பாக்கியமிகுந்த வேதமாகும். இதை நாமே இறக்கி வைத்தோம். ஆகவே, இதையே நீங்கள் பின்பற்றுங்கள்; அல்லாஹ்வை பயந்து (பாவத்திலிருந்து விலகிக்) கொள்ளுங்கள், நீங்கள் கருணை காட்டப்பட வேண்டும் என்பதற்காக.

(அல்குர்ஆன் 6 : 155)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

إِنَّهُ لَقُرْآنٌ كَرِيمٌ

நிச்சயமாக இது மிக்க கண்ணியமுள்ள குர்ஆனாகும்.

(அல்குர்ஆன் 56 : 77)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

إِنَّ هٰذَا الْقُرْآنَ يَهْدِي لِلَّتِي هِيَ أَقْوَمُ

நிச்சயமாக இந்த குர்ஆன் மிக நேரான, நீதமான பாதைக்கு வழி காட்டுகிறது. (அல்குர்ஆன் 17 : 9)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

لَوْ أَنْزَلْنَا هٰذَا الْقُرْآنَ عَلَى جَبَلٍ لَرَأَيْتَهُ خَاشِعًا مُتَصَدِّعًا مِنْ خَشْيَةِ اللّٰهِ وَتِلْكَ الْأَمْثَالُ نَضْرِبُهَا لِلنَّاسِ لَعَلَّهُمْ يَتَفَكَّرُونَ

(நபியே!) ஒரு மலையின் மீது நாம் இந்த குர்ஆனை இறக்கி வைத்திருந்தால், அது அல்லாஹ்வின் பயத்தால் நடுங்கி வெடித்துப் பிளந்து போவதை நிச்சயமாக நீர் பார்த்திருப்பீர். மனிதர்கள் சிந்திப்பதற்காக இவ்வுதாரணங்களை நாம் விவரிக்கின்றோம்.

(அல்குர்ஆன் 59 : 21)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَإِذَا مَا أُنْزِلَتْ سُورَةٌ فَمِنْهُمْ مَنْ يَقُولُ أَيُّكُمْ زَادَتْهُ هَذِهِ إِيمَانًا فَأَمَّا الَّذِينَ آمَنُوا فَزَادَتْهُمْ إِيمَانًا وَهُمْ يَسْتَبْشِرُونَ ○ وَأَمَّا الَّذِينَ فِي قُلُوبِهِمْ مَرَضٌ فَزَادَتْهُمْ رِجْسًا إِلَى رِجْسِهِمْ وَمَاتُوا وَهُمْ كَافِرُونَ ○

ஒரு (புதிய) அத்தியாயம் அருளப்பட்டால் "உங்களில் யாருடைய நம்பிக்கையை இது அதிகப்படுத்தியது?" என்று கேட்கக் கூடியவர்களும் அவர்களில் பலர் இருக்கின்றனர். மெய்யாகவே எவர்கள் நம்பிக்கைக் கொண்டிருக்கிறார்களோ அவர்களுடைய நம்பிக்கையை (இது) அதிகப்படுத்தியே விட்டது. இதைப் பற்றி அவர்கள் மகிழ்ச்சியடைகின்றனர். ஆனால், எவர்களுடைய உள்ளங்களில் நோய் இருக்கிறதோ அவர்களுடைய (உள்ளங்களிலுள்ள) அசுத்தத்துடன் மேலும் அசுத்தத்தையே (அது) அதிகரித்து விட்டது! அவர்கள் நிராகரித்தவர்களாகவே இறந்தும் விட்டனர். (அல்குர்ஆன் 9 : 124, 125)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَأُوحِيَ إِلَيَّ هَٰذَا الْقُرْآنُ لِأُنْذِرَكُمْ بِهِ وَمَنْ بَلَغَ

இந்தக் குர்ஆனைக் கொண்டு உங்களுக்கும், (அது) எட்டியவர்களுக்கும் நான் அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதற்காகவே இது எனக்கு வஹ்யி மூலம் அறிவிக்கப்பட்டுள்ளது.

(அல்குர்ஆன் 6 : 19)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

فَلَا تُطِعِ الْكَافِرِينَ وَجَاهِدْهُمْ بِهِ جِهَادًا كَبِيرًا

ஆகவே, (நபியே!) நீர் இந்த நன்றி கெட்டவர்களுக்கு கட்டுப்படாதீர்.

இந்த குர்ஆனை (ஆதாரமாக) கொண்டு நீர் அவர்களிடத்தில் பெரும் போராக போராடுவீராக! (அல்குர்ஆன் 25 : 52)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَيَوْمَ نَبْعَثُ فِي كُلِّ أُمَّةٍ شَهِيدًا عَلَيْهِمْ مِنْ أَنْفُسِهِمْ وَجِئْنَا بِكَ شَهِيدًا عَلَى هَؤُلَاءِ وَنَزَّلْنَا عَلَيْكَ الْكِتَابَ تِبْيَانًا لِكُلِّ شَيْءٍ وَهُدًى وَرَحْمَةً وَبُشْرَى لِلْمُسْلِمِينَ

(நபியே!) ஒவ்வொரு விஷயத்தை தெளிவாக விவரிக்கக் கூடியதாகவும், நேரான வழியாகவும், அருளாகவும் (எனக்கு முற்றிலும் பணிந்து கட்டுப்படுகின்ற) முஸ்லிம்களுக்கு ஒரு நற்செய்தியாகவும் இருக்கின்ற இந்த வேதத்தை நாம் உம்மீது இறக்கினோம். (அல்குர்ஆன் 16 : 89)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَأَنْزَلْنَا إِلَيْكَ الْكِتَابَ بِالْحَقِّ مُصَدِّقًا لِمَا بَيْنَ يَدَيْهِ مِنَ الْكِتَابِ وَمُهَيْمِنًا عَلَيْهِ فَاحْكُمْ بَيْنَهُمْ بِمَا أَنْزَلَ اللَّهُ

(நபியே! முற்றிலும்) உண்மையைக் கொண்டுள்ள இவ்வேதத்தை நாமே உம்மீது இறக்கினோம். இது தனக்கு முன்னுள்ள (மற்ற) வேதங்களையும் உண்மையாக்கி வைக்கிறது. அவற்றைப் பாதுகாப்பதாகவும் இருக்கிறது. ஆகவே, (நபியே!) நீர் அல்லாஹ் (உமக்கு) இறக்கிய (இ)தைக்கொண்டே அவர்களுக்கிடையில் தீர்ப்பளிப்பீராக. (அல்குர்ஆன் 5 : 48)

## اَلْقُرْآنُ مَصْدَرُ الشَّرِيعَةِ ஷரீஆவின் அடிப்படை குர்ஆன்

முஹம்மது ﷺ அவர்கள் மக்களுக்கு கொண்டு வந்த இஸ்லாமிய

ஷரீஅத் -மார்க்க சட்டங்களின் அடிப்படை கண்ணியமிகு குர்ஆன் ஆகும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

تَبَارَكَ الَّذِي نَزَّلَ الْفُرْقَانَ عَلَىٰ عَبْدِهِ لِيَكُونَ لِلْعَالَمِينَ نَذِيرًا

(நன்மை தீமைகளைத் தெளிவாகப்) பிரித்தறிவிக்கும் இவ்வேதத்தை தன் அடியார் (முஹம்மது) மீது இறக்கியவன் மிக்க பாக்கியமுடையவன். இது உலகத்தார் அனைவரையும் அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதாக இருக்கிறது. (அல்குர்ஆன் 25 : 1)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

كِتَابٌ أَنْزَلْنَاهُ إِلَيْكَ لِتُخْرِجَ النَّاسَ مِنَ الظُّلُمَاتِ إِلَى النُّورِ بِإِذْنِ رَبِّهِمْ إِلَىٰ صِرَاطِ الْعَزِيزِ الْحَمِيدِ ○ اللَّهِ الَّذِي لَهُ مَا فِي السَّمَاوَاتِ وَمَا فِي الْأَرْضِ وَوَيْلٌ لِلْكَافِرِينَ مِنْ عَذَابٍ شَدِيدٍ

(நபியே! இது) வேத நூல். இதை நாமே உம்மீது இறக்கியிருக்கிறோம். (இதன் மூலம்) மனிதர்களை அவர்கள் இறைவனின் கட்டளைப்படி இருள்களிலிருந்து வெளியேற்றி ஒளியின் பக்கம் நீர் கொண்டு வருவீராக! (அந்த ஒளியோ) மிக்க புகழுக்குரிய (அல்லாஹ்வாகிய) அனைவரையும் மிகைத்தவனின் நேரான வழியாகும். அந்த அல்லாஹ் (எத்தகையவனென்றால்) வானங்களிலும் பூமியிலும் இருப்பவை அனைத்தும் அவனுக்குச் சொந்தமானவையே! ஆகவே, (இதை) நிராகரிப்பவர்களுக்கு வந்தடையும் கடினமான வேதனையின் காரணமாக (அவர்களுக்குப்) பெரும் கேடுதான்.

(அல்குர்ஆன் 14 : 1,2)

## اَلسُّنَّةُ مَصْدَرُ التَّشْرِيْعِ **சுன்னாவின் அடிப்படை ஷரீஆ**

மேலும் நபி ﷺ அவர்களுடைய சுன்னா -என்ற வழிமுறையும்

மார்க்க சட்டங்களின் அடிப்படை என்பதை குர்ஆன் பல வசனங்களில் உறுதி செய்திருக்கிறது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

مَنْ يُطِعِ الرَّسُولَ فَقَدْ أَطَاعَ اللّٰهَ وَمَنْ تَوَلَّى فَمَا أَرْسَلْنَاكَ عَلَيْهِمْ حَفِيظًا

எவர் (அல்லாஹ்வுடைய) தூதருக்கு (முற்றிலும்) கட்டுப்பட்டு நடக்கிறாரோ அவர்தான் நிச்சயமாக அல்லாஹ்வுக்கு கட்டுப்பட்டார். ஆகவே, (நபியே! உம்மை) எவர்களும் புறக்கணித்தால் (அதற்காக நீர் கவலைப்பட வேண்டாம்.) அவர்களை கண்காணிப்பவராக உம்மை நாம் அனுப்பவில்லை. (அல்குர்ஆன் 4 : 80)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَمَا كَانَ لِمُؤْمِنٍ وَلَا مُؤْمِنَةٍ إِذَا قَضَى اللّٰهُ وَرَسُولُهُ أَمْرًا أَنْ يَكُونَ لَهُمُ الْخِيَرَةُ مِنْ أَمْرِهِمْ وَمَنْ يَعْصِ اللّٰهَ وَرَسُولَهُ فَقَدْ ضَلَّ ضَلَالًا مُبِينًا

அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் ஒரு விஷயத்தைப் பற்றிக் கட்டளையிட்ட பின்னர், அவ்விஷயத்தில் (அதை விட்டு) வேறு அபிப்பிராயம் கொள்வதற்கு நம்பிக்கையாளரான எந்த ஆணுக்கும் பெண்ணுக்கும் உரிமையில்லை. (இவ்விஷயத்தில்) அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் எவரேனும் மாறு செய்தால், நிச்சயமாக அவர் பகிரங்கமான வழிகேட்டிலேயே இருக்கிறார். (அல்குர்ஆன் 33 : 36)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَمَا آتَاكُمُ الرَّسُولُ فَخُذُوهُ وَمَا نَهَاكُمْ عَنْهُ فَانْتَهُوا

ஆகவே, நம் தூதர் உங்களுக்குக் கொடுத்ததை நீங்கள் (மனமுவந்து)

எடுத்துக் கொள்ளுங்கள். அவர் எதை விட்டும் உங்களைத் தடுத்தாரோ, அதைவிட்டு நீங்கள் விலகிக் கொள்ளுங்கள்.

(அல்குர்ஆன் 59 : 7)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

قُلْ إِنْ كُنْتُمْ تُحِبُّونَ اللّٰهَ فَاتَّبِعُونِي يُحْبِبْكُمُ اللّٰهُ وَيَغْفِرْ لَكُمْ ذُنُوبَكُمْ وَاللّٰهُ غَفُورٌ رَحِيمٌ

(நபியே! மனிதர்களை நோக்கி) கூறுவீராக: “நீங்கள் மெய்யாகவே அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள். உங்களை அல்லாஹ் நேசிப்பான். உங்கள் பாவங்களையும் அவன் மன்னித்து விடுவான். அல்லாஹ் மிக அதிகம் மன்னிப்பவன், பெரும் கருணையாளன் ஆவான்.

(அல்குர்ஆன் 3 : 31)

----------------------

பாடம் 1 

# نُزُولُ الْقُرْآنُ

## குர்ஆன் இறங்குதல்

அல்குர்ஆன் முதன் முதலாக ரமழான் மாதத்தில் ليلة القدر கத்ர் என்ற இரவில் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் மீது இறங்கியது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

إِنَّا أَنْزَلْنَاهُ فِي لَيْلَةِ الْقَدْرِ

நிச்சயமாக நாம் இந்த குர்ஆனை (மிக்க கண்ணியமுள்ள) லைலதுல் கத்ர் என்னும் ஓர் இரவில் (முதலாவதாக) இறக்கி வைத்தோம்.

(அல்குர்ஆன் 97 : 1)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

إِنَّا أَنْزَلْنَاهُ فِي لَيْلَةٍ مُبَارَكَةٍ إِنَّا كُنَّا مُنْذِرِينَ○ فِيهَا يُفْرَقُ كُلُّ أَمْرٍ حَكِيمٍ

நிச்சயமாக இதை மிக்க பாக்கியமுள்ள ('லைலத்துல் கத்ரு' என்ற) ஓர் இரவில் (முதல் முறையாக) இறக்கி வைத்தோம். நிச்சயமாக நாம் (இதன் மூலம்) அச்சமூட்டி எச்சரிக்கை செய்கிறோம். உறுதியான எல்லா காரியங்களும் அதில்தான் நம் கட்டளையின்படி (தீர்மானிக்கப்பட்டு) பிரித்துக் கொடுக்கப்படுகின்றன.

(அல்குர்ஆன் 44 : 3, 4)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

شَهْرُ رَمَضَانَ الَّذِي أُنْزِلَ فِيهِ الْقُرْآنُ هُدًى لِلنَّاسِ وَبَيِّنَاتٍ مِنَ الْهُدَى وَالْفُرْقَانِ

ரமழான் மாதம் எத்தகைய (மகத்துவமுடைய)து என்றால் அதில்தான் மனிதர்களுக்கு நேர்வழி காட்டும் திருகுர்ஆன் இறக்கப்பட்டது. அது (நன்மை, தீமையைப்) பிரித்தறிவித்து, நேரான வழியைத் தெளிவாக்கக் கூடிய வசனங்களை உடையதாகவும் இருக்கிறது.
(அல்குர்ஆன் 2 : 185)

குர்ஆன் முதன் முதலாக நபி ﷺ அவர்கள் மீது இறங்கிய போது அவர்களின் வயது நாற்பதாக இருந்தது. இதுதான் அறிஞர்களிடம் பிரபலமான கூற்றாகும். நபித்தோழர் இப்னு அப்பாஸ் رضي الله عنه மற்றும் அதா, ஸஈது இப்னு முசய்யப் رحمهم الله போன்ற தாபியின் இந்த கருத்தை கூறுகிறார்கள். இந்த வயதில்தான் முழுமையான அறிவு கிடைப்பதுடன் நல்ல பக்குவமும் ஆழ்ந்த அனுபவமும் உண்டாகிறது.

அல்லாஹு தஆலா நபி ﷺ அவர்கள் மீது ஜிப்ரீல் عليه السلام என்ற வானவர் வழியாக குர்ஆனை இறக்கினான். அவர் அல்லாஹ்விடம் அதிகம் நெருக்கமுடைய கண்ணியமான வானவர்களில் ஒருவராவார்.

அல்லாஹு தஆலா குர்ஆனைப் பற்றி கூறுகின்றான்:

وَإِنَّ رَبَّكَ لَهُوَ الْعَزِيزُ الرَّحِيمُ ○ وَإِنَّهُ لَتَنْزِيلُ رَبِّ الْعَالَمِينَ ○ نَزَلَ بِهِ الرُّوحُ الْأَمِينُ ○ عَلَى قَلْبِكَ لِتَكُونَ مِنَ الْمُنْذِرِينَ ○ بِلِسَانٍ عَرَبِيٍّ مُبِينٍ ○

(நபியே!) நிச்சயமாக (குர்ஆன் ஷரீஃப் என்னும்) இது அகிலத்தாரின் இறைவனால்தான் அருளப்பட்டது. (இறை கட்டளைப் பிரகாரம்) ரூஹுல் அமீன் (நம்பிக்கைக்குரிய உயிர் என்னும் ஜிப்ரயீல்)

இதை உமது உள்ளத்தில் இறக்கி வைத்தார். (மனிதர்களுக்கு) நீர் அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதற்காக, தெளிவான அரபி மொழியில் (இது இறக்கப்பட்டுள்ளது). (அல்குர்ஆன் 26 : 191-195)

ஜிப்ரயீல் அலைஹிஸ் ஸலாம் அவர்களிடம் மிக உயர்ந்த தன்மைகளும் கண்ணியமிக்க பண்புகளும் இருக்கின்றன. அல்லாஹ், அவர்களுக்கு வலிமையையும் அழகையும் தூய்மையையும் வழங்கி இருக்கின்றான். மேலும், மலக்குகளுக்கு மத்தியில் மதிப்பையும் உயர்ந்த தகுதியையும் வழங்கி இருக்கின்றான். ஆகையால், அல்லாஹ்விற்கும் அவனது தூதர்களுக்கும் நடுவில் தூதராக இருப்பதற்கு அவர்களே மிக தகுதி பெற்றவர்களாக இருந்தார்கள்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

إِنَّهُ لَقَوْلُ رَسُولٍ كَرِيمٍ ○ ذِي قُوَّةٍ عِنْدَ ذِي الْعَرْشِ مَكِينٍ ○ مُطَاعٍ ثَمَّ أَمِينٍ ○

நிச்சயமாக (திருகுர்ஆன் என்னும்) இது மிக்க கண்ணியமுள்ள (ஜிப்ரயீல் என்னும்) ஒரு (வானவத்) தூதர் மூலம் கூறப்பட்டதாகும். அவர் மிக்க பலவான். அவருக்கு அர்ஷுடையவனிடத்தில் பெரும் பதவியுண்டு அவர் அவ்விடத்தில் (வானவர்களின்) தலைவர்; மிக்க நம்பிக்கையுடையவர் ஆவார். (அல்குர்ஆன் 81 : 19-21)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

عَلَّمَهُ شَدِيدُ الْقُوَى ○ ذُو مِرَّةٍ فَاسْتَوَى ○ وَهُوَ بِالْأُفُقِ الْأَعْلَى○

உறுதிமிக்க ஆற்றல்களுடைய, அழகும் ஆரோக்கியமும் உடையவர் (-ஜிப்ரீல்) இதை அவருக்குக் கற்றுக் கொடுக்கிறார். அவரும் மிக உயர்ந்த ஆகாயக் கோடியில் தோன்றினார்கள்.

(அல்குர்ஆன் 53 : 5-7)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

قُلْ نَزَّلَهُ رُوحُ الْقُدُسِ مِنْ رَبِّكَ بِالْحَقِّ لِيُثَبِّتَ الَّذِينَ آمَنُوا وَهُدًى وَبُشْرَى لِلْمُسْلِمِينَ

(நபியே! நீர் கூறுவீராக: மெய்யாகவே இதை உமது இறைவனிடமிருந்து ரூஹுல் குத்ஸ் (-ஜிப்ரீல்)தான் இறக்கி வைத்தார், ஏனெனில், நம்பிக்கைக் கொண்டவர்களை உறுதிப்படுத்துவதற்காகவும், இது (எல்லா மக்களுக்கும்) நேர்வழி காட்டியாக இருப்பதற்காகவும், (இதை பின்பற்றி நடக்கின்ற) முஸ்லிம்களுக்கு நற்செய்தி கூறக்கூடியதாக இருப்பதற்காகவும். (அல்குர்ஆன் 16 : 102)

மேற்கூறப்பட்ட வசனங்களில் அல்லாஹ்விடமிருந்து குர்ஆனை கொண்டு வந்த ஜிப்ரீல் ﵇ அவர்களின் தன்மைகளைப் பற்றி அல்லாஹ் மிகத் தெளிவாக வர்ணிக்கின்றான். அந்த வர்ணனைகள் குர்ஆனின் மகத்துவத்தையும் குர்ஆனுக்கு அல்லாஹ் கொடுத்த தனி கவனிப்பையும் முக்கியத்துவத்தையும் நமக்கு உணர்த்துகின்றன. ஏனெனில், மிகவும் மகத்துவ மிக்க ஒருவரை மிகப் பெரிய காரியங்களுக்கே தவிர அனுப்பப்படாது.

----------------------




## أَوَّلُ مَا نَزَلَ مِنَ الْقُرْآنِ

# முதலாவதாக இறங்கிய குர்ஆன் வசனங்கள்

குர்ஆனில் முதன்முதலாக இறங்கியவை அல்அலக் என்ற அத்தியாயத்தின் முதல் ஐந்து வசனங்களாகும். இதுதான் உறுதியான கூற்றாகும்.

அந்த வசனங்கள்:

اقْرَأْ بِاسْمِ رَبِّكَ الَّذِي خَلَقَ ○ خَلَقَ الْإِنْسَانَ مِنْ عَلَقٍ ○ اقْرَأْ وَرَبُّكَ الْأَكْرَمُ ○ الَّذِي عَلَّمَ بِالْقَلَمِ ○ عَلَّمَ الْإِنْسَانَ مَا لَمْ يَعْلَمْ ○

(நபியே! அனைத்தையும்) படைத்த உமது இறைவனின் பெயரால் (உங்களுக்கு வஹ்யி அறிவிக்கப்படும் இந்த குர்ஆனை) ஓதி வருவீராக! அவனே மனிதனை இரத்தக் கட்டியிலிருந்து படைக்கிறான். (நபியே! மேலும் இந்த குர்ஆனை தொடர்ந்து) ஓதி வருவீராக! உமது இறைவன் மாபெரும் கொடையாளி! அவன்தான் எழுதுகோலைக் கொண்டு (மனிதனுக்கு எழுதக்) கற்றுக் கொடுத்தான். (அதன் மூலம்) மனிதனுக்கு அவன் அறியாதவற்றை கற்றுக் கொடுக்கிறான். (அல்குர்ஆன் 96 : 1-5)

இதற்கு பிறகு வஹ்யி இறங்குவதில் சில காலம் இடைவெளி ஏற்பட்டது. பிறகு, அல்முத்தஸ்ஸிர் அத்தியாயத்தின் முதல் ஐந்து வசனங்கள் இறங்கின.

அந்த வசனங்கள்:

يَا أَيُّهَا الْمُدَّثِّرُ ○ قُمْ فَأَنْذِرْ ○ وَرَبَّكَ فَكَبِّرْ ○ وَثِيَابَكَ فَطَهِّرْ ○ وَالرُّجْزَ فَاهْجُرْ ○

(நபியே! வஹ்யின் அதிர்ச்சியால்) போர்வை போர்த்திக் கொண்டிருப்பவரே! நீர் எழுந்து நின்று (மனிதர்களுக்கு) அச்சமூட்டி எச்சரிக்கை செய்வீராக; உமது இறைவனைப் பெருமைப்படுத்துவீராக! உமது ஆடையைப் பரிசுத்தமாக்கி வைத்துக் கொள்வீராக! அசுத்தங்களை வெறுத்து விடுவீராக! (அல்குர்ஆன் 74 : 1-5)

இது குறித்து புகாரி, முஸ்லிம் ﵏ அவர்கள் தங்கள் நூல்களில் அறிவிப்பதாவது:

عَنْ عَائِشَةَ ﵂ أُمِّ الْمُؤْمِنِينَ أَنَّهَا قَالَتْ أَوَّلُ مَا بُدِئَ بِهِ رَسُولُ اللّٰهِ ﷺ مِنَ الوَحْيِ الرُّؤْيَا الصَّالِحَةُ فِي النَّوْمِ فَكَانَ لاَ يَرَى رُؤْيَا إِلَّا جَاءَتْ مِثْلَ فَلَقِ الصُّبْحِ ثُمَّ حُبِّبَ إِلَيْهِ الخَلاَءُ وَكَانَ يَخْلُو بِغَارِ حِرَاءٍ فَيَتَحَنَّثُ فِيهِ - وَهُوَ التَّعَبُّدُ - اللَّيَالِيَ ذَوَاتِ العَدَدِ قَبْلَ أَنْ يَنْزِعَ إِلَى أَهْلِهِ وَيَتَزَوَّدُ لِذَلِكَ ثُمَّ يَرْجِعُ إِلَى خَدِيجَةَ فَيَتَزَوَّدُ لِمِثْلِهَا حَتَّى جَاءَهُ الحَقُّ وَهُوَ فِي غَارِ حِرَاءٍ فَجَاءَهُ المَلَكُ فَقَالَ اقْرَأْ قَالَ مَا أَنَا بِقَارِئٍ قَالَ فَأَخَذَنِي فَغَطَّنِي حَتَّى بَلَغَ مِنِّي الجَهْدَ ثُمَّ أَرْسَلَنِي فَقَالَ اقْرَأْ قُلْتُ مَا أَنَا بِقَارِئٍ فَأَخَذَنِي فَغَطَّنِي الثَّانِيَةَ حَتَّى بَلَغَ مِنِّي الجَهْدَ ثُمَّ أَرْسَلَنِي فَقَالَ اقْرَأْ فَقُلْتُ مَا أَنَا بِقَارِئٍ فَأَخَذَنِي فَغَطَّنِي الثَّالِثَةَ ثُمَّ أَرْسَلَنِي فَقَالَ اقْرَأْ بِاسْمِ رَبِّكَ الَّذِي خَلَقَ. خَلَقَ الإِنْسَانَ مِنْ عَلَقٍ. اقْرَأْ

وَرَبُّكَ الأَكْرَمُ [العلق: ٢] فَرَجَعَ بِهَا رَسُولُ اللهِ ﷺ يَرْجُفُ فُؤَادُهُ فَدَخَلَ عَلَى خَدِيجَةَ بِنْتِ خُوَيْلِدٍ رضي الله عنها فَقَالَ زَمِّلُونِي زَمِّلُونِي فَزَمَّلُوهُ حَتَّى ذَهَبَ عَنْهُ الرَّوْعُ فَقَالَ لِخَدِيجَةَ وَأَخْبَرَهَا الخَبَرَ لَقَدْ خَشِيتُ عَلَى نَفْسِي فَقَالَتْ خَدِيجَةُ كَلَّا وَاللهِ مَا يُخْزِيكَ اللهُ أَبَدًا إِنَّكَ لَتَصِلُ الرَّحِمَ وَتَحْمِلُ الكَلَّ وَتَكْسِبُ المَعْدُومَ وَتَقْرِي الضَّيْفَ وَتُعِينُ عَلَى نَوَائِبِ الحَقِّ، فَانْطَلَقَتْ بِهِ خَدِيجَةُ حَتَّى أَتَتْ بِهِ وَرَقَةَ بْنَ نَوْفَلِ بْنِ أَسَدِ بْنِ عَبْدِ العُزَّى ابْنَ عَمِّ خَدِيجَةَ وَكَانَ امْرَأً تَنَصَّرَ فِي الجَاهِلِيَّةِ وَكَانَ يَكْتُبُ الكِتَابَ العِبْرَانِيَّ فَيَكْتُبُ مِنَ الإِنْجِيلِ بِالعِبْرَانِيَّةِ مَا شَاءَ اللهُ أَنْ يَكْتُبَ وَكَانَ شَيْخًا كَبِيرًا قَدْ عَمِيَ فَقَالَتْ لَهُ خَدِيجَةُ يَا ابْنَ عَمِّ اسْمَعْ مِنَ ابْنِ أَخِيكَ فَقَالَ لَهُ وَرَقَةُ يَا ابْنَ أَخِي مَاذَا تَرَى؟ فَأَخْبَرَهُ رَسُولُ اللهِ ﷺ خَبَرَ مَا رَأَى فَقَالَ لَهُ وَرَقَةُ هَذَا النَّامُوسُ الَّذِي نَزَّلَ اللهُ عَلَى مُوسَى يَا لَيْتَنِي فِيهَا جَذَعًا لَيْتَنِي أَكُونُ حَيًّا إِذْ يُخْرِجُكَ قَوْمُكَ فَقَالَ رَسُولُ اللهِ ﷺ أَوَ مُخْرِجِيَّ هُمْ قَالَ نَعَمْ لَمْ يَأْتِ رَجُلٌ قَطُّ بِمِثْلِ مَا جِئْتَ بِهِ إِلَّا عُودِيَ وَإِنْ يُدْرِكْنِي يَوْمُكَ أَنْصُرْكَ نَصْرًا مُؤَزَّرًا. ثُمَّ لَمْ يَنْشَبْ وَرَقَةُ أَنْ تُوُفِّيَ، وَفَتَرَ الوَحْيُ

ஆயிஷா رضي الله عنها கூறினார்கள்: நபி ﷺ அவர்களுக்கு ஆரம்பத்தில் வஹ்யி தூக்கத்தில் தோன்றும் நல்ல கனவுகளிலேயே வந்தது. அப்போது அவர்கள் எந்தக் கனவு கண்டாலும் அது அதிகாலைப் பொழுதின் விடியலைப் போன்று தெளிவாக இருக்கும். பின்னர் தனிமையிலிருப்பது அவர்களின் விருப்பமாயிற்று. ஹிரா குகையில்

அவர்கள் தனித்திருந்தார்கள். தங்களின் குடும்பத்தாரிடம் திரும்பி வருவதற்கு முன் பல இரவுகள் (அங்கே தங்கியிருந்து) வணக்க வழிபாடுகளில் ஈடுபட்டிருந்தார்கள். அந்த நாள்களுக்கான உணவைத் தம்மோடு கொண்டு செல்வார்கள். (அது முடிந்ததும்) மீண்டும் (தங்களின் துணைவியார்) கதீஜா அவர்களிடம் திரும்புவார்கள். அதே போன்று பல நாள்களுக்குரிய உணவைக் கொண்டு செல்வார்கள். இந்த நிலை ஹிரா குகையில் அவர்களுக்கு சத்தியம் வரும் வரை நீடித்தது. (ஒருநாள்) ஒரு வானவர் அவர்களிடம் வந்து, ஓதுவீராக என்றார். அதற்கவர்கள் நான் ஓதத் தெரிந்தவனில்லையே! என்றார்கள்.

இறைத்தூதர் அவர்கள் இந்நிலையைப் பின்வருமாறு விளக்கினார்கள்: அவர் என்னைப் பிடித்து நான் சிரமப்படும் அளவிற்கு இறுகக்கட்டியணைத்தார். பிறகு என்னை விட்டுவிட்டு மீண்டும் ஓதுவீராக என்றார். (அப்போதும்) நான் ஓதத் தெரிந்தவனில்லையே! என்றேன். இரண்டாவது முறையும் அவர் என்னைப் பிடித்து நான் சிரமப்படும் அளவிற்கு இறுகக்கட்டி அணைத்து என்னை விட்டுவிட்டு மீண்டும் ஓதுவீராக என்றார். (அப்போதும்) நான் ஓதத் தெரிந்தவனில்லையே! என்றேன். அவர் என்னைப் பிடித்து மூன்றாவது முறையும் கட்டி அணைத்து விட்டுவிட்டு,

**اقْرَأْ بِاسْمِ رَبِّكَ ○ الَّذِي خَلَقَ خَلَقَ الْإِنْسَانَ مِنْ عَلَقٍ ○ اقْرَأْ وَرَبُّكَ الْأَكْرَمُ ○ الَّذِي عَلَّمَ بِالْقَلَمِ ○ عَلَّمَ الْإِنْسَانَ مَا لَمْ يَعْلَمْ ○**

என்ற வசனங்களை எனக்கு ஓதிக் காண்பித்தார்.

மேலும், ஆயிஷா ﵂ கூறினார்: பிறகு இதயம் படபடத்தவர்களாக அந்த வசனங்களுடன் (தம் துணைவியார்) கதீஜா பின்த் குவைலித் இடம் நடந்த செய்தியைத் தெரிவித்து விட்டுத் தமக்கு ஏதும் நேர்ந்து விடுமோ என தாம் உறுதியாக அஞ்சுவதாகவும்

கூறினார்கள். அப்போது கதீஜா அவர்கள் அவ்வாறு கூறாதீர்கள்; அல்லாஹ்வின் மீது ஆணையாக உங்களை ஒருபோதும் அல்லாஹ் இழிவுபடுத்த மாட்டான்; (ஏனெனில்) தாங்கள் உறவினர்களுடன் இணங்கி இருக்கிறீர்கள்; (சிரமப்படுவோரின்) சுமைகளைத் தாங்கள் சுமந்து கொள்கிறீர்கள்; வறியவர்களுக்காக உழைக்கிறீர்கள்; விருந்தினர்களை உபசரிக்கிறீர்கள்; உண்மையான சோதனைகளில் (சிக்கியவர்களுக்கு) உதவி புரிகிறீர்கள் என்றார்கள். பின்னர் நபி ﷺ அவர்களைத் தம் தந்தையின் உடன் பிறந்தவரான நவ்ஃபல் என்பவரின் மகன் வரகாவிடம் அழைத்துச் சென்றார்கள். நவ்ஃபல், அசது என்பவரின் மகனும் அசது, அப்துல் உஸ்ஸாவின் மகனுமாவார்.

வரகா அறியாமைக் காலத்திலேயே கிறித்தவ சமயத்தைத் தழுவியவராக இருந்தார். மேலும் அவர் ஹீப்ரு மொழி எழுதத் தெரிந்திருந்தார். இன்ஜீல் வேதத்தை, ஹீப்ரு மொழியில் ஏதோ அல்லாஹ் அவருக்கு நாடிய அளவு எழுதுவார். கண் பார்வையற்ற பெரும் வயோதிகராக இருந்தார். அவரிடம் கதீஜா ﵂, என் தந்தையின் சகோதரன் மகனே! உம் சகோதரன் மகன் கூறுவதைக் கேளுங்கள் என்றார்கள். அப்போது வரகா நபி ﷺ அவர்களிடம், என் சகோதரர் மகனே! நீர் எதைக் கண்டீர்? எனக் கேட்டார். நபி ﷺ அவர்கள் தாம் பார்த்த செய்திகளை அவரிடம் கூறினார்கள். (அதைக் கேட்டதும்) வரகா, (நபி ﷺ அவர்களிடம்) இவர்தான், மூஸாவிடம் இறைவன் அனுப்பிய நாமூஸ் வானவர் (ஜிப்ரீல்) ஆவார் என்று கூறிவிட்டு, உமது சமூகத்தார் உம்மை உம்முடைய ஊரிலிருந்து வெளியேற்றும் சமயத்தில் நான் உயிருடன் திடகாத்திரமான இளைஞனாக இருந்திருக்க வேண்டுமே! என்றும் ஏங்கினார்.

அவர்கள், என்னை வெளியேற்றவா போகிறார்கள்? என்று நபி ﷺ கேட்டார்கள். அதற்கவர்கள் ஆம்! நீர் கொண்டு வந்திருப்பது போன்ற சத்தியத்தைக் கொண்டு வந்த எந்த மனிதரும் (மக்களால்) பகைத்துக் கொள்ளப்படாமல் இருந்ததில்லை. (நீர்

வெளியேற்றப்படும்) அந்நாளை நான் அடைந்தால் உமக்கு மிகப் பெரிய உதவி செய்வேன் என்று கூறினார். அதன் பின்னர் வரகா நீண்ட நாள் உயிர் வாழவில்லை, அவர் இறந்து விட்டார்.

இந்த முதல் செய்தியுடன் வஹீ (இறைச்செய்தி) சிறிது காலம் நின்று போயிற்று.[2]

மேலும் இமாம் புகாரி, முஸ்லிம் அறிவிக்கின்றார்கள்:

**عن جَابِرِ بْنِ عَبْدِ اللهِ الأَنْصَارِيِّ ﵁ قَالَ وَهُوَ يُحَدِّثُ عَنْ فَتْرَةِ الوَحْيِ فَقَالَ فِي حَدِيثِهِ بَيْنَا أَنَا أَمْشِي إِذْ سَمِعْتُ صَوْتًا مِنَ السَّمَاءِ فَرَفَعْتُ بَصَرِي فَإِذَا المَلَكُ الَّذِي جَاءَنِي بِحِرَاءٍ جَالِسٌ عَلَى كُرْسِيٍّ بَيْنَ السَّمَاءِ وَالأَرْضِ فَرُعِبْتُ مِنْهُ فَرَجَعْتُ فَقُلْتُ زَمِّلُونِي زَمِّلُونِي فَأَنْزَلَ اللّٰهُ تَعَالَى {يَا أَيُّهَا المُدَّثِّرُ ○ قُمْ فَأَنْذِرْ ○} [المدثر: ٢] إِلَى [ص:٨] قَوْلِهِ {وَالرُّجْزَ فَاهْجُرْ ○} [المدثر: ٥]. فَحَمِيَ الوَحْيُ**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: நான் நடந்து சென்று கொண்டிருந்த போது வானத்திலிருந்து ஒரு குரலைக் கேட்டு என் பார்வையை உயர்த்திப் பார்த்தேன். அப்போது ஹிரா குகையில் என்னிடம் வந்த அதே வானவர் வானத்துக்கும் பூமிக்குமிடையே ஓர் இருக்கையில் அமர்ந்திருக்கக் கண்டு திடுக்கிற்றேன். (வீட்டிற்குத்) திரும்பி வந்து (கதீஜாவிடம்) என்னைப் போர்த்துங்கள், என்னைப் போர்த்துங்கள் என்றேன். அப்போது, அல்லாஹு தஆலா,

**يَاأَيُّهَا الْمُدَّثِّرُ ○ قُمْ فَأَنْذِرْ ○ وَرَبَّكَ فَكَبِّرْ ○ وَثِيَابَكَ فَطَهِّرْ ○ وَالرُّجْزَ فَاهْجُرْ ○**

2, நூல்: புகாரி, எண்: 3:

என்ற வசனங்களை இறக்கினான் என்று இறைத்தூதர் அவர்கள் கூறினார்கள். இவ்வாறு, வஹீ (இறைச்செய்தி) நின்று போயிருந்த இடைக் காலத்தைப் பற்றிக் கூறும்போது ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் ﵁ அவர்கள் அறிவித்துவிட்டு, அதன் பின்னர் வஹ்யி அடிக்கடி தொடர்ந்து வரலாயிற்று என்று அவர் கூறினார்.

சில அறிவிப்புகளில் முதலாவதாக இறங்கிய வசனங்கள் என்று சில வசனங்களைப் பற்றி கூறப்பட்டிருந்தாலும் அவை ஒரு குறிப்பிட்ட நிலையை கவனித்து கூறப்பட்டதாகும்.

**عن يَحْيَى ﵁ قَالَ سَأَلْتُ أَبَا سَلَمَةَ أَيُّ الْقُرْآنِ أُنْزِلَ أَوَّلُ؟ فَقَالَ {يَا أَيُّهَا الْمُدَّثِّرُ} [المدثر: ١] فَقُلْتُ أُنْبِئْتُ أَنَّهُ {اقْرَأْ بِاسْمِ رَبِّكَ الَّذِي خَلَقَ} [العلق: ١] فَقَالَ أَبُو سَلَمَةَ سَأَلْتُ جَابِرَ بْنَ عَبْدِ اللهِ أَيُّ الْقُرْآنِ أُنْزِلَ أَوَّلُ؟ فَقَالَ {يَا أَيُّهَا الْمُدَّثِّرُ} [المدثر: ١] فَقُلْتُ أُنْبِئْتُ أَنَّهُ {اقْرَأْ بِاسْمِ رَبِّكَ الَّذِي خَلَقَ} [العلق: ١] فَقَالَ لاَ أُخْبِرُكَ إِلَّا بِمَا قَالَ رَسُولُ اللهِ ﷺ قَالَ رَسُولُ اللهِ ﷺ جَاوَرْتُ فِي حِرَاءٍ فَلَمَّا قَضَيْتُ جِوَارِي هَبَطْتُ فَاسْتَبْطَنْتُ الوَادِيَ فَنُودِيتُ فَنَظَرْتُ أَمَامِي وَخَلْفِي وَعَنْ يَمِينِي وَعَنْ شِمَالِي فَإِذَا هُوَ جَالِسٌ عَلَى كُرْسِيٍّ بَيْنَ السَّمَاءِ وَالأَرْضِ فَأَتَيْتُ خَدِيجَةَ فَقُلْتُ دَثِّرُونِي وَصُبُّوا عَلَيَّ مَاءً بَارِدًا وَأُنْزِلَ عَلَيَّ {يَا أَيُّهَا الْمُدَّثِّرُ ○ قُمْ فَأَنْذِرْ ○ وَرَبَّكَ فَكَبِّرْ ○} [المدثر: ٢]**

யஹ்யா இப்னு அபீ கஸீர் அறிவித்தார்: நான் அபூ ஸலமா அவர்களிடம் முதன் முதலாக இறக்கப்பட்ட குர்ஆன் வசனம் எது? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,

**يَاأَيُّهَا الْمُدَّثِّرُ ○ قُمْ فَأَنْذِرْ ○ وَرَبَّكَ فَكَبِّرْ ○ وَثِيَابَكَ فَطَهِّرْ ○ وَالرُّجْزَ فَاهْجُرْ ○**

எனும் (திரு குர்ஆன் 74:1 வது) வசனங்கள் என்றார்கள். அப்போது நான்,

**اقْرَأْ بِاسْمِ رَبِّكَ ○ الَّذِي خَلَقَ خَلَقَ الْإِنْسَانَ مِنْ عَلَقٍ ○ اقْرَأْ وَرَبُّكَ الْأَكْرَمُ ○ الَّذِي عَلَّمَ بِالْقَلَمِ ○ عَلَّمَ الْإِنْسَانَ مَا لَمْ يَعْلَمْ ○**

எனும் (திருக்குர்ஆன் 96:1 வது) வசனம் என்றல்லவா எனக்கு அறிவிக்கப்பட்டுள்ளது! என்றேன். அதற்கு அபூ ஸலமா ﵀, நான் ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் ﵁ அவர்களிடம், முதன் முதலாக அருளப்பெற்ற குர்ஆன் வசனம் எது? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,

**يَاأَيُّهَا الْمُدَّثِّرُ ○ قُمْ فَأَنْذِرْ ○ وَرَبَّكَ فَكَبِّرْ ○ وَثِيَابَكَ فَطَهِّرْ ○ وَالرُّجْزَ فَاهْجُرْ ○**

என்று கூறினார்கள். உடனே நான்,

**اقْرَأْ بِاسْمِ رَبِّكَ ○ الَّذِي خَلَقَ خَلَقَ الْإِنْسَانَ مِنْ عَلَقٍ ○ اقْرَأْ وَرَبُّكَ الْأَكْرَمُ ○ الَّذِي عَلَّمَ بِالْقَلَمِ ○ عَلَّمَ الْإِنْسَانَ مَا لَمْ يَعْلَمْ ○**

எனும் (திருக்குர்ஆன் 96:1 வது) வசனம் தான் (முதன் முதலில் அருளப்பட்ட வசனம்) என்று எனக்கு அறிவிக்கப்பட்டுள்ளதே! என்று கேட்டேன். அதற்கு ஜாபிர் ﵁ கூறியதாவது, நபி ﷺ அவர்கள் சொன்னதைத் தவிர வேறெதையும் உங்களுக்கு நான் தெரிவிக்கப் போவதில்லை. இறைத்தூதர் ﷺ அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: நான் ஹிரா மலைக் குகையில் தங்கியிருந்தேன்.

நான் என் தங்குதலை முடித்துக்கொண்டு (மலையிலிருந்து) இறங்கி அங்கிருந்த பள்ளத்தாக்கின் நடுவே வந்து சேர்ந்திருப்பேன். அப்போது என்னை அழைக்கும் குரலைக் கேட்டேன். உடனே நான் எனக்கு முன்புறத்திலும் எனக்குப் பின்புறத்திலும் எனக்கு வலப்பக்கத்திலும் எனக்கு இடப்பக்கத்திலும் பார்த்தேன். அப்போது அவர் (ஜிப்ரீல்) வானத்திற்கும் பூமிக்குமிடையே ஓர் இருக்கையில் அமர்ந்திருந்தார். உடனே நான் கதீஜாவிடம் சென்று “எனக்குப் போர்த்திவிடுங்கள்! என் மீது குளிர்ந்த நீரை ஊற்றுங்கள்!” என்று கூறினேன். மேலும்,

**يَاأَيُّهَا الْمُدَّثِّرُ ○ قُمْ فَأَنْذِرْ ○ وَرَبَّكَ فَكَبِّرْ ○ وَثِيَابَكَ فَطَهِّرْ ○ وَالرُّجْزَ فَاهْجُرْ ○**

எனும் (திருக்குர்ஆன் 74:1-3) இறைவசனங்கள் அருளப்பெற்றன.[3]

இந்த அறிவிப்பில் முதலாவதாக இறங்கியவை என்று ஜாபிர் ﵁ அவர்கள் கூறியது வஹ்யியின் இடைவெளிக்குப் பிறகு முதலாவதாக இறங்கியவை என்று பொருளில் ஆகும். அல்லது ரிஸாலத் - தூதுத்துவம் விஷயத்தில் இறக்கப்பட்டதில் முதலாவது என்று பொருளாகும்.

ஏனெனில், இக்ரஃ அத்தியாயத்தில் இறங்கிய வசனத்தைக் கொண்டு நுபுவத்து -நபித்துவம் நபி ﷺ அவர்களுக்கு உறுதியானது. முத்தஸ்ஸிர் அத்தியாயத்தில் இறங்கிய கும் ஃபஅன்திர் என்ற வசனத்தைக் கொண்டு ரிசாலத்து நபி ﷺ அவர்களுக்கு உறுதியானது.

ஆகவேதான், சில அறிஞர்கள் கூறுகிறார்கள்: “இக்ரஃ” வைக் கொண்டு நபியாக ஆக்கப்பட்டார்கள். “அல்முத்தஸிர்”ஐக் கொண்டு ரஸூலாக ஆக்கப்பட்டார்கள்.

---------------------

3, நூல்: புகாரி, முஸ்லிம்

பாடம் 3 

# نُزُولُ الْقُرْآنِ اِبْتِدَائِيٌّ وَسَبَبِيٌّ

## குர்ஆன் இரு வகையாக இறங்குதல்

ஒன்று, سببي ஸபபி -ஏதாவது ஒரு காரணத்தை முன்னிட்டு இறங்குதல், மற்றொன்று ابتدائي இப்திதாயி -பொதுவாக இறங்குதல்.

குர்ஆன் இறங்குவது இரு வகைகளாகப் பிரிகிறது. ஒன்று இப்திதாயி. மற்றொன்று ஸபபி.

முதலாவது வகை: முன் நிகழ்ந்த ஒரு காரணம் இல்லாமல் பொதுவாக இறங்குவதை இப்திதாயி என்று கூறப்படும். குர்ஆனில் உள்ள பெரும்பாலான வசனங்கள் இந்த வகையை சேர்ந்தவை ஆகும். உதாரணமாக, பின் வருகின்ற வசனத்தைக் கூறலாம்.

وَمِنْهُمْ مَنْ عَاهَدَ اللّٰهَ لَئِنْ آتَانَا مِنْ فَضْلِهِ لَنَصَّدَّقَنَّ وَلَنَكُونَنَّ مِنَ الصَّالِحِينَ

அவர்களில் சிலர் இருக்கின்றனர். அவர்கள், "அல்லாஹ் தன் அருளைக் கொண்டு நமக்கு ஏதும் கொடுத்தால் நிச்சயமாக நாம் (அதை) நல்வழியில் (தாராளமாக) தானம் செய்து, நிச்சயமாக நாம் நல்லவர்களாகவும் ஆகிவிடுவோம்" என்று அல்லாஹ்விடம் வாக்குறுதி செய்தனர். (அல்குர்ஆன் 9 : 75)

இது, முனாஃபிக் - நயவஞ்சகர்களின் நிலைமையை விளக்குவதற்காக பொதுவாக இறங்கிய வசனமாகும். நயவஞ்சகர்கள் குணத்தால் இப்படித்தான் இருப்பார்கள். அவர்கள் மக்களிடம் வாக்களித்தாலும் அல்லது அல்லாஹ்விடம் வாக்களித்தாலும் அதை மீறத்தான்

செய்வார்கள். தாங்கள் கொடுத்த வாக்கை நிறைவேற்ற மாட்டார்கள். பொதுவாக முனாஃபிக்குகளின் இந்த குணத்தை விளக்குவதற்காக மேற்கூறப்பட்ட வசனம் இறங்கியது. ஏதோ ஒரு சம்பவம் நிகழ்ந்து அதை முன்னிட்டு இந்த வசனம் இறங்கவில்லை. இவ்வாறு பொதுவாக வசனம் இறங்குவதை நுசூல் இப்திதாயி என்று கூறப்படும்.

இந்த வசனம் **ثعلبة بن حاطب** ஸஃலபா இப்னு ஹாத்திப் ﷺ அவர்களின் விஷயத்தில் இறங்கியது என்று பரவலாக கூறப்படுகின்றது. இன்னும், பல முஃபஸ்ஸிர்களும் அதை பதிவு செய்துள்ளனர்; பல போதகர்கள் அதை தங்கள் சபைகளில் பரப்புகின்றனர். ஆனால், இந்த அறிவிப்பு பலவீனமானதாகும். எவ்விதத்திலும் இது சரியாகாது.

**இரண்டாவது வகை:** ஸபபி. அதாவது, ஒரு காரணத்தை முன்னிட்டு இறங்கிய வசனங்கள்.

அந்த காரணம் பின்வரும் காரணங்களில் ஒன்றாக இருக்கலாம்:

### அ. அல்லாஹ்வின் தூதரிடம் கேள்வி கேட்கப்படுதல்.

அதாவது, அல்லாஹ்வின் தூதரிடம் யாராவது ஒரு விளக்கம் கேட்பார்கள். அப்போது, அவர்கள் நபியவர்களிடம் கேட்ட கேள்விக்கு பதிலை அல்லாஹு தஆலா குர்ஆனில் அந்த வசனத்தின் மூலம் தருவான்.

உதாரணமாக:

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

**يَسْأَلُونَكَ عَنِ الْأَهِلَّةِ قُلْ هِيَ مَوَاقِيتُ لِلنَّاسِ وَالْحَجِّ وَلَيْسَ الْبِرُّ بِأَنْ تَأْتُوا الْبُيُوتَ مِنْ ظُهُورِهَا وَلَٰكِنَّ الْبِرَّ مَنِ اتَّقَىٰ وَأْتُوا الْبُيُوتَ مِنْ أَبْوَابِهَا وَاتَّقُوا اللَّهَ لَعَلَّكُمْ تُفْلِحُونَ**

(நபியே! மாதந்தோறும் பிறந்து, வளர்ந்து, தேயும்) பிறைகளைப் பற்றி உம்மிடம் கேட்கிறார்கள். (அதற்கு) நீர் கூறுவீராக: "அவை மனிதர்களுக்கு ஒவ்வொரு மாதத்தையும் ஹஜ்ஜுடைய காலங்களையும் அறிவிக்கக்கூடியவை." மேலும், (நம்பிக்கையாளர்களே! இஹ்ராம் கட்டிய) நீங்கள் (உங்கள்) வீடுகளுக்கு அவற்றின் பின்புறமாக வந்து விடுவதனால் நல்லவர்களாக ஆகிவிட மாட்டீர்கள். எனினும், எவர் அல்லாஹ்வுக்குப் பயந்து நடக்கிறாரோ அவரே நல்லவர். ஆதலால், நீங்கள் (உங்கள்) வீடுகளுக்கு அவற்றின் தலை வாசல்களின் வழியாக வாருங்கள். அல்லாஹ்வுக்குப் பயந்தும் நடந்துகொள்ளுங்கள். இதனால் நீங்கள் வெற்றியடைவீர்கள். (அல்குர்ஆன் 2 : 189)

**ஆ. ஒரு சம்பவம் நிகழ்ந்துவிடுதல்.**

ஒரு சம்பவம் நிகழ்ந்த பின்னர் அந்த சம்பவத்தைப் பற்றியும் அதில் உள்ள நன்மை தீமையைப் பற்றியும் விவரித்து எச்சரித்து அல்லாஹ் வசனத்தை இறக்குவான். உதாரணமாக:

وَلَئِنْ سَأَلْتَهُمْ لَيَقُولُنَّ إِنَّمَا كُنَّا نَخُوضُ وَنَلْعَبُ قُلْ أَبِاللَّهِ وَآيَاتِهِ وَرَسُولِهِ كُنْتُمْ تَسْتَهْزِئُونَ

(இதைப் பற்றி) நீங்கள் அவர்களைக் கேட்பீராயின் விளையாட்டுக்காக நாங்கள் தர்க்கித்துக் கொண்டிருந்தோம் என்று அவர்கள் கூறுவார்கள். அதற்கு (நபியே! அவர்களை நோக்கி) அல்லாஹ்வையும், அவனது வசனங்களையும், அவனது தூதரையுமா நீங்கள் பரிகசிக்கிறீர்கள்? என்று நீர் கேட்பீராக. (அல்குர்ஆன் 9 : 65)

இந்த இரண்டு வசனங்களும் தபூக் போரின் போது முனாஃபிக் ஒருவன் "நமது அறிஞர்களைப் போன்று அதிகம் சாப்பிடுபவர்களை, பொய் பேசுபவர்களை, எதிரிகளிடம் சண்டை செய்கின்ற போது கோழைகளாக இருப்பவர்களை நாம் பார்க்கவில்லை" என்று கூறிய போது இறங்கின.

இந்த செய்தி நபி ﷺ அவர்களுக்கு எட்டியது. அப்போது,

وَلَئِنْ سَأَلْتَهُمْ لَيَقُولُنَّ إِنَّمَا كُنَّا نَخُوضُ وَنَلْعَبُ

பொருள்: (இதைப் பற்றி) நீங்கள் அவர்களைக் கேட்பீராயின் விளையாட்டுக்காக நாங்கள் தர்க்கித்துக் கொண்டிருந்தோம் என்று அவர்கள் கூறுவார்கள்

என்ற குர்ஆன் வசனம் இறங்கியது.

நபி ﷺ அவர்கள் அந்த மனிதரிடம் விசாரித்தபோது குர்ஆன் வசனத்தில் இறக்கப்பட்டவாறே, நாங்கள் விளையாட்டாக பேசினோம் என்று பதில் கூறினார். அதற்கு அல்லாஹ் பின்வரும் வசனத்தை இறக்கினான்.

قُلْ أَبِاللَّهِ وَآيَاتِهِ وَرَسُولِهِ كُنْتُمْ تَسْتَهْزِئُونَ

பொருள்: அதற்கு (நபியே! அவர்களை நோக்கி) அல்லாஹ்வையும், அவனது வசனங்களையும், அவனது தூதரையுமா நீங்கள் பரிகசிக்கிறீர்கள்? என்று நீர் கேட்பீராக!

**இ). ஒரு சம்பவம் நிகழ்ந்திருக்கும். அதற்குரிய மார்க்க சட்டத்தை கூறுவதற்காக குர்ஆன் வசனம் இறங்கும்.**

உதாரணமாக,

அல்லாஹ் தஆலா கூறுகின்றான்:

قَدْ سَمِعَ اللَّهُ قَوْلَ الَّتِي تُجَادِلُكَ فِي زَوْجِهَا وَتَشْتَكِي إِلَى اللَّهِ وَاللَّهُ يَسْمَعُ تَحَاوُرَكُمَا إِنَّ اللَّهَ سَمِيعٌ بَصِيرٌ

(நபியே!) எவள் தன் கணவரைப் பற்றி உம்மிடம் தர்க்கித்து (அவரைப் பற்றி) அல்லாஹ்விடமும் முறையிட்டாளோ, அவளுடைய முறையீட்டை அல்லாஹ் நிச்சயமாகக் கேட்டுக்

கொண்டான். (அதைப் பற்றி) உங்கள் இருவரின் தர்க்க வாதத்தையும் அல்லாஹ் செவியுற்றான். நிச்சயமாக அல்லாஹ் (அனைத்தையும்) செவியுறுபவன், (ஒவ்வொருவரின் செயலையும்) உற்று நோக்குபவன் ஆவான். (அல்குர்ஆன் 58 : 1)[4]

## فَوَائِدُ مَعْرِفَةِ أَسْبَابِ النُّزُولِ [5]

4. இது குறித்து ஹதீஸ் நூல்களில் ஒரு சம்பவம் அறிவிக்கப்படுகின்றது. அந்த சம்பவத்தை முன்னிட்டு அல்லாஹ் பின்வரும் வசனங்களை இறக்கினான். அந்த வசனங்களில் நிகழ்ந்த சம்பவத்தை எடுத்துக்கூறி, பிறகு அதற்குரிய மார்க்க சட்டத்தையும் அல்லாஹ் விவரிக்கின்றான்.

அந்த அறிவிப்பு பின்வருமாறு:

عَنْ عُرْوَةَ بْنِ الزُّبَيْرِ ﵁ قَالَ قَالَتْ عَائِشَةُ تَبَارَكَ الَّذِي وَسِعَ سَمْعُهُ كُلَّ شَيْءٍ إِنِّي لَأَسْمَعُ كَلَامَ خَوْلَةَ بِنْتِ ثَعْلَبَةَ وَيَخْفَى عَلَيَّ بَعْضُهُ وَهِيَ تَشْتَكِي زَوْجَهَا إِلَى رَسُولِ اللهِ ﷺ وَهِيَ تَقُولُ يَا رَسُولَ اللهِ أَكَلَ شَبَابِي وَنَثَرْتُ لَهُ بَطْنِي حَتَّى إِذَا كَبِرَتْ سِنِّي وَانْقَطَعَ وَلَدِي ظَاهَرَ مِنِّي، اَللّٰهُمَّ إِنِّي أَشْكُو إِلَيْكَ فَمَا بَرِحَتْ حَتَّى نَزَلَ جِبْرَائِيلُ بِهَؤُلَاءِ الْآيَاتِ {قَدْ سَمِعَ اللهُ قَوْلَ الَّتِي تُجَادِلُكَ فِي زَوْجِهَا وَتَشْتَكِي إِلَى اللهِ} [المجادلة: ١]

அருள்வளம் மிக்க அல்லாஹ்வின் செவி அனைத்தையும் வியாபித்து இருக்கின்றது. நிச்சயமாக நான் கவ்லா பின்த் தஃலபா உடைய பேச்சை செவியுற்றேன். ஆனால், அந்த பேச்சில் சில எனக்கு செவியுறவில்லை. அவள் தனது கணவனைப் பற்றி ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் முறையிட்டுக் கொன்டிருந்தாள். அவள் கூறியதாவது: ரஸூலுல்லாஹ்வே! அவர் எனது வாலிபத்தை அழித்துவிட்டார்; அவருக்கு நான் என் வயிற்றை விரித்தேன். இப்போது எனது வயதாகிவிட்டது, எனக்கு குழந்தை பெறமுடியாமல் போய்விட்டது. இவர் என்னை லிஹார் செய்துவிட்டார். இவ்வாறு கூறிவிட்டு, அல்லாஹ்வே எனது நிலையை நான் உன்னிடம் முறையிடுகின்றேன் என்று கூறினார். இதே நிலையில் அவள் இருந்தபோது இந்த வசனங்களுடன் ஜிப்ரயீல் இறங்கினார்.

قَدْ سَمِعَ اللهُ قَوْلَ الَّتِي تُجَادِلُكَ فِي زَوْجِهَا وَتَشْتَكِي إِلَى اللهِ وَاللهُ يَسْمَعُ تَحَاوُرَكُمَا إِنَّ اللهَ سَمِيعٌ بَصِيرٌ

இந்த வசனமும் இதை தொடர்ந்துள்ள 3.4.5 ஆகிய வசனங்களும் அப்போது இறக்கப்பட்டன. (இப்னு மாஜா, எண்: 2063)

5. **فوائد** ஃபவாயித் என்பது **فائدة** ஃபாயிதா உடைய பன்மையாகும். அதன் பொருள்: பலன். **معرفة** மஃரிபத் என்தன் பொருள் அறிவது. **أسباب** அஸ்பாப் என்பது **سبب** ஸபப் உடைய பன்மையாகும். அதன் பொருள் காரணம் ஆகும். **نزول** நுஸூல் என்பதன் பொருள் இறங்குதல் ஆகும்.

எந்த ஒரு காரணத்தை முன்னிட்டு ஒரு வசனம் இறங்குகிறதோ அதற்கு **سبب النزول** ஸபப் நுஸூல் என்று கூறப்படும்.

## வசனம் இறங்கிய காரணத்தை அறிவதன் பலன்கள்

வசனங்கள் இறங்கிய காரணங்களை அறிவது மிக முக்கியமாகும். அதில் பல பலன்கள் இருக்கின்றன.

1). குர்ஆன் அல்லாஹ்விடமிருந்துதான் இறங்குகிறது என்பது இதன் மூலம் தெளிவாகிறது.

அது எப்படி என்றால், நபி ﷺ அவர்களிடம் ஒரு விஷயத்தைப் பற்றி கேட்கப்படும் போது சில நேரங்கள் நபி ﷺ அவர்கள் பதில் கூறாமல் தாமதிப்பார்கள். இறுதியாக, வஹ்யி இறங்கும். பிறகு, நபி ﷺ அவர்கள் இறங்கிய வசனத்தை அந்த கேள்விக்கு பதிலாக ஓதிக் காண்பிப்பார்கள். அல்லது நிகழ்ந்த ஒரு சம்பவம் நபி ﷺ அவர்களுக்கு தெரியாமல் இருக்கும். வஹ்யி இறங்கி அந்த சம்பவத்தை நபி ﷺ அவர்களுக்கு தெரியப்படுத்தும்.

முதலாவதற்கு உதாரணம்:

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَيَسْأَلُونَكَ عَنِ الرُّوحِ قُلِ الرُّوحُ مِنْ أَمْرِ رَبِّي وَمَا أُوتِيتُمْ مِنَ الْعِلْمِ إِلَّا قَلِيلا

(நபியே!) ரூஹைப் பற்றி (யூதர்களாகிய) அவர்கள் உம்மிடம் கேட்கிறார்கள். அதற்கு நீர் "அது எனது இறைவனின் கட்டளையால் ஏற்பட்டது. (அதைப் பற்றி) வெகு சொற்ப ஞானமே தவிர (மனிதர்களாகிய) உங்களுக்குக் கொடுக்கப்படவில்லை. (ஆதலால், அதன் நுட்பங்களை நீங்கள் அறிந்து கொள்ள முடியாது)" என்று கூறுவீராக. (அல்குர்ஆன் 17 : 85)

அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் رضي الله عنه அவர்கள் அறிவிக்கிறார்கள்: யூதர்களில் ஒருவர் அபுல் காசிமே! ரூஹ் என்றால் என்ன? என்று கேட்டார். நபி ﷺ அவர்கள் அமைதியாக இருந்தார்கள்.

அவர்களுக்கு எந்த பதிலையும் கூறவில்லை. ஆகவே, அவர்களுக்கு வஹ்யி அறிவிக்கப்படுகிறது என்று நான் அறிந்தேன். எனது அந்த இடத்திலேயே நான் நின்றேன். அப்போது வஹ்யி இறங்கியவுடன் நபி ﷺ அவர்கள் பின்வருகின்ற வசனத்தை ஓதலானார்கள்:[6]

وَيَسْأَلُونَكَ عَنِ الرُّوحِ قُلِ الرُّوحُ مِنْ أَمْرِ رَبِّي
وَمَا أُوتِيتُمْ مِنَ الْعِلْمِ إِلَّا قَلِيلا

அல்குர்ஆன் 17:85

இரண்டாவதற்கு உதாரணம்:

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

يَقُولُونَ لَئِنْ رَجَعْنَا إِلَى الْمَدِينَةِ لَيُخْرِجَنَّ الْأَعَزُّ مِنْهَا الْأَذَلَّ

மேலும், நாங்கள் மதீனாவிற்குத் திரும்ப வந்தால், கண்ணியமுள்ள நாங்கள் (நம்பிக்கை கொண்ட இந்த) இழிவானவர்களை அதிலிருந்து நிச்சயமாக வெளியேற்றி விடுவோம் என்றும் கூறுகின்றனர்.

(அல்குர்ஆன் 63 : 8)[7]

ஸைது இப்னு அர்கம் ؓ அவர்கள் முனாஃபிக்குகளுடைய தலைவன் அப்துல்லாஹ் இப்னு உபை இவ்வாறு கூறுவதை செவியுற்றார்கள். அவன், தான் கண்ணியமானவன் என்றும் நபியும் தோழர்களும் இழிவானவர்கள் என்றும் எண்ணினான். ஸைது ؓ அவர்கள் இதை தமது தந்தையின் சகோதரருக்கு கூறினார்கள். அவர் அதை நபி ﷺ அவர்களிடம் கூறினார். நபி ﷺ அவர்கள் ஸைதை அழைத்து கேட்டபோது, தான் செவியுற்றதை நபி ﷺ அவர்களுக்கு ஸைது கூறினார். நபி ﷺ அவர்கள் அப்துல்லாஹ் இப்னு உபை மற்றும்

6. நூல்: புகாரி, எண்: 125, 4721
7. நூல்: புகாரி, எண்: 4900, 4901

அவனுடைய கூட்டாளிகளை வரவழைத்தார்கள். அவர்களோ, நாங்கள் இவ்வாறு கூறவில்லை என்று சத்தியம் செய்தனர். அவர்களை ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களும் நம்பி விட்டார்கள். அப்போதுதான் ஸைதை உண்மைபடுத்தும் விதமாக இந்த வசனத்தை அல்லாஹ் இறக்கினான். அதன்மூலம் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுக்கு உண்மை நிகழ்வு தெளிவானது.

2). நபி ﷺ அவர்களைப் பற்றி அவர்களுக்கு தகுதி இல்லாததை காஃபிர்கள் பேசும்போது, அல்லாஹு தஆலா அதை மறுத்துப் பேசுவான். இதன் மூலம் நபி ﷺ அவர்களுக்கு அல்லாஹ் கொடுக்கின்ற முக்கியத்துவத்தை நாம் புரிந்து கொள்வதும் சபபுன் நுஸூலை அறிவதன் நன்மைகளில் ஒன்றாகும்.

இதற்கு உதாரணம்:

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَقَالَ الَّذِينَ كَفَرُوا لَوْلَا نُزِّلَ عَلَيْهِ الْقُرْآنُ جُمْلَةً وَاحِدَةً كَذَلِكَ لِنُثَبِّتَ بِهِ فُؤَادَكَ وَرَتَّلْنَاهُ تَرْتِيلا

(நபியே!) எவர்கள் (உம்மை) நிராகரிக்கிறார்களோ அவர்கள் இந்த வேதம் முழுவதும் ஒரே தடவையில் அவர்மீது இறக்கப்பட வேண்டாமா? என்று கூறுகின்றனர். (இதை) இவ்வாறு நாம் கொஞ்சம் கொஞ்சமாக இறக்கி (வரிசை முறைப்படி) ஒழுங்குபடுத்துவதெல்லாம் உமது உள்ளத்தைத் திடப்படுத்துவதற்காகவே ஆகும்.

(அல்குர்ஆன் 25 : 32)[8]

இவ்வாறுதான், இட்டுக்கட்டப்பட்ட சம்பவம் குறித்து இறங்கிய வசனங்கள் நபி ﷺ அவர்களின் மனைவி மீது கூறப்பட்ட குற்றச்

8. குர்ஆனின் ஒரே தடவையில் முழுமையாக உங்கள் மீது இறக்கப்பட்டிருக்க வேண்டியது தானே என்று நிராகரிப்பாளர்கள் நபியிடம் செய்த ஆட்சேபனைக்கு அல்லஹுத் தஆலா மேற்கண்ட வசனத்தில் நபி சார்பாக பதில் தருகிறான்.

சாட்டை மறுத்தன; நபியையும் அவர்களின் மனைவிமார்களையும் பொய்யர்கள் சுமத்திய இந்த குற்றச்சாட்டிலிருந்து தூய்மைபடுத்தின.[9]

3). அல்லாஹ் தனது அடியார்களுக்கு கொடுக்கின்ற முக்கியத்துவம், அவர்களை சிறப்பாக கவனிப்பது, அவர்களின் சிரமங்களை அகற்றுவது, மற்றும் அவர்களின் துயரங்களை போக்குவது.

இதற்கு உதாரணம் தயம்மும் தொடர்பாக இறங்கிய வசனம். இவற்றை எல்லாம் சபபுன் நுஸூலை நாம் அறிவதால் விளங்கிக் கொள்ள முடிகிறது.

நாங்கள் ஒரு பயணத்தில் நபி ﷺ அவர்களுடன் சென்றோம். பைதாவு அல்லது தாத்துல் ஜைஷ் என்ற இடத்தை வந்தடைந்ததும் என்னுடைய கழுத்துமாலை அறுந்து (தொலைந்து) விட்டது. அதைத் தேடுவதற்காக நபி ﷺ அவர்களும் மற்றவர்களும் அந்த இடத்தில் தங்கினோம். நாங்கள் தங்கிய இடத்தில் தண்ணீர் இல்லை. அப்போது அபூ பக்ர் رضي الله عنه அவர்களிடம் சிலர் வந்து, (உங்கள் மகளான) ஆயிஷா رضي الله عنها செய்ததை நீங்கள் பார்த்தீர்களா? நபி ﷺ அவர்களையும் மக்களையும் இங்கே தங்கச் செய்து விட்டார். நாம் தங்கிய இடத்திலும் தண்ணீர் இல்லை; நாமும் நம்முடன் தண்ணீர் எடுத்து வரவில்லை என்று முறையிட்டனர். அபூ பக்ர் رضي الله عنه (என்னருகே) வந்தபோது நபி ﷺ அவர்கள் தங்களின் தலையை என்னுடைய மடி மீது வைத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். நபி ﷺ அவர்களையும் மக்களையும் தங்க வைத்து விட்டாயே? அவர்கள் தங்கிய இடத்திலும் தண்ணீர் இல்லை; அவர்களிடமும் தண்ணீர் இல்லை என்று கூறினார்கள். அவர்கள் எதைச் சொல்ல அல்லாஹ்

9. அன்னை ஆயிஷா رضي الله عنها அவர்கள் மீது தவறான குற்றச்சாட்டை நயவஞ்சகர்கள் பரப்பினார்கள். அது குறித்து உண்மை நிலை தெரியாமல் நபி ﷺ அவர்கள் கவலையில் இருந்தார்கள். ஆயிஷா رضي الله عنها அவர்கள் பரிசுத்தமானவர்கள், அவர்களிடமிருந்து அந்த தவறு நிகழவில்லை என்று அவர்களையும் மற்ற மனைவிமார்களையும் பரிசுத்தப்படுத்தி அல்லாஹ் சூரா அந்நூர் உடைய பல வசனங்களை இறக்கினான். இதுவும் நபி ﷺ அவர்கள் சார்பாக அல்லாஹ் மறுத்துப் பேசியதாகும். இது குறித்து மேலதிக விளக்கங்களை அறிய பார்க்க அல்குர்ஆன் சூரா அந்நூர், வசனங்கள் 11ல் இருந்து 24 வரை, மற்றும் ஸஹீஹுல் புகாரி 2661.

நாடினானோ அதையெல்லாம் சொல்லி விட்டு, தங்களின் கையால் என்னுடைய இடுப்பில் குத்தினார்கள். நபி ﷺ அவர்களின் தலை என் மடியின் மீது இருந்ததால் நான் அசையாது இருந்தேன். நபி ﷺ அவர்கள் விழித்தெழுந்த போது தண்ணீர் கிடைக்கவில்லை. அப்போது அல்லாஹ், தயம்மும் உடைய வசனத்தை அருளினான். எல்லோரும் தயம்மும் செய்தார்கள்.

இது பற்றிப் பின்னர் உஸய்த் இப்னு ஹுளைர் ﷺ அபூ பக்ரின் குடும்பத்தார்களே! உங்களின் மூலமாக ஏற்பட்ட பரக்கத்துக்களில் இது முதலாவதாக இல்லை. (இதற்கு முன்பும் உங்களின் மூலம் எத்தனையோ பரக்கத்துக்கள் ஏற்பட்டுள்ளன) எனக் கூறினார். அப்போது நான் இருந்த ஒட்டகத்தை எழுப்பிய போது அதனடியில் (காணாமல் போன) என் கழுத்து மாலை கிடந்ததைக் கண்டோம் என ஆயிஷா ﷺ அறிவித்தார்.[10]

4). குர்ஆன் வசனத்தை சரியான முறையில் புரிவதும் சபபுன் நுஸூலை நாம் அறிந்துகொள்வதால் ஏற்படும் பலன்களில் ஒன்றாகும்.

இதற்கு உதாரணம்:

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

إِنَّ الصَّفَا وَالْمَرْوَةَ مِنْ شَعَائِرِ اللهِ فَمَنْ حَجَّ الْبَيْتَ أَوِ اعْتَمَرَ فَلَا جُنَاحَ عَلَيْهِ أَنْ يَطَّوَّفَ بِهِمَا

நிச்சயமாக ஸஃபா (மலையும்) மர்வா (மலையும், வணக்கத்திற்காக ஏற்படுத்தப்பட்ட) அல்லாஹ்வின் அடையாளங்களில் உள்ளவையாக இருக்கின்றன. ஆகையால் எவர்கள் ('கஅபா என்னும்) அவ்வீட்டை 'ஹஜ்ஜு' அல்லது உம்ரா செய்தார்களோ அவர்கள், அவ்விரண்டையும் சுற்றி வருவது குற்றமில்லை.

(அல்குர்ஆன் 2 : 158)

10. இமாம் புகாரி ﷺ பதிவு செய்கிறார்கள் (எண், 334)

அதாவது, இவ்விரண்டு மலைகளுக்கு நடுவில் ஸஃயி செய்யலாம். அது அனுமதிக்கப்பட்ட ஒன்றாகும். இவ்வாறுதான் فَلَا جُنَاحَ عَلَيهِ என்ற இந்த வசனத்தின் வெளிப்படையான கருத்திலிருந்து புரிய முடிகிறது. ஆனால், இந்த வசனம் பற்றி வந்துள்ள அறிவிப்பை கவனித்து, இந்த வசனம் இறக்கப்பட்ட காரணத்தை புரியும் போது வசனத்தின் சரியான பொருளை அறிய முடிகிறது.

ஆஸிம் இப்னு சுலைமான் ﷺ கூறுகிறார்:[11]

நான் அனஸ் இப்னு மாலிக் ﷺ அவர்களிடம், ஸஃபா மர்வா(வுக்கிடையே ஹஜ், உம்ராவின் போது ஓடுவதை நீங்கள் வெறுத்து வந்தீர்களா என்பது) குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள், நாங்கள் அதனை அறியாமைக் காலச் செயல் என்று கருதி வந்தோம். எனவே, இஸ்லாம் வந்த போது நாங்கள் அவற்றுக்கிடையே ஓடுவதை நிறுத்தி விட்டோம். அப்போது, அல்லாஹு தஆலா,

إِنَّ الصَّفَا وَالْمَرْوَةَ مِنْ شَعَائِرِ اللهِ فَمَنْ حَجَّ الْبَيْتَ أَوِ اعْتَمَرَ فَلَا جُنَاحَ عَلَيْهِ أَنْ يَطَّوَّفَ بِهِمَا

ஸஃபாவும் மர்வாவும் அல்லாஹ்வின் அடையாளச் சின்னங்களில் உள்ளவையாகும். எனவே, இறையில்லத்தில் ஹஜ் அல்லது உம்ரா செய்ய விரும்புகிறவர் அவ்விரண்டுக்குமிடையே சுற்றி வருவதில் குற்றமில்லை எனும் (குர்ஆன் 2 : 158வது) இவ்வசனத்தை அருளினான் என்று பதிலளித்தார்கள்.

فَلَا جُنَاحَ குற்றமில்லை என்று அல்லாஹ் கூறியதன் நோக்கம் ஸஃயி உடைய சட்டத்தை விளக்குவதல்ல. மாறாக, அறியாமைக் காலத்தில் செய்து வந்த காரியங்களில் உள்ளவைதான் இந்த இரண்டு மலைகளை கண்ணியப்படுத்துவது என்று கருதி தோழர்கள் ஸஃயி செய்வதை தவிர்த்தார்கள். ஆகவே, அவர்களின் இந்த குற்ற

11. இமாம் புகாரி ﷺ பதிவு செய்கிறார்கள்: எண்: 1648, 4496

உணர்வை அல்லாஹ் இந்த வசனத்தின் மூலம் நீக்கினான். ஸஃயி உடைய அசல் சட்டம், مِن شَعَآئِرِ لله என்ற வார்த்தையிலிருந்து ஸஃயி என்பது செய்ய வேண்டிய ஓர் அமலாகும், அது தவிர்க்க வேண்டிய செயல் அல்ல என்று நமக்கு தெளிவாகிறது.

## வார்த்தை பொதுவாக இருப்பதும் காரணம் குறிப்பாக இருப்பதும்:

ஒரு குறிப்பிட்ட காரணத்திற்காக வசனங்கள் இறங்கி இருந்தாலும் அவற்றின் வார்த்தைகள் பொதுவாக இருந்தால் அந்த வசனங்களின் சட்டம் அந்த சம்பவத்திற்கும் அது போன்ற எல்லா நிகழ்வுகளுக்கும் உரியதாகவே இருக்கும். ஏனெனில், குர்ஆன் உம்மத்தில் உள்ள எல்லோருக்கும் பொதுவாக சட்டம் கூறுவதற்காகத்தான் இறங்கியது. ஆகவே, வார்த்தையின் பொதுத் தன்மையைத்தான் கவனத்தில் எடுத்துக் கொள்ளப்படும். அது இறங்கிய குறிப்பான காரணத்தை (-நிகழ்வை) அல்ல.

இதற்கு உதாரணம் **لعان** லிஆன் தொடர்பாக இறங்கிய வசனங்கள் ஆகும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

**وَالَّذِينَ يَرْمُونَ أَزْوَاجَهُمْ وَلَمْ يَكُنْ لَهُمْ شُهَدَاءُ إِلَّا أَنْفُسُهُمْ فَشَهَادَةُ أَحَدِهِمْ أَرْبَعُ شَهَادَاتٍ بِاللَّهِ إِنَّهُ لَمِنَ الصَّادِقِينَ**

எவர்கள் தங்கள் மனைவிகள் மீது (விபசாரத்தைக் கொண்டு) குற்றம் கூறித் தங்களைத் தவிர அவர்களிடம் (நான்கு) சாட்சிகள் இல்லாமல் இருந்தால் அதற்காக அச்சமயம் நிச்சயமாக, தான் உண்மையே கூறுவதாக அல்லாஹ்வின் மீது நான்கு முறை அவர் சத்தியம் செய்து கூற வேண்டும். (அல்குர்ஆன் 24 : 6)

அது குறித்து இமாம் புகாரி ﷾ பதிவு செய்கிறார்கள்:[12]

12. ஸஹீஹுல் புகாரி, எண், 2671, 4747, 5307.

இப்னு அப்பாஸ் ﵄ அறிவிக்கிறார்கள்:

ஹிலால் இப்னு உமய்யா ﵁ தம் மனைவியை ஷரீக் இப்னு சஹ்மாவுடன் இணைத்து விபசாரக் குற்றம் சாட்டினார். நபி ﷺ அவர்கள், ஆதாரம் கொண்டு வா! இல்லையென்றால் (அவதூறு செய்ததற்கு தண்டனையாக) உன் முதுகில் கசையடி தரப்படும் என்று கூறினார்கள். அதற்கு அவர்கள், இறைத்தூதர் அவர்களே! எங்களில் ஒருவர், தன் மனைவியின் மேல் ஒரு மனிதரைப் பார்த்தாலும் ஆதாரம் தேடிச் செல்ல வேண்டுமா? என்று கேட்க, நபி ﷺ அவர்கள், ஆதாரம் கொண்டு வா! இல்லையென்றால் உன் முதுகில் கசையடி தரப்படும் என்று மீண்டும் கூறினார்கள். அதற்கு ஹிலால் ﵁ தங்களைச் சத்திய (மார்க்க)த்துடன் அனுப்பியவன் மீது ஆணையாக! நான் உண்மையே சொல்கிறேன். எனது முதுகைக் கசையடியிலிருந்து காப்பாற்றும் செய்தியை அல்லாஹ் நிச்சயம் இறக்குவான் என்று கூறினார்கள். அப்போது (வானவர்) ஜிப்ரீல் அலைஹிஸ் ஸலாம் அவர்கள் இறங்கி, நபி ﷺ அவர்களுக்கு,

**وَالَّذِينَ يَرمُونَ أَزوَٰجَهُم** என்பதிலிருந்து ஆரம்பித்து **إِنَّهُ لَمِنَ لصَّـٰدِقِينَ** வரை ஓதி காண்பித்தார்கள்.

இந்த வசனங்கள் ஹிலால் இப்னு உமய்யா தனது மனைவியின் மீது குற்றம் சுமத்தியதால் இறங்கின. ஆனாலும், இந்த வசனங்களின் சட்டம் ஹிலால் இப்னு உமய்யாவிற்கும் இது போன்ற பிரச்சனையில் சிக்கிகொண்ட அவர் அல்லாத மற்றவர்களுக்கும் பொதுவானதுதான்

இதற்கு ஆதாரமாக இமாம் புகாரி ﵀ பதிவு செய்த ஒரு சம்பவத்தைப் பார்ப்போம்.[13]

ஸஹ்ல் இப்னு ஸஅத் ﵁ அறிவிக்கிறார்கள்:

பனூ அஜ்லான் குலத்தாரின் தலைவராயிருந்த ஆஸிம் இப்னு அதீ ﵁ அவர்களிடம் (அதே குலத்தைச் சேர்ந்த) உவைமிர்

13. ஸஹீல் புகாரி, எண், 423, 4745

என்பவர் வந்து தன் மனைவியுடன் வேறொரு அந்நிய ஆடவன் (தகாத செயல் செய்த நிலையில்) இருப்பதை கண்ட மனிதனின் விஷயத்தில் என்ன கூறுகிறீர்கள்? அவன் அந்த அந்நிய ஆடவனைக் கொன்று விடலாமா? அவ்வாறு கொன்று விட்டால், (கிஸாஸ் -பழி வாங்கும் சட்டப்படி) அவனை நீங்கள் கொன்று விடுவீர்களா? அல்லது அவன் வேறு என்ன செய்ய வேண்டும்? எனக்காக இந்த விவகாரம் குறித்து இறைத்தூதர் ﷺ அவர்களிடம் நீங்கள் கேட்டுச் சொல்லுங்கள் என்று கூறினார். எனவே, ஆஸிம் ؓ இறைத்தூதர் ﷺ அவர்களிடம் சென்று, இறைத்தூதர் அவர்களே! (அந்த விஷயத்தைச் சொல்லி) விளக்கம் கேட்க, இறைத்தூதர் ﷺ அவர்கள் பதில் அளிக்காததால் (இத்தகைய) கேள்விகளை விரும்பவில்லை என்பதை உணர்ந்து கொண்டு திரும்பி வந்து விட்டார். நபி ﷺ அவர்கள் என்ன கூறினார்கள் என்று ஆஸிம் ؓ அவர்களிடம் உவைமிர் ؓ கேட்க, அவர்கள், இறைத்தூதர் ﷺ அவர்கள் இத்தகைய கேள்விகளை விரும்பவில்லை; மேலும், இப்படிக் கேட்பதை அவர்கள் அசிங்கமாகக் கருதுகிறார்கள் என்று பதில் கூறினார்கள். உடனே உவைமிர் ؓ, அல்லாஹ்வின் மீதாணையாக! நான் இறைத்தூதர் ﷺ அவர்களிடம் இதைப் பற்றிக் கேட்காமல் ஓய மாட்டேன் என்று கூறி விட்டு, நபி ﷺ அவர்களிடம் சென்று, இறைத்தூதர் அவர்களே! ஒரு மனிதன் தன் மனைவியுடன் அந்நிய ஆடவன் இருப்பதைப் பார்த்தால் அவன் அம்மனிதனைக் கொல்லலாமா? (அப்படிக் கொன்று விட்டால், பழிக்குப் பழியாக) நீங்கள் அம்மனிதனைக் கொன்று விடுவீர்களா? அல்லது அவன் வேறு என்ன செய்ய வேண்டும்? என்று கேட்டார். அதற்கு இறைத்தூதர் ﷺ அவர்கள் அல்லாஹ் உமது விஷயத்திலும் உமது மனைவி விஷயத்திலும் குர்ஆன் வசனத்தை அருளியுள்ளான் என்று கூறி, அவ்விருவருக்கும் அல்லாஹ் தன் வேதத்தில் குறிப்பிட்டுள்ள லிஆன் செய்யும்படி கட்டளையிட்டார்கள். அவ்வாறே, தம் மனைவி மீது (குற்றம் சாட்டி) உவைமிர் ؓ லிஆன் செய்தார்கள்.

ஆக, அல்குர்ஆன் 24 : 6 ஆறாவது வசனத்தின் சட்டத்தை ஹிலால் இப்னு உமய்யாவிற்கும் அவர் அல்லாத மற்றவர்களுக்கும் பொதுவானதாக நபி ﷺ அவர்கள் ஆக்கினார்கள்.[14]

14. முதலாவதாக வசனம் இறங்கியது ஹிலால் அவர்களின் விஷயத்தில்தான். ஆனால், அதன் வார்த்தைகள் பொதுவாக இருப்பதால் அந்த வசனம் கூறக்கூடிய சட்டம் அதுபோன்ற சிக்கலில் சிக்கிக் கொண்டவர்கள் எலோருக்கும் பொதுவாகவே இருக்கும். இன்றும் இதுபோன்று ஒரு சம்பவம் நடந்தால் அதற்கும் இதே சட்டம்தான் கூறப்படும்.



பாடம் 4

# اَلْـمَكِّيُّ وَالْـمَدَنِيُّ

# மக்கீ, மதனீ

குர்ஆன் (உடைய வசனங்கள் அல்லது அத்தியாயங்களை) மக்கி இன்னும் மதனி என இரு பகுதிகளாக வகைப்படுத்தலாம். குர்ஆன் பிரித்துப் பிரித்து, சிறிது சிறிதாக ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடைய வாழ்க்கையில் இருபத்தி மூன்று ஆண்டுகளில் இறக்கப்பட்டது. இவற்றில் அதிகமான காலங்களை நபி ﷺ அவர்கள் மக்காவில்தான் கழித்தார்கள்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَقُرْآنًا فَرَقْنَاهُ لِتَقْرَأَهُ عَلَى النَّاسِ عَلَى مُكْثٍ وَنَزَّلْنَاهُ تَنْزِيلا

(நபியே!) மனிதர்களுக்கு நீர் சிறிது சிறிதாக ஓதிக் காண்பிக்கும் பொருட்டு இந்த குர்ஆனை பல பாகங்களாக நாம் பிரித்தோம். அதற்காகவே நாம் இதைச் சிறுகச் சிறுகவும் இறக்கி வைக்கிறோம். (அல்குர்ஆன் 17 : 106)

ஆகவேதான், அறிஞர்கள் குர்ஆனை அது இறக்கப்பட்ட காலத்தை கவனித்து இரு வகையாக பிரித்து இருக்கின்றார்கள்.

1). மக்கீ -நபி ﷺ அவர்களின் மக்கா வாழ்க்கையில், அவர்கள் மதீனாவிற்கு ஹிஜ்ரத் செல்வதற்கு முன்னுள்ள காலக்கட்டத்தில் இறங்கியவை.

2). மதனீ -நபி ﷺ அவர்களின் மதீனா வாழ்க்கையில், ஹிஜ்ரத்திற்கு பின்னுள்ள காலக்கட்டத்தில் இறங்கியவை.

இந்த அடிப்படையில் பின்வருகின்ற வசனம் மதனீ வசனமாகும்.

الْيَوْمَ أَكْمَلْتُ لَكُمْ دِينَكُمْ وَأَتْمَمْتُ عَلَيْكُمْ نِعْمَتِي وَرَضِيتُ لَكُمُ الْإِسْلَامَ دِينًا

இன்றைய தினம் நான் உங்களுக்கு உங்கள் மார்க்கத்தை முழுமையாக்கி வைத்து, என் அருளையும் உங்கள் மீது முழுமையாக்கி வைத்து விட்டேன். உங்களுக்காக இந்த இஸ்லாமை மார்க்கமாக திருப்தியடைந்தேன் (அங்கீகரித்துக் கொண்டேன்).

(அல்குர்ஆன் 5 : 3)

இந்த வசனம் நபி ﷺ அவர்களுடைய ஹஜ்ஜத்துல் விதாவில் அரஃபா மைதானத்தில் மக்காவில் இறங்கியதுதான். ஆனால், ஹிஜ்ரத்திற்கு பின்னால் இறங்கியதால் இந்த வசனம் மதனீ வகையைச் சேர்ந்ததாகவே இருக்கும்.

இது குறித்து இமாம் புகாரி ؒ ஒரு நிகழ்வை பதிவு செய்கிறார்கள்.[15]

யூதர்களில் ஒருவர் உமர் ؓ அவர்களிடம் அமீருல் மூமினீன் அவர்களே! நீங்கள் உங்கள் வேதத்தில் ஓதிக் கொண்டிருக்கும் ஒரு வசனம் யூதர்களாகிய எங்களின் மீது இறங்கியிருந்தால் அந்நாளை நாங்கள் ஒரு பெருநாளாக எடுத்துக் கொண்டிருப்போம் என்றார். அதற்கு உமர் ؓ அது எந்த வசனம்? எனக் கேட்டார்கள். அதற்கவர்

الْيَوْمَ أَكْمَلْتُ لَكُمْ دِينَكُمْ وَأَتْمَمْتُ عَلَيْكُمْ نِعْمَتِي وَرَضِيتُ لَكُمُ الْإِسْلَامَ دِينًا

என்ற வசனம்தான் அது என்று கூறினார்.

15. அறிவிப்பாளர்: தாரிக் இப்னு ஷிஹாப் ؓ அறிவிக்கிறார்கள். நூல்: ஸஹீஹுல் புகாரி, எண், 45, 4407, 4606, 7268:

அதற்கு உமர் ﷺ அவ்வசனம் எந்த நாளில் எந்த இடத்தில் வைத்து நபி ﷺ அவர்களின் மீது இந்த வசனம் இறங்கியது என்பதை நாங்கள் அறிவோம். அரஃபா பெருவெளியில் ஒரு வெள்ளிக்கிழமை தினத்தில் நபி ﷺ அவர்கள் நின்று கொண்டிருக்கும்போதுதான் அவ்வசனம் அருளப்பட்டது என்றார்கள்.

## மக்கி மற்றும் மதனீ அத்தியாயங்களின் வித்தியாசங்கள்

மதனீ அத்தியாயங்களில் இருந்து மக்கீ அத்தியாயங்கள் வாக்கிய அமைப்பிலும் கருத்திலும் வித்தியாசமாக இருப்பதை கவனிக்க முடியும்.

### அ). வாக்கிய அமைப்பில் மக்கீ மற்றும் மதனீ வித்தியாசப்படுவது:

1). மக்கீ அத்தியாயங்களில் வாக்கிய அமைப்பு அழுத்தமாகவும் வலிமை மிக்கதாகவும் கனமாகவும் இருக்கும். ஏனெனில், அங்கு முன்னிலையில் இருந்தவர்கள் சத்தியத்தை புறக்கணித்தவர்கள், மறுத்தவர்கள், பெருமை கொண்டவர்கள் ஆவார்கள். ஆகவே, அவர்களுக்கு தகுந்தவிதத்தில்தான் வாக்கியமும் இருக்க வேண்டும். இதை கவனிக்க வேண்டும் என்றால் உதாரணத்திற்கு அல்முத்தஸ்ஸிர் 74வது அத்தியாயம் மற்றும் அல்கமர் 54வது அத்தியாயத்தை ஓதிப் பாருங்கள்.

மதனீ அத்தியாயங்களில் வாக்கிய நடையில் மென்மையும் இலகுவும் இருக்கும். ஏனெனில் முன்னிலையில் இருப்பவர்கள் இறை மார்க்கத்தை ஏற்றுக் கொண்டு, இறைவனுக்கு பணிந்து நடப்பவர்களாக இருந்தார்கள். இதை கவனிக்க வேண்டும் என்றால் அல்மாயிதா 5வது அத்தியாயத்தை ஓதிப் பார்க்கவும்.

2). மக்கீ அத்தியாயங்களில் வசனங்கள் சிறியதாக, சுருக்கமாக இருக்கும். தர்க்க ஆதாரங்கள் பலமாக இருக்கும். ஏனெனில், முன்னிலையில் இருந்தவர்கள் பிடிவாதம், முரண்டு பிடித்தவர்களாக இருந்தார்கள். ஆகவே, அவர்களின் நிலைக்கு ஏற்ப அவர்களிடம்

உரையாடப்பட்டது. இதை கவனிக்க உதாரணத்திற்கு அத்தூர் 52வது அத்தியாயத்தை ஓதிப் பார்க்கவும்.

மதனீ அத்தியாயங்களில் வசனங்கள் நீளமாக இருக்கும். தர்க்க வாதங்கள் இன்றி, சட்டங்கள் மட்டும் கூறப்பட்டிருக்கும். ஏனெனில், முன்னிலையில் இருந்தவர்கள் அந்த பக்குவம் உள்ளவர்களாக இருந்தார்கள். ஆகவே, அவர்களின் நிலைக்கு ஏற்ப அவ்வாறு உரையாடப்பட்டது. இதை கவனிப்பதற்கு உதாரணத்திற்கு அல்பகரா இரண்டாவது அத்தியாயத்தில் உள்ள 282வது வசனத்தை ஓதிப் பார்க்கவும். இந்த வசனத்திற்கு ஆயத்துத் தைன் **آية الدين** கடன் வசனம் என்று கூறப்படும்.

### ஆ). கருத்தை கவனித்து:

மக்கீ அத்தியாயமும் மதனீ அத்தியாயமும் கருத்தை கவனித்து சற்று வித்தியாசப்படும். அதாவது,

1). மக்கீ அத்தியாயங்களில் பெரும்பாலும் தவ்ஹீது -ஓரிறைக் கொள்கை, சரியான நம்பிக்கைகள் ஆகியவற்றை வலியுறுத்தி கூறப்பட்டிருக்கும். மேலும், குறிப்பாக தவ்ஹீதுல் உலூஹிய்யா -அல்லாஹ் ஒருவனை மட்டும் வணங்குவதையும் மறுமையில் உயிர் கொடுத்து எழுப்பப்படுவதையும் உறுதிப்படுத்துகின்ற வசனங்கள் அதிகம் இடம் பெற்றிருக்கும். ஏனெனில், முன்னிலையில் இருந்தவர்களில் பெரும்பாலானவர்கள் இவற்றை மறுப்பவர்களாக இருந்தார்கள்.

மதனீ அத்தியாயங்களில் வணக்க வழிப்பாடுகள், கொடுக்கல், வாங்கல், பொருளாதார சட்டங்கள் பெரும்பாலும் விவரிக்கப்பட்டிருக்கும். ஏனெனில், முன்னிலையில் இருந்தவர்கள் தவ்ஹீதையும் சரியான கொள்கைகளையும் உறுதியாக ஏற்றுக் கொண்டவர்களாக இருந்தார்கள். ஆகவே, அவர்கள் வணக்க வழிபாடுகள் மற்றும் பொருளாதார சட்டங்களின் பக்கம் தேவையுள்ளவர்களாக இருந்தார்கள்.

2). மதனீ அத்தியாயங்களில் ஜிஹாது மற்றும் அதன் சட்டங்கள், முனாஃபிக்குகள் மற்றும் அவர்களின் நிலைப்பாடுகள் விரிவாக கூறப்பட்டிருக்கும். அங்கு அவற்றின் தேவை இருந்த காரணத்தால் அவ்வாறு விரிவாக இந்த செய்திகள் கூறப்பட்டன. மதீனாவில்தான் ஜிஹாது சட்டமாக்கப்பட்டது. இன்னும் நிஃபாக் -நயவஞ்சகம் வெளிப்பட ஆரம்பித்தது. மக்கீ அத்தியாயங்களில் இந்த செய்திகள் இருக்காது.

## فَوَائِدُ مَعْرِفَةِ الْـمَدَنِيَّةِ وَالْـمَكِّيَةِ

## மதனீ, மக்கீ அத்தியாயங்களை அறிவதன் பலன்கள்

மதனீ, மக்கீ அத்தியாயங்களை அறிவது குர்ஆன் உடைய கல்விகளில் மிக முக்கியமான ஒன்றாகும். இதில் அநேக பலன்கள் உள்ளன.

1). இதன் மூலம், குர்ஆனின் இலக்கிய நயம் மிக உயர்ந்த தரத்தில் வெளிப்படுவதை அறிய முடிகிறது. இடத்திற்கு ஏற்ப, முன்னிலையில் இருப்பவர்களுக்கு ஏற்ப அழுத்தமாக, கடுமையாக, அல்லது மென்மையாக, இலகுவாக குர்ஆன் உரையாடுகின்றது.

2). **تشريع** தஷ்ரீஃ -சட்டமியற்றுதல் மிகுந்த ஞானத்துடன், உயர்ந்த தத்துவத்துடன், மிக சிறப்பாக அமையப் பெற்றிருப்பதை அறிய முடிகிறது. சிறிது சிறிதாக, படிப் படியாக, மிக மிக முக்கியமானது, மிக முக்கியமானது. முக்கியமானது, விரும்பத்தக்கது என முன்னால் இருப்பவர்களின் நிலைமைக்கு ஏற்ப, அவர்களுடைய ஏற்றுக் கொள்ளும் மன நிலைக்கு ஏற்ப சட்டங்கள் கொடுக்கப்பட்டதை இதன் மூலம் அறிய முடிகிறது.

3). அல்லாஹ்வின் பக்கம் அழைக்கின்ற அழைப்பாளர்களை முறையாக பயிற்றுவிப்பதும் அழைப்புப் பணியில் முன்னால் இருப்பவர்களை புரிந்து, அதற்கேற்ப அவர்களிடம் மிக

முக்கியமானது, பிறகு முக்கியமானது, பிறகு விரும்பத்தக்கதை கூறுவது, கடுமை காட்ட வேண்டிய இடத்தில் கடுமை காட்டுவது, மென்மை காட்ட வேண்டிய இடத்தில் மென்மை காட்டுவது என்ற அடிப்படையில் உரையாடுகின்ற அறிவைப் பெறுவதும் இதன் பலன்களில் உள்ளவையாகும்.

4). வசனங்களில் **ناسخ** மாற்றியவை, **منسوخ** மாற்றப்பட்டவை எது என்று பிரித்தறிவது மக்கீ, மதனீயை அறிவதின் பலன்களில் உள்ளதாகும். உதாரணமாக, ஒரு விஷயத்தைப் பற்றி பேசுகின்ற இரு வசனங்களில் ஒன்று மக்கீயாகவும் மற்றொன்று மதனீயாகவும் இருந்து, **نسخ** - மாற்றுவதற்குரிய சட்ட நிபந்தனைகள் அவற்றில் சரியாக அமையப் பெற்றால் மதனீ வசனம் மக்கீ வசனத்தை -அதன் சட்டத்தை மாற்றி விடும். ஏனெனில், மக்கீ வசனத்திற்குப் பிறகுதான் மதனீ வசனங்கள் இறங்கின.

## اَلْحِكْمَةُ مِنْ نُزُولِ الْقُرْآنِ مُفَرَّقًا

## குர்ஆன் பிரித்து பிரித்து இறக்கப்பட்டதில் உள்ள தத்துவம்

மக்கீ மற்றும் மதனீ என இரு பகுதிகளாக வகைப்படுத்தியதில் இருந்து நபி ﷺ அவர்கள் மீது குர்ஆன் பிரித்து பிரித்து சிறிது சிறிதாக இறக்கப்பட்டது என்பதை நாம் தெளிவாக அறிய முடிகிறது. இவ்வாறு இறக்கப்பட்டதில் அநேக தத்துவங்கள் உள்ளன. அவற்றில்,

1). நபி ﷺ அவர்களின் உள்ளத்தை உறுதிபடுத்துவது, ஸ்திரப்படுத்துவது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَقَالَ الَّذِينَ كَفَرُوا لَوْلَا نُزِّلَ عَلَيْهِ الْقُرْآنُ جُمْلَةً وَاحِدَةً كَذَلِكَ

لِنُثَبِّتَ بِهِ فُؤَادَكَ وَرَتَّلْنَاهُ تَرْتِيلًا ○ وَلَا يَأْتُونَكَ بِمَثَلٍ إِلَّا جِئْنَاكَ بِالْحَقِّ وَأَحْسَنَ تَفْسِيرًا○

(நபியே!) எவர்கள் (உங்களை) நிராகரிக்கிறார்களோ அவர்கள் "இந்த வேதம் முழுவதும் ஒரே தடவையில் இறக்கப்பட வேண்டாமா?" என்று கூறுகின்றனர். (இதனை) இவ்வாறு நாம் கொஞ்சம் கொஞ்சமாக இறக்கி (வரிசை முறைப்படி) ஒழுங்கு படுத்துவதெல்லாம் உங்கள் உள்ளத்தைத் திடப்படுத்துவதற்காகவே! இந்நிராகரிப்பவர்கள் (எத்தகைய கேள்விகளைக் கேட்டு அதற்காக ஆச்சரியமான) எந்த உதாரணத்தை உங்களிடம் அவர்கள் கொண்டு வந்த போதிலும் (அதைவிட) உண்மையான விஷயத்தையும், அழகான வியாக்கியானத்தையும் நாம் உங்களுக்கு கூறாமல் இருக்கவில்லை. (அல்குர்ஆன் 25 : 32, 33)

2). மக்கள் மனனம் செய்வதும் புரிவதும் அமல் செய்வதும் இலகுவாக இருப்பதற்காக இவ்வாறு இறக்கப்பட்டது. வசனங்கள் கொஞ்சம் கொஞ்சமாக இறங்க, நபி ﷺ அவர்கள் மக்களுக்கு அவற்றை ஓதி காண்பிப்பார்கள். அப்போது மக்கள் இலகுவாக அவற்றை மனனம் செய்து கொள்வார்கள். இன்னும் அவற்றை புரிந்து அமல்படுத்துவதும் அவர்களுக்கு இலகுவாக இருக்கும். ஒரே நேரத்தில் மொத்தமாக இறக்கப்பட்டு விட்டால் மனனம் செய்வதும் கஷ்டமாக இருக்கும். அமல் செய்வது அதைவிட கஷ்டமாக ஆகிவிடும்.

وَقُرْآنًا فَرَقْنَاهُ لِتَقْرَأَهُ عَلَى النَّاسِ عَلَىٰ مُكْثٍ وَنَزَّلْنَاهُ تَنزِيلا

(நபியே!) மனிதர்களுக்கு நீங்கள் சிறிது சிறிதாக ஓதிக் காண்பிக்கும் பொருட்டு இந்தக் குர்ஆனை பல பாகங்களாக நாம் பிரித்தோம். அதற்காகவே நாம் இதனைச் சிறுகச் சிறுகவும் இறக்கி வைக்கிறோம். (அல்குர்ஆன் 17 : 106)

3). வசனங்கள் கொஞ்சம் கொஞ்சமாக இறங்கி கொண்டு இருந்தால் புதிது புதிதாக வசனங்கள் இறங்குவதை ஆர்வத்துடன் எதிர் பார்பார்த்து இருப்போம். அவற்றை ஏற்றுக் கொண்டு அமல் செய்வதிலும் ஆர்வம் இருக்கும். ஆகவே, ஆர்வமூட்டுவது, உற்சாகப்படுத்துவது இதன் தத்துவங்களில் ஒன்றாகும். இதிலும் குறிப்பாக வசனங்கள் இறங்குவது தேவையாக இருக்கும் நேரத்தில் அதன் பக்கம் ஆர்வம் அதிகமாக இருக்கும். உதாரணமாக, இஃப்க், லிஆன் உடைய வசனங்கள் இறங்கியதைப் போல்.

4). சட்டம் இயற்றுவதில் படிப்படியாக சென்று பரிபூரணத்தை அடைவது. இதை புரிவதற்கு உதாரணமாக மது தொடர்பாக இறங்கிய வசனங்களை கவனிக்கவும்.

மக்கள் மதுவை பழகி இருந்தார்கள். உடனடியாக அதை விடுவது அவர்களுக்கு சிரமமாக இருந்தது. ஆகவே, முதலாவதாக இந்த வசனம் இறங்கியது:

يَسْأَلُونَكَ عَنِ الْخَمْرِ وَالْمَيْسِرِ قُلْ فِيهِمَا إِثْمٌ كَبِيرٌ وَمَنَافِعُ لِلنَّاسِ وَإِثْمُهُمَا أَكْبَرُ مِنْ نَفْعِهِمَا

(நபியே!) மதுவைப் பற்றியும் சூதாட்டத்தைப் பற்றியும் உம்மிடம் கேட்கின்றனர். (அதற்கு) நீர் கூறுவீராக! அவ்விரண்டிலும் பெரும் பாவங்களும் இருக்கின்றன; மனிதர்களுக்குச் சில பயன்களும் இருக்கின்றன. ஆனால், அவற்றில் உள்ள பாவம் அவற்றிலுள்ள பயனைவிட மிகப் பெரிது. (அல்குர்ஆன் 2 : 219)

இந்த வசனத்தில் மது ஹராம் ஆகுவதை ஏற்றுக்கொள்வதற்கு உள்ளங்கள் தயார்படுத்தப்பட்டன. ஏனெனில், நன்மையைவிட பாவம் அதிகமாக உள்ள ஒரு காரியத்தை செய்வதற்கு அறிவு இடம் கொடுக்காது.

பிறகு, இரண்டாவதாக பின்வரும் வசனம் இறங்கியது:

**يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا لَا تَقْرَبُوا الصَّلَاةَ وَأَنْتُمْ سُكَارَى حَتَّى تَعْلَمُوا مَا تَقُولُونَ**

நம்பிக்கையாளர்களே! நீங்கள் கூறுவது இன்னதென்று நீங்கள் அறிந்துகொள்ள முடியாதவாறு நீங்கள் போதையாயிருக்கும் சமயத்தில் தொழுகைக்குச் செல்லாதீர்கள். (அல்குர்ஆன் 4 : 43)

இந்த வசனத்தில் தொழுகையின் நேரங்களில் மதுவைவிட்டு விலகி இருப்பதற்கு பயிற்சி அளிக்கப்பட்டது. பிறகு, மூன்றாவதாக பின்வரும் வசனம் இறங்கியது:

**يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا إِنَّمَا الْخَمْرُ وَالْمَيْسِرُ وَالْأَنْصَابُ وَالْأَزْلَامُ رِجْسٌ مِنْ عَمَلِ الشَّيْطَانِ فَاجْتَنِبُوهُ لَعَلَّكُمْ تُفْلِحُونَ ○ إِنَّمَا يُرِيدُ الشَّيْطَانُ أَنْ يُوقِعَ بَيْنَكُمُ الْعَدَاوَةَ وَالْبَغْضَاءَ فِي الْخَمْرِ وَالْمَيْسِرِ وَيَصُدَّكُمْ عَنْ ذِكْرِ اللهِ وَعَنِ الصَّلَاةِ فَهَلْ أَنْتُمْ مُنْتَهُونَ ○ وَأَطِيعُوا اللّٰهَ وَأَطِيعُوا الرَّسُولَ وَاحْذَرُوا فَإِنْ تَوَلَّيْتُمْ فَاعْلَمُوا أَنَّمَا عَلَى رَسُولِنَا الْبَلَاغُ الْمُبِينُ ○**

நம்பிக்கையாளர்களே! நிச்சயமாக மது, சூதாட்டம், சிலை வணக்கம், அம்பெறிந்து குறி கேட்பது ஆகிய இவை ஷைத்தானுடைய அருவருக்கத்தக்க வேலைகளில் உள்ளவையாகும். ஆகவே, இவற்றில் இருந்து நீங்கள் விலகிக்கொள்ளுங்கள். (அதனால்) நீங்கள் வெற்றியடைவீர்கள். மதுவாலும் சூதாட்டத்தாலும் உங்களுக்கிடையில் பகைமையையும் பொறாமையையும் உண்டுபண்ணி அல்லாஹ்வின் ஞாபகத்திலிருந்தும், தொழுகையிலிருந்தும் உங்களைத் தடுத்து விடவுமே நிச்சயமாக ஷைத்தான் விரும்புகிறான். (ஆகவே,

அவற்றிலிருந்து) நீங்கள் விலகிக் கொள்வீர்களா (மாட்டீர்களா)? அல்லாஹ்வுக்கு கட்டுப்படுங்கள்; (அல்லாஹ்வுடைய) தூதருக்கும் கட்டுப்படுங்கள். (அவர்களுக்கு மாறு செய்யாது) எச்சரிக்கையாக இருங்கள். (இதை) நீங்கள் புறக்கணித்து விட்டால் (நம் கட்டளைகளை, உங்களுக்குத்) தெளிவாக எடுத்துரைப்பது மட்டுமே நம் தூதர்மீது கடமையாகும் என்பதை நிச்சயமாக நீங்கள் அறிந்து கொள்ளுங்கள். (அல்குர்ஆன் 5 : 90-92)

மதுவின் தீமைகளை அறிந்து உள்ளங்கள் அதை வெறுப்பதற்கு பக்குவம் பெற்ற பின்னர், மேலும் குறிப்பிட்ட நேரங்களில் மதுவை விட்டு விலகி இருப்பதற்கு பயிற்சி அளிக்கப்பட்ட பின்னர் எல்லா நேரங்களிலும் மதுவை விட்டு விலகி இருப்பதற்கு மேற்கண்ட வசனத்தின் மூலம் உறுதியான கட்டளை கொடுக்கப்பட்டு. மது முற்றிலுமாக தடை செய்யப்பட்டது.

## تَرْتِيْبُ الْقُرْآن

## குர்ஆனை வரிசைப்படுத்துவது

குர்ஆனை வரிசைப்படுத்து என்றால், முஸ்ஹஃப் -குர்ஆன் பிரதிகளில் எழுதப்பட்டிருப்பதைப் போன்றும் நெஞ்சங்களில் மனனம் செய்யப்பட்டிருப்பதைப் போன்றும் ஒன்றை தொடர்ந்து ஒன்றை ஓதுவதாகும்.

இது மூன்று வகைகளாகும்.

**முதலாவது வகை:** பதங்களை வரிசைப்படுத்துவது.

அதாவது, வசனங்களில் உள்ள ஒவ்வொரு பதமும் அதன் இடத்தில் இருக்கும்படி வரிசைப்படுத்துவது. இந்த வகை வரிசை ஆதாரத்தைக் கொண்டும் இஜ்மா -ஏகோபித்த முடிவைக்கொண்டும் நிரூபணமாகி இருக்கின்றது. இதில் மாறுபட்ட கருத்து யாருக்கும் இருப்பதாக நாம் அறிய மாட்டோம். ஆகவே,

اَلْـحَمْدُ لِلّٰهِ رَبِّ العَالَمِينَ

என்பதை,

لِلّٰهِ الْـحَمْدُ رَبِّ الْعَالَمِينَ

என்று ஓதக்கூடாது.

அல்லது

لِلّٰهِ رَبِّ العَالَمِينَ الْـحَمْدُ

என்றும் ஓதக்கூடாது.[16]

**இரண்டாவது வகை:** வசனங்களை வரிசையாக ஓதுவது.

அதாவது சூராவில் ஒவ்வொரு வசனமும் அதற்குரிய இடத்தில் இருக்க வேண்டும். வசனங்கள் இப்போது வரிசைப் படுத்தப்பட்டிருப்பதைப் போன்றுதான் ஓதவேண்டும். அவற்றை முன்பின் மாற்றி ஓதக்கூடாது. இதுவும் ஆதாரங்களைக் கொண்டும் இஜ்மா -ஏகோபித்த முடிவைக் கொண்டும் நிரூபணமான ஒன்றாகும். ஆகவே, இந்த வரிசை முறைப்படிதான் ஓதியாக வேண்டும். அதற்கு மாற்றமாக, வசனங்களை முன்பின் மாற்றி ஓதுவது ஹராம் -தடுக்கப்பட்ட பாவமாகும். ஆகவே,

الْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِينَ○ الرَّحْمَنِ الرَّحِيمِ ○ مَالِكِ يَوْمِ الدِّينِ○

என்ற வசனத்தை,

16. அரபி இலக்கணப்படி வாக்கிய அமைப்பு சரியாக இருந்தாலும் இது ரஸூலுல்லாஹி ﷺ அவர்கள் நபித்தோழர்களுக்கு ஓதிக்காட்டிய வார்த்தை அமைப்புக்கு மாற்றமானதாகும். ஆகவே, இவ்வாறு வார்த்தைகளை இடம்மாற்றி ஓதுவது குற்றமாகும், அது இலக்கண முறைப்படி சரியாக இருந்தாலும் சரியே.

الْحَمْدُ لِلَّهِ رَبِّ الْعَالَمِينَ ○ مَالِكِ يَوْمِ الدِّينِ ○ الرَّحْمَنِ الرَّحِيمِ○

என்று ஓதுவது கூடாது.

இமாம் புகாரி ﵀ பதிவு செய்கிறார்கள்[17]

அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் ﵁ அறிவிக்கிறார்கள். நான், உஸ்மான் இப்னு அஃப்பான் ﵁ அவர்களிடம்,

وَالَّذِينَ يُتَوَفَّوْنَ مِنْكُمْ وَيَذَرُونَ أَزْوَاجًا وَصِيَّةً لِأَزْوَاجِهِمْ مَتَاعًا إِلَى الْحَوْلِ غَيْرَ إِخْرَاجٍ

பொருள்: உங்களில் மனைவியரைவிட்டு இற(க்கும் தருணத்தில் இரு)ப்பவர்கள், தங்கள் மனைவியரை (வீட்டிலிருந்து) வெளியேற்றி விடாமல் ஓராண்டு வரை பராமரிக்குமாறு (உறவினர்களிடம்) மரணசாசனம் செய்வார்களாக!

எனும் 2 : 240 வது வசனத்தின் சட்டத்தை,

وَالَّذِينَ يُتَوَفَّوْنَ مِنْكُمْ وَيَذَرُونَ أَزْوَاجًا يَتَرَبَّصْنَ بِأَنْفُسِهِنَّ أَرْبَعَةَ أَشْهُرٍ وَعَشْرًا فَإِذَا بَلَغْنَ أَجَلَهُنَّ فَلَا جُنَاحَ عَلَيْكُمْ فِيمَا فَعَلْنَ فِي أَنْفُسِهِنَّ بِالْمَعْرُوفِ وَاللَّهُ بِمَا تَعْمَلُونَ خَبِيرٌ

பொருள்: உங்களில் எவரேனும் மனைவிகளை விட்டு இறந்தால், மனைவிகள் நான்கு மாதம் பத்து நாட்கள் எதிர்பார்த்திருக்கவும். (இதற்கு மரண இத்தா என்று பெயர்.) ஆதலால் அவர்கள் தங்களுடைய (இத்தாவின்) தவணையை முடித்துவிட்டால் (அவர்களில் மறுமணம் செய்ய விருப்பமுள்ளவர்கள்) தங்களை ஒழுங்கான முறையில் (அலங்காரம்) ஏதும் செய்து கொள்வதைப் பற்றி

17. ஸஹீஹுல் புகாரி, எண், 4536, 4530

குற்றமில்லை. நீங்கள் செய்வதை அல்லாஹ் நன்கறிந்தவனாகவே இருக்கின்றான்.

2 : 234 வது என்ற மற்றொரு வசனம் மாற்றிவிட்டதே! அப்படி இருக்க இதை (-ஏன் நீங்கள் (இன்னமும் குர்ஆன் வசனங்களில் முன்னர்) எழுதுகிறீர்கள்? (மாற்றப்பட்ட வசனம்தானே முன்னர் இருக்க வேண்டும். மாற்றிய வசனம் பின்னர்தானே இருக்க வேண்டும். முஸ்ஹஃபில் மாற்றிய வசனம் முன்னரும் மாற்றப்பட்ட வசனம் பின்னரும் இருக்கின்றதே) என்று கேட்டேன். அதற்கு உஸ்மான் ﵁ கூறினார்கள்: என் சகோதரரின் மகனே! இதிலிருந்து (-குர்ஆனிலிருந்து) எதையும் அதனுடைய இடத்திலிருந்து நான் மாற்ற மாட்டேன்.

உஸ்மான் ﵁ கூறுவதாக இமாம்கள் அஹ்மது, அபூ தாவூத், நசாயி, திர்மிதி ﵏ ஆகியோர் பின்வரும் ஒரு செய்தியை பதிவு செய்கிறார்கள்:

நிச்சயமாக நபி ﷺ அவர்கள் மீது பல வசனங்களுடைய சூராக்கள் இறங்கிக் கொண்டிருந்தன. அவர்கள் மீது ஒரு வசனம் இறங்கினால் உடனே எழுதுகின்ற சிலரை அழைத்து இந்த ஆயத்துகளை இவ்வாறு, இவ்வாறு கூறப்பட்டு வருகின்ற இந்த சூராவில் வையுங்கள் என்று நபி ﷺ அவர்கள் கூறுவார்கள்.[18]

**மூன்றாவது வகை:** சூராக்களின் வரிசை முறை.

இன்று முஸ்ஹஃபில் நாம் பார்க்கின்ற வரிசை முறைப்படி சூராக்களை வரிசைப்படுத்தி இருப்பது நபித்தோழர்களின் ஆய்வின் அடிப்படையில் வரிசைப்படுத்தப்பட்டதாகும். ஆகவே, இந்த வரிசையில்தான் ஓத வேண்டும் என்பது வாஜிப் -கட்டாயம் ஆகாது.

ஹுதைஃபா இப்னுல் யமான் ﵁ அவர்கள் வாயிலாக இமாம் முஸ்லிம் ﵀ பதிவு செய்கிறார்கள்.[19]

18. திர்மிதி எண்: 3086, அபூதாவூது 786, நஸாஈ 8007, அஹ்மது 460.
19. முஸ்லிம், எண்: 772

நான் ஓர் இரவு நபி ﷺ அவர்களுடன் தொழுதேன். அவர்கள் சூரா பகராவை ஓதினார்கள். பிறகு, சூரா நிசாவை, பிறகு, சூரா ஆலு இம்ரானை ஓதினார்கள்.

இமாம் புகாரி ؒ அவர்கள் வரிசைத் தொடர் இல்லாமல் பதிவு செய்துள்ளார்கள்: அஹ்னஃப் (என்ற தாபியி) முதல் ரக்அத்தில் கஹ்ஃப் ஓதினார்கள். இரண்டாவது ரக்அத்தில் யூஸுஃப் அல்லது யூனுஸ் ஓதினார்கள். மேலும், தான் உமர் இப்னுல் கத்தாப் ؓ அவர்களுடன் தொழுதபோது அவர்கள் இந்த இரண்டு சூராக்களையும் (இவ்வாறு) ஓதியதாக அஹ்னஃப் கூறினார்கள்.[20]

ஷைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா ؒ கூறுகிறார்கள்: இந்த சூராவை இந்த சூராவிற்கு முன்பாக ஓதுவதும் எழுதுவதும் கூடும். ஆகவேதான் நபித்தோழர்கள் எழுதி வைத்திருந்த குர்ஆன் பிரதிகள் சூராக்கள் இடம்பெறுவதில் பலவகையாக இருந்தன. என்றாலும், உஸ்மான் ؓ அவர்களின் காலத்தில் எழுதப்பட்ட குர்ஆன் பிரதியை அனைவரும் ஏற்றுக்கொண்டதால் அதுவே பிற்காலத்தில் பிரபலமாக ஆகிவிட்டது. காரணம் அதை கலீஃபாக்களாகிய உஸ்மான் ؓ அவர்களுக்குப்பின் அலி ؓ அமல்படுத்தினார்கள். கலீஃபாக்கள் செய்கின்ற செயலை, அவர்களின் நடைமுறையை நாம் பின்பற்ற வேண்டும் என்று நபிமொழி கூறுகிறது.[21]

-----------------

20. ஸஹீஹுல் புகாரி, அத்தியாயம்: அதான் கூறுவது, பாடம்: இரு சூராக்களை சேர்த்து ஒரே ரக்அத்தில் ஓதுவது.
21. அந்த ஹதீஸாவது எனது வழிமுறையையும் எனக்குப் பின்னால் வருகின்ற நேர்வழி பெற்ற, நேர்வழி காட்டப்பட்ட கலீபாக்களின் வழிமுறையையும் நீங்கள் பின்பற்றுங்கள். அவற்றை கடவாய்ப் பற்களைக் கொண்டு பற்றிப் பிடியுங்கள். அறிவிப்பாளர்: இர்பாழ் இப்னு ஸாரியா, நூல்: இப்னு மாஜா, எண்: 42, தரம்: ஸஹீஹ்.



பாடம் 5

كِتَابَةُ الْقُرْآنِ وَجَمْعُهُ

# குர்ஆன் எழுதப்படுவது மற்றும் அது ஒன்று சேர்ப்பது

குர்ஆன் எழுதப்பட்டதும் அது ஒன்று சேர்க்கப்பட்டதும் மூன்று கட்டங்களாக முழுமை பெற்றன.

**முதலாவது கட்டம்:** இது நபி ﷺ அவர்களின் காலமாகும். இக்காலகட்டத்தில் வாழ்ந்தவர்கள் எழுத்தை விட ஞாபக சக்தியை அதிகம் சார்ந்து இருந்தார்கள். அதற்கு காரணம், அக்காலத்தில் வாழ்ந்தவர்களிடம் நினைவாற்றலும் விரைவாக மனனம் செய்கின்ற திறமையும் இருந்தது. அத்துடன் அக்காலத்தில் எழுதுகின்றவர்களும் குறைவாக இருந்தார்கள். எழுதுவதற்குரிய சாதனங்களும் குறைவாக இருந்தன. ஆகவேதான், குர்ஆன் ஒரே பிரதியில் முழுமையாக ஒன்று சேர்க்கப்படாமல் இருந்தது. மாறாக, யார் ஒரு வசனத்தை செவியுறுவாரோ அவர் உடனே அதை மனனம் செய்து கொள்வார். அல்லது, தனக்கு சாத்தியமான ஒரு பொருளில் அதை எழுதிக் கொள்வார். உதாரணமாக, பேரீத்த மட்டைகள், துண்டு தோல்கள், பட்டையான கற்கள், தோல் புஜ எலும்புத் துண்டகள். மேலும், அக்காலத்தில் குர்ஆனை மனனம் செய்தவர்கள் எண்ணிக்கையில் அதிகமாகவும் இருந்தார்கள்.

இமாம் புகாரி ﵀ பதிவு செய்கிறார்கள்:[22]

அனஸ் ﵁ அறிவிக்கின்றார்கள்: நபி ﷺ அவர்களிடம் ரிஅல், தக்வான், உஸய்யா, பனூ லிஹ்யான் ஆகிய குலத்தவர்கள் (சிலர்)

22. எண்: 3064

வந்து, தாங்கள் இஸ்லாத்தை ஏற்றதாகக் கூறினர். மேலும், தம் சமுதாயத்தினரை நோக்கி ஒரு படையை அனுப்ப உத்தரவிடும் படியும் நபி ﷺ அவர்களிடம் அவர்கள் கேட்டுக் கொண்டனர். நபி ﷺ அவர்கள், அன்சாரிகளிலிருந்து எழுபது பேரை அனுப்பி அவர்களுக்கு உதவினார்கள். அவர்களை நாங்கள் காரீகள் (-குர்ஆனை மனனம் செய்த அறிஞர்கள்) என்று அழைத்து வந்தோம். அவர்கள் பகல் நேரத்தில் விறகு சேகரிப்பார்கள்; இரவு நேரத்தில் தொழுவார்கள். அவர்களை அழைத்துக் கொண்டு அந்தக் குலத்தவர்கள் சென்றனர். இறுதியில், "பிஃரு மஊனா" என்னுமிடத்தை அவர்கள் அடைந்தவுடன் அழைத்து சென்ற முஸ்லிம்களை ஏமாற்றிக் கொன்று விட்டனர்.

தோழர்களில் இவர்கள் போக இன்னும் அதிகமானவர்கள் குர்ஆனை மனனம் செய்து இருந்தார்கள். உதாரணமாக: நான்கு கலீஃபாக்கள், அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத், சாலிம், உபை இப்னு கஅப், முஆத் இப்னு ஜபல், சைது இப்னு ஸாபித், அபுத் தர்தா رضي الله عنهم.

**இரண்டாவது கட்டம்:**

அபூ பக்ர் رضي الله عنه அவர்களுடைய காலம். ஹிஜ்ரி பன்னிரெண்டாவது ஆண்டு இது நிறைவுற்றது. அபூ பக்ர் رضي الله عنه அவர்களின் காலத்தில் யமாமாவில் நடைப்பெற்ற போரில் குர்ஆன் மனனம் செய்திருந்த பல தோழர்கள் கொல்லப்பட்டு விட்டனர். அவர்களில் குறிப்பாக நபி ﷺ அவர்கள் குர்ஆனை நாம் யாரிடமிருந்து கற்கவேண்டும் என்று அனுமதி வழங்கியிருந்தார்களோ அந்த தோழர்களில் ஒருவரான சாலிம் மவ்லா அபீ ஹுதைஃபாவும் இருந்தார்கள். ஆகவே, குர்ஆன் பாதுகாக்கப்பட வேண்டும் என்பதற்காக அதை ஒரு பிரதியில் ஒன்று சேர்க்க வேண்டும் என அபூ பக்ர் رضي الله عنه அவர்கள் கட்டளையிட்டார்கள்.

இது குறித்து இமாம் புகாரி رحمه الله பதிவு செய்கிறார்கள்:[23]

23. எண்: 7191

عَنْ عُبَيْدِ بْنِ السَّبَّاقِ ﵁ أَنَّ زَيْدَ بْنَ ثَابِتٍ ﵁ قَالَ أَرْسَلَ إِلَيَّ أَبُو بَكْرٍ مَقْتَلَ أَهْلِ اليَمَامَةِ فَإِذَا عُمَرُ بْنُ الخَطَّابِ عِنْدَهُ قَالَ أَبُو بَكْرٍ ﵁ إِنَّ عُمَرَ أَتَانِي فَقَالَ إِنَّ القَتْلَ قَدْ اسْتَحَرَّ يَوْمَ اليَمَامَةِ بِقُرَّاءِ القُرْآنِ وَإِنِّي أَخْشَى أَنْ يَسْتَحِرَّ القَتْلُ بِالقُرَّاءِ بِالْمَوَاطِنِ فَيَذْهَبَ كَثِيرٌ مِنَ القُرْآنِ وَإِنِّي أَرَى أَنْ تَأْمُرَ بِجَمْعِ القُرْآنِ قُلْتُ لِعُمَرَ كَيْفَ تَفْعَلُ شَيْئًا لَمْ يَفْعَلْهُ رَسُولُ اللهِ ﷺ قَالَ عُمَرُ هَذَا وَاللهِ خَيْرٌ فَلَمْ يَزَلْ عُمَرُ يُرَاجِعُنِي حَتَّى شَرَحَ اللهُ صَدْرِي لِذَلِكَ وَرَأَيْتُ فِي ذَلِكَ الَّذِي رَأَى عُمَرُ قَالَ زَيْدٌ قَالَ أَبُو بَكْرٍ إِنَّكَ رَجُلٌ شَابٌّ عَاقِلٌ لاَ نَتَّهِمُكَ وَقَدْ كُنْتَ تَكْتُبُ الوَحْيَ لِرَسُولِ اللهِ ﷺ فَتَتَبَّعِ القُرْآنَ فَاجْمَعْهُ فَوَ اللهِ لَوْ كَلَّفُونِي نَقْلَ جَبَلٍ مِنَ الجِبَالِ مَا كَانَ أَثْقَلَ عَلَيَّ مِمَّا أَمَرَنِي بِهِ مِنْ جَمْعِ القُرْآنِ قُلْتُ كَيْفَ تَفْعَلُونَ شَيْئًا لَمْ يَفْعَلْهُ رَسُولُ اللهِ ﷺ قَالَ هُوَ وَاللهِ خَيْرٌ فَلَمْ يَزَلْ أَبُو بَكْرٍ يُرَاجِعُنِي حَتَّى شَرَحَ اللهُ صَدْرِي لِلَّذِي شَرَحَ لَهُ صَدْرَ أَبِي بَكْرٍ وَعُمَرَ ﵄ فَتَتَبَّعْتُ القُرْآنَ أَجْمَعُهُ مِنَ العُسُبِ وَاللِّخَافِ وَصُدُورِ الرِّجَالِ حَتَّى وَجَدْتُ آخِرَ سُورَةِ التَّوْبَةِ مَعَ أَبِي خُزَيْمَةَ الأَنْصَارِيِّ لَمْ أَجِدْهَا مَعَ أَحَدٍ غَيْرِهِ {لَقَدْ جَاءَكُمْ رَسُولٌ مِنْ أَنْفُسِكُمْ عَزِيزٌ عَلَيْهِ مَا عَنِتُّمْ} [التوبة: ١٢٨] حَتَّى خَاتِمَةِ بَرَاءَةَ فَكَانَتِ الصُّحُفُ عِنْدَ أَبِي بَكْرٍ حَتَّى تَوَفَّاهُ اللهُ ثُمَّ عِنْدَ عُمَرَ حَيَاتَهُ ثُمَّ عِنْدَ حَفْصَةَ بِنْتِ عُمَرَ ﵁

ஸைத் இப்னு ஸாபித் ﷺ அறிவிக்கிறார்கள்: யமாமா (போரில்) வீரர்கள் கொல்லப்பட்டபோது அபூ பக்ர் ﷺ அவர்கள் (என்னை அழைத்து வரும்படி) ஆளனுப்பினார்கள். (நான் சென்றேன்.) அங்கே அவர்களுடன் உமர் ﷺ அவர்களும் இருந்தார்கள். அப்போது அபூ பக்ர் ﷺ கூறினார்: உமர் ﷺ அவர்கள் என்னிடம் வந்து, இந்த யமாமா போரில் குர்ஆன் அறிஞர்கள் பலர் கொல்லப்பட்டு விட்டனர். (இறைமறுப்பாளர்களுடன் போர் நடக்கும்) எல்லா இடங்களிலும் குர்ஆனை மனனம் செய்த அறிஞர்கள் பலர் கொல்லப்படுகின்றனர். அதனால் குர்ஆனில் பெரும்பகுதி (அந்த நெஞ்சங்களுடன் அழிந்து) போய்விடுமோ என்று நான் அஞ்சுகிறேன். எனவே, (கலீஃபாவான) நீங்கள் குர்ஆனை ஒரு பிரதியில் ஒன்று திரட்டுமாறு ஆணையிட வேண்டுமென கருதுகிறேன் என்று கூறினார்கள். அதற்கு நான், இறைத்தூதர் ﷺ அவர்கள் செய்யாத ஒன்றை நான் எப்படிச் செய்ய முடியும்? என்று (உமர் ﷺ அவர்களிடம்) கேட்டேன். அதற்கு உமர் ﷺ அவர்கள், அல்லாஹ்வின் மீதாணையாக! இது நன்மை(யான பணி)தான் என்று கூறினார்கள். இது விஷயமாக தொடர்ந்து உமர் ﷺ அவர்கள் என்னிடம் வலியுறுத்திக் கொண்டேயிருந்தார்கள். முடிவில், உமர் ﷺ அவர்கள் மனதை அல்லாஹ் எதற்காக விரிவாக்கினானோ அதற்காக என் மனதையும் அவன் விரிவாக்கினான்; எதை உமர் ﷺ அவர்கள் நன்மையென கருதினார்களோ அதையே நானும் பொருத்தமானதாகக் கண்டேன். பிறகு அபூ பக்ர் ﷺ அவர்கள் (என்னிடம்), நீங்கள் புத்திசாலியான இளைஞர்; உங்களை நாங்கள் (எந்த விதத்திலும்) சந்தேகப்பட்டதில்லை. நீங்கள் இறைத்தூதர் ﷺ அவர்களுக்காக வஹ்யை எழுதக்கூடியவராயிருந்தீர்கள். எனவே, (தனித்தனி பிரதிகளில் பல்வேறு நபித்தோழர்களிடம் இருக்கும்) குர்ஆன் வசனங்களைத் தேடி (ஒரே பிரதியில்) ஒன்று திரட்டுங்கள் என்றார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! மலைகளில் ஒன்றை நகர்த்த வேண்டுமென என்னை அவர்கள் பணிந்திருந்தாலும் கூட அது எனக்குப் பளுவாக இருந்திருக்காது. குர்ஆனை ஒன்று திரட்டும்படி எனக்கு அவர்கள் கட்டளையிட்டது. அதைவிட

எனக்குப் பளுவாக இருந்தது. நான், இறைத்தூதர் ﷺ அவர்கள் செய்யாத ஒன்றை நீங்கள் இருவரும் எப்படிச் செய்யப் போகிறீர்கள்? என்று கேட்டேன். அதற்கு அபூ பக்ர் ؓ அவர்கள், அல்லாஹ்வின் மீதாணையாக! இது நன்மை(யான பணி)தான் என்றார்கள். இதையே என்னிடம் அன்னார் தொடர்ந்து வலியுறுத்திக் கொண்டிருந்தார்கள். முடிவில் எதற்காக அபூ பக்ர் மற்றும் உமர் ؓ ஆகியோரின் மனத்தை அல்லாஹ் விரிவாக்கினானோ அதற்காக என் மனத்தையும் அல்லாஹ் விரிவாக்கினான். அவர்கள் இருவரும் கருதியதையே நானும் பொருத்தமானதாகக் கருதினேன். எனவே, நான் (மக்களின் கரங்களிலிருந்து குர்ஆன் (சுவடிகளைத்) தேடினேன். அகலமான பேரீச்ச மட்டைகள், துண்டுத் தோல்கள் ஓடுகள் மற்றும் (குர்ஆனை மனனம் செய்திருந்த) மனிதர்களின் நெஞ்சங்கள் ஆகியவற்றிலிருந்து குர்ஆன் வசனங்களைத் திரட்டினேன். அப்போது நான் அத்தவ்பா எனும் (9வது) அத்தியாயத்தின் இறுதி வசனம் அபூ குஸைமா ؓ அவர்களிடம் இருக்கக் கண்டேன். அதை நான் அதற்குரிய அத்தியாயத்தில் சேர்த்தேன். (09:128 வது) வசனமே அந்த வசனமாகும். (என் வாயிலாக திரட்டிக் தொகுக்கப் பெற்ற) குர்ஆன் பிரதிகள் (கலீஃபா) அபூ பக்ர் ؓ அவர்களிடம், அவர்களை அல்லாஹ் இறக்கச் செய்யும் வரை அவர்களின் வாழ்நாள் முழுக்க இருந்துவந்தது. பிறகு (கலீஃபா) உமர் ؓ அவர்களிடம் அவர்களை அல்லாஹ் இறக்கச் செய்யும் வரை அவர்களின் வாழ்நாள் முழுக்க இருந்து வந்தது. பிறகு (நபியவர்களின் துணைவியரான) ஹஃப்ஸா பின்த் உமர் ؓ அவர்களிடம் இருந்து வந்தது.

அபூ பக்ர் ؓ அவர்கள் செய்த இந்த காரியத்தை முஸ்லிம்கள் அனைவரும் ஏற்றுக்கொண்டார்கள். மேலும், இந்த காரியத்தை அபூ பக்ர் ؓ அவர்களின் சிறப்பான செயல்களில் ஒன்றாக கருதினார்கள். இதுபற்றி அலி ؓ அவர்கள் கூறினார்கள் முஸ்ஹஃப் -குர்ஆன் பிரதிகளில் மக்களில் அதிகம் நன்மை பெறக்கூடியவர்கள் அபூ பக்ர் ؓ அவர்கள்தான். அபூ பக்ரின் மீது அல்லாஹ்வின் ரஹ்மத்

-கருணை நிலவட்டும். அவர்தான் அல்லாஹ்வுடைய வேதத்தை முதலாவதாக ஒன்று சேர்த்தார்.[24]

**மூன்றாவது கட்டம்:**

இது அமீருல் முஃமினீன் உஸ்மான் ﵁ அவர்களின் காலத்தில் இருபத்தி ஐந்தாம் ஆண்டில் நடைபெற்றது. அதற்கு காரணம் மக்களின் கரங்களில் இருந்த எழுதப்பட்ட பிரதிகள் வித்தியாசப்பட்டு இருந்ததால் அவர்கள் ஓதுகின்ற விதத்திலும் வித்தியாசங்கள் ஏற்பட்டன. இது பெரிய குழப்பத்திற்கு வழிவகுத்துவிடும் என்பதை பயந்து அனைத்து பிரதிகளையும் ஏடுகளையும் ஒன்றிணைத்து ஒரே மாதிரியான பிரதியாக ஆக்கி விடும்படி உஸ்மான் ﵁ அவர்கள் கட்டளை பிறப்பித்தார்கள். அதற்கு காரணம், மக்கள் அல்லாஹ்வின் வேதத்தில் மாறுபட்டு தங்களுக்குள் சண்டை சச்சரவு செய்து பிரிந்து விடக்கூடாது என்பதாகும்.

இது குறித்து இமாம் புகாரி ﵀ பதிவு செய்கிறார்கள்:[25]

**عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﵁ حَدَّثَهُ أَنَّ حُذَيْفَةَ بْنَ اليَمَانِ ﵁ قَدِمَ عَلَى عُثْمَانَ ﵁ وَكَانَ يُغَازِي أَهْلَ الشَّأْمِ فِي فَتْحِ أَرْمِينِيَةَ وَأَذْرَبِيجَانَ مَعَ أَهْلِ العِرَاقِ فَأَفْزَعَ حُذَيْفَةَ اخْتِلاَفُهُمْ فِي القِرَاءَةِ فَقَالَ حُذَيْفَةُ لِعُثْمَانَ يَا أَمِيرَ المُؤْمِنِينَ أَدْرِكْ هَذِهِ الأُمَّةَ قَبْلَ أَنْ يَخْتَلِفُوا فِي الكِتَابِ اخْتِلاَفَ اليَهُودِ وَالنَّصَارَى فَأَرْسَلَ عُثْمَانُ إِلَى حَفْصَةَ أَنْ أَرْسِلِي إِلَيْنَا بِالصُّحُفِ نَنْسَخُهَا فِي المَصَاحِفِ ثُمَّ نَرُدُّهَا إِلَيْكِ فَأَرْسَلَتْ بِهَا حَفْصَةُ إِلَى عُثْمَانَ فَأَمَرَ زَيْدَ بْنَ ثَابِتٍ وَعَبْدَ اللَّهِ**

24. நூல்: கிதாபுல் மஸாஹிஃப், பக்கம் 5, ஆசிரியர்: இப்னு அபூ தாவூத்.
25. எண்: 4987

بْنَ الزُّبَيْرِ وَسَعِيدَ بْنَ الْعَاصِ وَعَبْدَ الرَّحْمَنِ بْنَ الْحَارِثِ بْنِ هِشَامٍ فَنَسَخُوهَا فِي الْمَصَاحِفِ وَقَالَ عُثْمَانُ لِلرَّهْطِ الْقُرَشِيِّينَ الثَّلاَثَةِ إِذَا اخْتَلَفْتُمْ أَنْتُمْ وَزَيْدُ بْنُ ثَابِتٍ فِي شَيْءٍ مِنَ الْقُرْآنِ فَاكْتُبُوهُ بِلِسَانِ قُرَيْشٍ فَإِنَّمَا نَزَلَ بِلِسَانِهِمْ فَفَعَلُوا حَتَّى إِذَا نَسَخُوا الصُّحُفَ فِي الْمَصَاحِفِ رَدَّ عُثْمَانُ الصُّحُفَ إِلَى حَفْصَةَ وَأَرْسَلَ إِلَى كُلِّ أُفُقٍ بِمُصْحَفٍ مِمَّا نَسَخُوا، وَأَمَرَ بِمَا سِوَاهُ مِنَ الْقُرْآنِ فِي كُلِّ صَحِيفَةٍ أَوْ مُصْحَفٍ أَنْ يُحْرَقَ

அனஸ் இப்னு மாலிக் ﵁ அறிவித்தார் ஹுதைஃபா யமான் ﵁ அவர்கள் உஸ்மான் ﵁ அவர்களிடம் (அவர்களின் ஆட்சிக் காலத்தின்போது மதீனாவிற்கு) வருகை புரிந்தார்கள். (அப்போது) உஸ்மான் ﵁, அர்மீனியா மற்றும் அஃதர் பைஜான் ஆகிய நாடுகளை இராக்கியருடன் சேர்ந்து வெற்றி கொள்வதற்கான போரில் கலந்து கொள்ளுமாறு ஷாம் வாசிகளுக்கு ஆணை பிறப்பித்தார்கள். ஹுதைஃபா ﵁ அவர்களை, (இராக் மற்றும் ஷாம் நாட்டு) முஸ்லிம்கள் குர்ஆனை ஓதும் முறையில் கருத்து வேறுபாடு கொண்டது அதிர்ச்சிக்குள்ளாக்கியது. எனவே, ஹுதைஃபா ﵁ உஸ்மான் ﵁ அவர்களிடம், யூதர்களும் கிறிஸ்தவர்களும் (தங்களின் வேதங்களில்) கருத்து வேறுபாடு கொண்டது போல் இந்தச் சமுதாயமும் இந்த வேதத்தில் கருத்து வேறுபாடு கொள்வதற்கு முன்பே இவர்களைக் காப்பாற்றுங்கள், இறை நம்பிக்கையாளர்களின் தலைவர் அவர்களே! என்று கூறினார்கள். எனவே, உஸ்மான் ﵁ (அன்னை) ஹஃப்ஸா ﵄ அவர்களிடம் ஆளனுப்பி தங்களிடமுள்ள குர்ஆன் பதிவை எங்களிடம் கொடுத்து அனுப்புங்கள்! நாங்கள் அதனைப் பல பிரதிகள் எழுதிவிட்டு திருப்பித் தந்து விடுகிறோம் என்று தெரிவித்தார்கள். எனவே, ஹஃப்ஸா ﵄ தம்மிடமிருந்த குர்ஆன்

பதிவை உஸ்மான் ﵁ அவர்களிடம் கொடுத்தனுப்பினார்கள். ஸைத் இப்னு ஸாபித் ﵁, அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் ﵁, ஸயீத் இப்னு ஆஸ் ﵁, அப்துர் ரஹ்மான் இப்னு ஹாரிஸ் இப்னு ஹிஷாம் ﵁ ஆகியோரிடம் அவற்றைப் பல பிரதிகளில் எழுதும்படி உஸ்மான் ﵁ உத்தர விட்டார்கள். மேலும், உஸ்மான் ﵁ (அந்த நால்வரில்) குறைஷிக் குழுவினரான மூவரை நோக்கி, நீங்களும் (அன்சாரியான) ஸைத் இப்னு ஸாபித் ﵁ அவர்களும் குர்ஆனில் ஏதேனும் ஒரு (எழுத்திலக்கண) விஷயத்தில் கருத்து வேறுபட்டால் குறைஷியரின் மொழி வழக்குப்படியே பதிவு செய்யுங்கள். ஏனெனில், குர்ஆன் குறைஷிகளின் மொழிவழக்குப்படியே இறங்கிற்று என்று கூறினார்கள். அந்த நால்வரும் அவ்வாறே செயல்பட்டார்கள். (ஹஃப்ஸா ﵂ அவர்களிடமிருந்த) அந்தக் குர்ஆன் பதிவை பல பிரதிகளில் எழுதினார்கள். பிறகு உஸ்மான் ﵁ அந்தப் பிரதியை ஹஃப்ஸா ﵂ அவர்களிடம் திருப்பிக் கொடுத்து விட்டார்கள். பிறகு அவர்கள் எழுதிய பிரதிகளில் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு பகுதிக்கும் அனுப்பி வைத்தார்கள். இதுவல்லாமல் (புழக்கத்திலிருந்த) இதர பிரதிகளை, அல்லது ஏடுகளை எரித்து விடும்படி உஸ்மான் ﵁ உத்தர விட்டார்கள்.

முஸ்அப் இப்னு சஅது ﵀ கூறினார்கள்: உஸ்மான் ﵁ அவர்கள் குர்ஆன் பிரதிகளை எரித்தபோது மக்கள் (-நபித்தோழர்கள்) அதிகம் இருந்தார்கள். இந்த செயல் அவர்களுக்கு நன்றாக தோன்றியது. அதாவது, யாரும் இதை மறுத்துக் கூறவில்லை.

(நூல்: அபூ தாவூத்)

முஸ்லிம்கள் அனைவரும் இதை உஸ்மான் ﵁ அவர்களிடமிருந்து ஏற்றுக் கொண்டார்கள். இதை உஸ்மான் ﵁ அவர்களின் நற்செயல்களில் ஒன்றாக கருதினார்கள். அபூ பக்ர் ﵁ அவர்கள் செய்த நற்காரியத்தை முழுமைப்படுதுகின்ற ஒரு நற்காரியமாக இது இருந்தது.

உஸ்மான் ﵁ அவர்கள் ஒன்று சேர்த்ததற்கும் அபூ பக்ர் ﵁

அவர்கள் ஒன்று சேர்த்ததற்கும் இடையில் உள்ள வித்தியாசம் என்னவென்றால், குர்ஆன் அனைத்தையும் ஒரே ஒரு பிரதியில், புத்தக வடிவில் ஒன்று சேர்த்து விடவேண்டும்; மற்றும், குர்ஆனுடைய பிரதிகளில் வசனங்கள் (-அத்தியாயங்கள் மற்றும் வசனங்களில்) எதுவும் தவறிவிடக் கூடாது என்பது அபூ பக்ர் ﵁ அவர்கள் ஒன்று சேர்த்ததின் நோக்கமாக இருந்தது. அதாவது, மக்கள் எல்லோரும் அந்த ஒரே பிரதியில் உள்ளவாறு ஓத வேண்டும் என்று கட்டாயப்படுத்துவது நோக்கமாக இருக்கவில்லை. காரணம், அவர்களின் காலத்தில் ஓதுவதில் வேறுபாடுகள் ஏற்படவில்லை. ஆகவே, ஒரே முஸ்ஹஃப் அடிப்படையில் ஓத வேண்டும் என்று கட்டாயப்படுத்த வேண்டிய அவசியமும் ஏற்படவில்லை.

உஸ்மான் ﵁ அவர்கள் ஒன்று சேர்த்ததின் நோக்கம், ஒரே ஒரு முஸ்ஹஃபின் அடிப்படையில் மக்கள் ஓத வேண்டும் என்பதாகும். காரணம், மக்களிடம் ஓதுவதில் ஏற்பட்ட வித்தியாசங்கள் பயப்பட படக்கூடிய அளவிற்கு பிரச்சனைகளை ஏற்படுத்தி விட்டது

இவ்வாறு உஸ்மான் ﵁ அவர்கள் ஒன்று சேர்த்ததால் நல்ல பலன்கள் கண்டிப்பாக ஏற்பட்டன. முஸ்லிம்களுக்கு மத்தியில் ஒற்றுமையும் அன்பும் நிலவியது. இது மிகப்பெரிய நன்மையாகும். முஸ்லிம்கள் பிரிந்து விடுவது, கருத்து வேறுபடுவது, அவர்களுக்குள் பகைமை, வெறுப்பு, குரோதம் ஏற்படுவது என்ற மிகப் பெரிய தீமை இதன் மூலம் நீங்கி விட்டது. உஸ்மான் அவர்களின் காலத்திலிருந்து இன்றுவரை முஸ்லிம்களுக்கு மத்தியில் குர்ஆன் இவ்வாறு இருந்து வருகிறது. இதில் அனைவரும் ஒரே கருத்து உடையவர்களாக இருப்பதோடு, அன்றிலிருந்து இன்றுவரை தொன்றுதொட்டு, வாழையடி வாழையாக, பெரியவர்களிடமிருந்து சிறியவர்கள் இதைக் கற்று வருகிறார்கள். குழப்பம் செய்பவர்களின் கரங்கள் இதில் எவ்விதமான குழப்பத்தையும் செய்ய முடியவில்லை. வழிகெட்டவர்களின் மனஇச்சைகள் இதில் எதையும் அழிக்கவோ மாற்றவோ முடியவில்லை.

வானங்களின் அதிபதி, பூமியின் அதிபதி, அகிலத்தாரின் அதிபதி அல்லாஹ்விற்கே எல்லா புகழும்!

------------------------

# اَلتَّفْسِيْرُ

# தஃப்ஸீர்

**اَلتَّفْسِيْرُ**- தஃப்ஸீர் என்ற இந்த பதம் **فسر** ஃபஸ்ர் என்ற மூல சொல்லில் இருந்து வந்ததாகும். ஃபஸ்ர் என்ற பதம் மூடப்பட்ட ஒன்றை திறப்பது, திரையிடப்பட்ட ஒன்றை விட்டு திரையை அகற்றுவது, தெளிவுபடுத்துவது என்ற பொருள்களில் வருகிறது.

மார்க்க வழக்கில் தஃப்ஸீர் என்றால் கண்ணியமிக்க குர்ஆனின் பொருள்களை விளக்கி கூறுவதாகும்.

குர்ஆனுடைய தஃப்ஸீரை -விளக்கத்தை கற்பது முஸ்லிம்கள் மீது வாஜிப் -கட்டாயமாகும்.

ஆதாரம் 1, அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

كِتَابٌ أَنْزَلْنَاهُ إِلَيْكَ مُبَارَكٌ لِيَدَّبَّرُوا آيَاتِهِ وَلِيَتَذَكَّرَ أُولُو الْأَلْبَابِ

(நபியே! இது) நற்பாக்கியம் மிகுந்த வேதமாகும். இதை நாம் உமக்கு இறக்கினோம், அவர்கள் ஆழ்ந்தாராய வேண்டும் என்பதற்காகவும், அறிவுடையவர்கள் (இதன் மூலம்) நல்லுணர்ச்சி பெற வேண்டும் என்பதற்காகவும். (அல்குர்ஆன் 38 : 29)

அல்லாஹு தஆலா இந்த குர்ஆனை இறக்கியதில் உள்ள ஞானமும் தத்துவமும் என்னவென்றால் இதன் வசனங்களை மக்கள் ஆழ்ந்தாராய்ந்து, சிந்தித்து, இதில் கூறப்பட்ட விஷயங்களைக் கொண்டு நல்லுபதேசம் பெறவேண்டும் என்பதாகும்.

ஆழ்ந்தாராய்வது என்பது வார்த்தைகளில் சிந்தனை செலுத்தி, அதன்மூலம் அந்த வார்த்தைகளின் பொருள்களையும் கருத்துகளையும் புரிவதாகும்.

ஆகவே தஃப்ஸீர் கல்வியை கற்கவில்லை என்றால் குர்ஆன் இறக்கப்பட்டதில் உள்ள தத்துவமே தவறிப்போய் விடும். பிறகு, எவ்விதமான தாக்கத்தையும் ஏற்படுத்தாத வெறும் வார்த்தைகளாக மட்டும் குர்ஆன் இருந்துவிடும்.

மேலும், குர்ஆனின் பொருள்களை புரிந்து சிந்திக்கவில்லை என்றால் குர்ஆனில் கூறப்பட்டதைக் கொண்டு நல்லுபதேசம் பெறுவது முடியாமல் போய்விடும்.

ஆதாரம் 2, அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

أَفَلَا يَتَدَبَّرُونَ الْقُرْآنَ أَمْ عَلَى قُلُوبٍ أَقْفَالُهَا

அவர்கள் இந்த குர்ஆனை ஆராய்ந்து பார்க்க வேண்டாமா? அல்லது, அவர்களுடைய உள்ளங்கள் மீது தாளிடப்பட்டு விட்டதா? (அல்குர்ஆன் 47 : 24)

இந்த வசனத்தில் குர்ஆனை சிந்திக்காதவர்களைப் பற்றி பழித்தும் இழிவாகவும் அல்லாஹ் கூறுகிறான். அதற்கு காரணம், அவர்களுடைய உள்ளங்களில் பூட்டுகள் போடப்பட்டு விட்டன. ஆகவேதான், அவர்களுடைய உள்ளங்களில் நன்மைகள் செல்வதில்லை என்று குறிப்பிடுகிறான்.

நமது உம்மத்தின் சான்றோர் இந்த வாஜிபை சரியாக நிறைவேற்றி வந்தார்கள். அதாவது, குர்ஆனையும் அதன் தஃப்ஸீரையும் முறையாக கற்று வந்தார்கள்.

அவர்கள் குர்ஆனின் வார்த்தைகளையும் கற்றார்கள்; அதன் பொருளையும் கற்றார்கள். அதன் மூலம்தான் அல்லாஹ்வின் நோக்கத்திற்கு ஏற்ப குர்ஆனைக் கொண்டு அவர்கள் அமல்

செய்வதற்கு ஆற்றல் பெற்றார்கள். ஏனெனில், பொருள் அறியாத ஒன்றை கொண்டு அமல் செய்வது முடியாத காரியமாகும்.

அபூ அப்திர் ரஹ்மான் சுலமி[26] ﵀ கூறுகிறார்கள்: அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ﵁, உஸ்மான் இப்னு அஃப்ஃபான் ﵁ போன்றவர்கள் எங்களுக்கு குர்ஆனை கற்றுக் கொடுத்தார்கள். அவர்கள் கூறுவார்கள், தாங்கள் நபி ﷺ அவர்களிடமிருந்து பத்து வசனங்களை கற்றுக் கொண்டால் அந்த பத்து வசனங்களில் உள்ள கல்விகளையும் அமல்களையும் கற்கின்ற வரை அவற்றுக்கு மேல் தாண்ட மாட்டார்கள். மேலும், அவர்கள் கூறுவார்கள், நாங்கள் குர்ஆனையும் இல்மையும் அமலையும் அனைத்தையும் ஒன்று சேர்த்து கற்றுக் கொண்டோம்.[27]

ஷைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா ﵀ கூறுகிறார்கள்: ஒரு கூட்டம் பொதுவான கல்விகளாகிய மருத்துவம், கணக்கு போன்ற ஏதாவது ஒரு துறையில் ஒரு புத்தகத்தை படித்துவிட்டு அதற்குரிய விளக்கத்தை அவர்கள் தேடி தெரிந்துகொள்வதில்லை என்பது வழக்கத்தில் இல்லாத ஒன்றாகும். அப்படியிருக்க அல்லாஹ்வுடைய வேதமாகிய இந்த குர்ஆன் தங்களுக்கு பாதுகாப்பாகவும் நற்பாக்கியமாகவும் ஈடேற்றமாகவும் தங்களது மார்க்கம் மற்றும் உலகத்தின் அனைத்து காரியங்களை நிர்வகிக்கக் கூடியதாகவும் இருக்கும்போது, நபித்தோழர்கள் குர்ஆனின் விளக்கத்தைத் தேடிப் பெறாமல், அதைத் தேடிச் சென்று கற்காமல் இருந்திருப்பார்களா?

கல்விமான்கள் குர்ஆனின் விளக்கத்தை எழுத்து மூலமாக அல்லது வாய் வழியாக மக்களுக்கு கற்றுக் கொடுக்க வேண்டும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

---

26. பெயர்: அப்தில்லாஹ் இப்னு ஹபீப் இப்னு ரபீஆ ஹிஜ்ரி 74ல் இறப்பெய்தினார். இவர் நபி அவர்களுடைய காலத்தில் பிறந்தவர். குர்ஆன் தொடர்பான கல்வியிலும் ஹதீஸ் அறிவிப்பிலும் அறிஞராகத் திகழ்ந்தார். இவர் கண்பார்வை அற்றவராக இருந்தார்.

27. தஃப்ஸீர் தபரி

وَإِذْ أَخَذَ اللَّهُ مِيثَاقَ الَّذِينَ أُوتُوا الْكِتَابَ لَتُبَيِّنُنَّهُ لِلنَّاسِ وَلَا تَكْتُمُونَهُ

வேதம் கொடுக்கப்பட்டவர்களிடம் (உங்களுக்குக் கொடுக்கப்பட்ட) வேதத்தை மக்களுக்குத் தெளிவாக எடுத்துரைக்க வேண்டும், அதை மூடி மறைத்துவிடக் கூடாது என்று அல்லாஹ் உறுதிமொழி வாங்கியதை (நபியே! அவர்களுக்கு) ஞாபகமூட்டுவீராக.

(அல்குர்ஆன் 3 : 187)

வேதத்தை விளக்குவது, அதை தெளிவாக எடுத்துரைப்பது என்பதில் அதனுடைய வார்த்தைகளை விளக்குவதும் அதன் பொருள்களை விளக்குவதும் உள்ளடங்கும்.

ஆகவே, எதை மக்களுக்கு விளக்கிக் கூற வேண்டும் என்று அறிஞர்களிடம் அல்லாஹ் ஒப்பந்தம் வாங்கினானோ அதில் குர்ஆனுடைய தஃப்ஸீர் -குர்ஆனுக்கு விளக்கம் அளிப்பதும் அடங்கும்.

தஃப்ஸீரை கற்பதின் நோக்கம் மிக உயர்ந்த, புகழுக்குரிய நல்ல இலட்சியங்களை அடைவதும் மதிப்புமிக்க நற்பலன்களை பெறுவதும் ஆகும். அதாவது, குர்ஆனின் செய்திகளை உண்மை படுத்தவேண்டும், அவற்றின் மூலமாக நேர்வழி என்ற நற்பலனை பெறவேண்டும். குர்ஆனின் சட்டங்களை அல்லாஹ் விரும்பிய விதத்தில் அறிந்து அவற்றை நடைமுறைப்படுத்த வேண்டும், அதன் வழியாக தெளிவான ஆதாரத்தின் மீது இருந்து கொண்டு அல்லாஹ்வை வணங்க வேண்டும். இதுவே தஃப்ஸீர் கல்வியின் உன்னத நோக்கமாகும்.




## اَلْوَاجِبُ عَلَى الْـمُسْلِمِ فِي تَفْسِيْرِ الْقُرْآنِ

# குர்ஆனுடைய தஃப்ஸீர் விஷயத்தில் முஸ்லிம் மீதுள்ள கடமை

குர்ஆனுக்கு விரிவுரை கூறுபவர் தனது மனதில் ஆழமாக பதியவைக்க வேண்டும், தான் அல்லாஹ்வின் பேச்சுக்கு பொருள் கூறப்போகிறோம்; அல்லாஹ் தனது பேச்சைக் கொண்டு என்ன நாடியிருக்கின்றான் என்பதை மக்களுக்கு சொல்லப் போகிறோம்; அதற்கு சாட்சியாக இருக்கப் போகிறோம்.

ஆகவே, அந்த சாட்சியத்தை மதிப்பவராக இருப்பதோடு, அல்லாஹ்வின் மீது உறுதியான கல்வி அறிவு இல்லாமல் பேசுவதை பயப்படுபவராக இருக்க வேண்டும். அல்லாஹ்வின் மீது கல்வி அறிவு இன்றி பேசுவது தடுக்கப்பட்ட பாவமாகும். இவ்வாறு செய்பவர் மறுமையில் இழிவுக்கு உள்ளாகுவார்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

**قُلْ إِنَّمَا حَرَّمَ رَبِّيَ الْفَوَاحِشَ مَا ظَهَرَ مِنْهَا وَمَا بَطَنَ وَالْإِثْمَ وَالْبَغْيَ بِغَيْرِ الْحَقِّ وَأَنْ تُشْرِكُوا بِاللّٰهِ مَا لَمْ يُنَزِّلْ بِهِ سُلْطَانًا وَأَنْ تَقُولُوا عَلَى اللّٰهِ مَا لَا تَعْلَمُونَ**

(நபியே!) கூறுவீராக: ‘நிச்சயமாக என் இறைவன் (ஹராம் என்று) தடை செய்திருப்பதெல்லாம்: பகிரங்கமாகவோ, இரகசியமாகவோ செய்யப்படும் மானக்கேடான காரியங்களையும், மற்ற

பாவங்களையும், நியாயமின்றி ஒருவர் மீது (ஒருவர்) கொடுமை செய்வதையும், அல்லாஹ் எதற்கு ஆதாரம் இறக்கவில்லையோ அதை அல்லாஹ்வுக்கு இணையாக்குவதையும், நீங்கள் அறியாதவற்றை அல்லாஹ்வின் மீது (பொய்) கூறுவதையும்தான் (அல்லாஹ் தடுத்திருக்கிறான்). (அல்குர்ஆன் 7 : 33)

இன்னும் அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَيَوْمَ الْقِيَامَةِ تَرَى الَّذِينَ كَذَبُوا عَلَى اللهِ وُجُوهُهُمْ مُسْوَدَّةٌ أَلَيْسَ فِي جَهَنَّمَ مَثْوًى لِلْمُتَكَبِّرِينَ

(நபியே!) மறுமை நாளன்று அல்லாஹ்வின் மீது பொய் கூறும் இவர்களின் முகங்கள் கருத்துப் போயிருப்பதை நீர் காண்பீர். கர்வம் கொண்ட இவர்கள் செல்லுமிடம் நரகத்தில் இல்லையா? (அல்குர்ஆன் 39 : 60)

-----------------




# اَلْـمَرْجِعُ فِي تَفْسِيْرِ الْقُرْآنِ

# தஃப்ஸீரில் மூல ஆதாரங்களாக எடுத்துக் கொள்ளப்படுபவை

அல்குர்ஆனுக்கு விரிவுரை கூறும்போது பின்வருகின்றவற்றில் ஒன்றை அடிப்படையாக வைத்து விரிவுரை செய்ய வேண்டும். அவற்றை வரிசைப்படி முறையாக பார்ப்போம்.

**முதலாவதாக:**

**كلام الله அல்லாஹ்வுடைய பேச்சு.**

அதாவது, குர்ஆனின் ஒரு வசனத்தின் மூலம் மற்றொரு வசனத்திற்கு தஃப்ஸீர் செய்யப்படும். ஏனெனில், நிச்சயமாக அல்லாஹ்தான் குர்ஆனை இறக்கினான். ஆகவே, அவன் இறக்கிய வசனங்களில் அவனுக்கு என்ன நோக்கம் என்பதை அவன்தான் நன்கறிந்தவன்.

இதற்கு பல உதாரணங்கள் உள்ளன.

அவற்றில்,

1). அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

أَلَآ إِنَّ أَولِيَآءَ للهِ لَا خَوفٌ عَلَيهِم وَلَاهُم يَحزَنُونَ

(நம்பிக்கையாளர்களே!) அறிந்து கொள்ளுங்கள்! அல்லாஹ்வின் நேசர்க(ளான நல்லடியார்)களுக்கு நிச்சயமாக ஒரு பயமுமில்லை; அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள். (அல்குர்ஆன் 10 : 62)

பிறகு, அந்த நேசர்கள் யார் என்பதை அதை அடுத்துவருகின்ற வசனம் விளக்குகின்றது.

الَّذِينَ آمَنُوا وَكَانُوا يَتَّقُونَ

அவர்கள் (அல்லாஹ்வை) உண்மையாகவே நம்பிக்கைக் கொண்டு (அவனுக்குப்) பயந்து நடப்பவர்களாக இருக்கின்றனர்.

(அல்குர்ஆன் 10 : 62, 63)

2). அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَالسَّمَاءِ وَالطَّارِقِ ○ وَمَا أَدْرَاكَ مَا الطَّارِقُ ○

வானத்தின் மீதும் தாரிக் மீதும் சத்தியமாக! (நபியே!) தாரிக் என்றால் என்னவென்று நீர் அறிவீரா! (அல்குர்ஆன் 86 : 1-2)

மேற்கூறப்பட்ட வசனத்தில் உள்ள தாரிக் என்பதன் விளக்கம் என்ன என்று அதை அடுத்து வருகின்ற வசனம் விளக்குகின்றது.

النَّجْمُ الثَّاقِبُ

(அதுதான்) இரவெல்லாம் சுடரிட்டுப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்ற நட்சத்திரம். (அல்குர்ஆன் 86 : 3)

3). அல்லாஹு தஆலா கூறுகின்றான்.

وَالْأَرْضَ بَعْدَ ذَلِكَ دَحَاهَا

அதற்கு பின்னர் அவன் பூமியை தஹ்வு செய்தான் -விரித்தான்.

பிறகு **دَحَا** தஹா - விரித்தான் என்ற பதத்தின் விளக்கம் என்ன என்று அடுத்த வசனம் கூறுகின்றது.

أَخْرَجَ مِنْهَا مَاءَهَا وَمَرْعَاهَا ○ وَالْجِبَالَ أَرْسَاهَا ○

அவனே அதிலிருந்து நீரையும், மேய்ச்சல் பொருள்களையும் வெளியாக்குகிறான். மலைகளையும் அவனே (அதில்) உறுதியாக ஊன்றினான். (அல்குர்ஆன் 79 : 31, 32)[28]

**இரண்டாவதாக,**

**ﷺ كَلَامُ رَسُولِ اللهِ – ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடைய பேச்சு.**

அதாவது, சுன்னாவின் வாயிலாக குர்ஆன் வசனங்களுக்கு தஃப்ஸீர் செய்யப்படும். ஏனெனில், ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள்தான் அல்லாஹ்விடமிருந்து குர்ஆனை(யும் மார்க்கத்தையும்) நமக்கு எடுத்துரைத்தவர்கள். அல்லாஹ்வின் வேதத்திலுள்ள அல்லாஹ்வின் நோக்கத்தை(யும் கருத்தையும்) மக்களிலேயே அவர்கள்தான் நன்கறிந்தவர்கள் ஆவார்கள்.

இதற்கு சில உதாரணங்கள் பின்வருமாறு:

1). அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

لِلَّذِينَ أَحْسَنُوا الْحُسْنَى وَزِيَادَةٌ

நன்மை செய்தவர்களுக்கு(க் கூலி) நன்மைதான். (அவர்கள் செய்ததை விட) அதிகமாகவும் கூலி கிடைக்கும். (அல்குர்ஆன் 10 : 26)

இந்த வசனத்தில் வந்துள்ள **وَزِيَادَة** ஸியாதா -அதிகம் என்பதற்கு உயர்ந்தவனாகிய அல்லாஹ்வின் முகத்தைப் பார்ப்பது என்று நபி ﷺ அவர்கள் விளக்கம் கூறியுள்ளார்கள். இதை இப்னு ஜரீர் ؒ, இப்னு அபீ ஹாத்தம் ؒ ஆகிய இரு விரிவுரையாளர்களும் அபூ மூஸா ؓ. மற்றும் உபை இப்னு கஅப் ؓ ஆகிய இரு ஸஹாபா வாயிலாக பதிவு செய்துள்ளார்கள். கஅப் இப்னு உஜ்ரா ؓ வாயிலாகவும் இப்னு ஜரீர் ؒ அவர்கள் இதை பதிவு செய்துள்ளார்கள்.

28. ஆகவே, **دَحَا** தஹா - விரித்தான் என்பதன் விளக்கம் பூமியிலிருந்து நீர்களை உற்பத்தி செய்தல், அதில் கால்நடைகளுக்கான மேய்ச்சல் நிலங்களை உருவாக்குதல், அந்த பூமி குலுங்காமல் இருப்பதற்கு அதில் உயரமான மலைகளை நிறுத்துதல் ஆகும். விரித்தான் என்றால் முற்றிலுமாக சமமப்படுத்தினான் என்று பொருளாகாது.

ஸுஹைப் இப்னு சினான் ﵁ வாயிலாக இமாம் முஸ்லிம் ﵀ பதிவு செய்கிறார்கள்:[29]

عَنْ صُهَيْبٍ ﵁ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ إِذَا دَخَلَ أَهْلُ الْجَنَّةِ الْجَنَّةَ قَالَ يَقُولُ اللهُ تَبَارَكَ وَتَعَالَى تُرِيدُونَ شَيْئًا أَزِيدُكُمْ فَيَقُولُونَ أَلَمْ تُبَيِّضْ وُجُوهَنَا أَلَمْ تُدْخِلْنَا الْجَنَّةَ وَتُنَجِّنَا مِنَ النَّارِ قَالَ فَيَكْشِفُ الْحِجَابَ فَمَا أُعْطُوا شَيْئًا أَحَبَّ إِلَيْهِمْ مِنَ النَّظَرِ إِلَى رَبِّهِمْ عَزَّ وَجَلَّ وفي روايةوَزَادَ ثُمَّ تَلَا هَذِهِ الْآيَةَ لِلَّذِينَ أَحْسَنُوا الْحُسْنَى وَزِيَادَةٌ [يونس: ٢٦]

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: சொர்க்கவாசிகள் சொர்க்கத்தில் நுழைந்து விடும்போது (அவர்களிடம்) அல்லாஹ், உங்களுக்கு நான் இன்னும் கூடுதலாக ஏதேனும் வழங்க வேண்டுமென நீங்கள் விரும்புகின்றீர்களா? என்று கேட்பான். அதற்கு அவர்கள் (இறைவா!) நீ எங்கள் முகங்களை வெண்மையாக்க வில்லையா? எங்களை நரகத்திலிருந்து காப்பாற்றி சொர்க்கத்திற்குள் பிரவேசிக்கச் செய்யவில்லையா (இதைவிடக் கூடுதலாக எங்களுக்கு வேறென்ன வேண்டும்)? என்று கேட்பார்கள். அப்போது அல்லாஹ், (தன்னைச் சுற்றிலும் இருக்கும்) திரையை விலக்கி (அவர்களுக்கு தரிசனம் தந்தி)டுவான். அப்போது தம் இறைவனைக் (காணும் அவர்களுக்கு அவனைக்) காண்பதைவிட மிகவும் விருப்பமானது வேறெதுவும் வழங்கப்பட்டிராது.

மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில்,

لِلَّذِينَ أَحْسَنُوا الْحُسْنَى وَزِيَادَةٌ

29. ஸஹீஹ் முஸ்லிம், எண்: 181

பொருள்: நன்மை புரிந்தோருக்கு நன்மையும், (அதைவிட) அதிகமும் கிடைக்கும் எனும் இந்த (10 : 26ஆவது) வசனத்தையும் நபி ﷺ அவர்கள் ஓதிக் காட்டினார்கள் என்று அதிகப்படியாக இடம் பெற்றுள்ளது.

2). அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَأَعِدُّوا لَهُمْ مَا اسْتَطَعْتُمْ مِنْ قُوَّةٍ وَمِنْ رِبَاطِ الْخَيْلِ

அவர்களை எதிர்ப்பதற்காக (ஆயுத) பலத்தையும், லாயத்தில் (திறமையான) குதிரைகளையும், உங்களுக்கு சாத்தியமான அளவு நீங்கள் (எந்நேரமும்) தயார்படுத்தி வையுங்கள்.

(அல்குர்ஆன் 8 : 60)

عَنْ عُقْبَةِ بْنِ عَامِرٍ رضي الله عنه يَقُولُ سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ وَهُوَ عَلَى الْمِنْبَرِ يَقُولُ {وَأَعِدُّوا لَهُمْ مَا اسْتَطَعْتُمْ مِنْ قُوَّةٍ} [الأنفال: ٦٠] أَلَا إِنَّ الْقُوَّةَ الرَّمْيُ أَلَا إِنَّ الْقُوَّةَ الرَّمْ أَلَا إِنَّ الْقُوَّةَ الرَّمْيُ رواه مسلم

இந்த வசனத்தை மிம்பரின் மீது இருந்தவர்களாக ஓதிவிட்டு, அறிந்து கொள்ளுங்கள்! الْقُوَّةَ குவ்வா - பலம் என்றால் அம்பெறிவது, அறிந்து கொள்ளுங்கள்! குவ்வா - பலம் என்றால் அம்பெறிவது, அறிந்து கொள்ளுங்கள்! குவ்வா - பலம் என்றால் அம்பெறிவது என்று ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறியதை தான் செவியுற்றதாக உக்பா இப்னு ஆமிர் رضي الله عنه அறிவிக்கின்றார்கள்.[30]

மூன்றாவதாக

## كَلَامُ الصَّحَابَةِ رضي الله عنهم **ஸஹாபா** رضي الله عنهم **உடைய கூற்றுகள்**

அதாவது, ஸஹாபா رضي الله عنهم - கூறிய விளக்கத்தை அடிப்படையாக வைத்து குர்ஆனுக்கு தஃப்ஸீர் செய்யப்படும். அவர்களிலும் குறிப்பாக,

30. நூல்: முஸ்லிம், எண்: 1917

கல்விமான்கள் மற்றும் தஃப்ஸீரில் அதிக கவனமுள்ளவர்கள் உடைய விளக்கங்களைக் கொண்டு குர்ஆனுக்கு தஃப்ஸீர் செய்யப்படும். ஏனெனில், குர்ஆன் அவர்களுடைய மொழியில், அவர்களுடைய காலத்தில்தான் இறங்கியது. நபிமார்களுக்கு அடுத்ததாக சத்தியத்தை தேடுவதில் அவர்கள் மக்களிலேயே மிகவும் உண்மையானவர்கள்; மன இச்சைகளில் சிக்குவதைவிட்டும் அவர்கள்தான் மக்களில் அதிகம் பாதுகாப்பு பெற்றவர்கள்; நேர்வழியிலிருந்தும் இறையருளிலிருந்தும் மனிதனை தடுக்கக்கூடிய அனைத்து விதமான முரண்பாடுகளை விட்டும் அவர்கள் மிகவும் தூய்மையானவர்களாக இருந்தார்கள்.

இதற்கு பல உதாரணங்கள் உள்ளன.

1). அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

**يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا لَا تَقْرَبُوا الصَّلَاةَ وَأَنْتُمْ سُكَارَى حَتَّى تَعْلَمُوا مَا تَقُولُونَ وَلَا جُنُبًا إِلَّا عَابِرِي سَبِيلٍ حَتَّى تَغْتَسِلُوا وَإِنْ كُنْتُمْ مَرْضَى أَوْ عَلَى سَفَرٍ أَوْ جَاءَ أَحَدٌ مِنْكُمْ مِنَ الْغَائِطِ أَوْ لَامَسْتُمُ النِّسَاءَ فَلَمْ تَجِدُوا مَاءً فَتَيَمَّمُوا صَعِيدًا طَيِّبًا فَامْسَحُوا بِوُجُوهِكُمْ وَأَيْدِيكُمْ إِنَّ اللَّهَ كَانَ عَفُوًّا غَفُورًا**

நம்பிக்கையாளர்களே! நீங்கள் கூறுவது இன்னதென்று நீங்கள் அறிந்துகொள்ள முடியாதவாறு நீங்கள் போதையாயிருக்கும் சமயத்தில் தொழுகைக்குச் செல்லாதீர்கள். அன்றி, நீங்கள் முழுக்காயிருந்தால் குளிக்கும் வரையிலும் (தொழுகைக்குச் செல்லாதீர்கள்.) ஆயினும், பிரயாணத்தில் இருந்தாலே அன்றி. ஆகவே, நீங்கள் நோயாளியாகவோ, பிரயாணத்திலோ, மலஜல உபாதைக் கழித்தோ, பெண்ணைத் தீண்டி(ச் சேர்ந்து) இருந்தோ, (சுத்தம் செய்து கொள்ள) நீங்கள் தண்ணீரையும் பெற்றுக் கொள்ளாத சமயத்தில் (தொழுகையின் நேரம் வந்துவிடுமேயானால் அதற்காக

நீங்கள் தொழுகையைப் பிற்படுத்த வேண்டியதில்லை.) சுத்தமான மண்ணைத் தொட்டு உங்களுடைய முகங்களையும் கைகளையும் துடைத்து ‘தயம்மும்’ செய்து கொள்ளுங்கள். (பிறகு தொழுங்கள்.) நிச்சயமாக அல்லாஹ் பிழை பொறுப்பவனும், குற்றங்களை மன்னிப்பவனுமாக இருக்கின்றான். (அல்குர்ஆன் 4 : 43)

**عَنْ سَعِيْدِ بْنِ جُبَيْرٍ ﵁ عَنِ ابْنِ عَبَّاسٍ ﵁ أَنَّهُ قَالَ أَوْ لاَمَسْتُمْ النِّسَاءَ قَالَ هُوَ الْـجِمَاعُ.**

இந்த வசனத்தில் வந்துள்ள **لَامَسْتُمُ النِّسَاءَ** என்பதற்கு தாம்பத்திய உறவுவைப்பது என்று இப்னு அப்பாஸ் ﵄ அவர்கள் விளக்கம் கூறியதை தான் செவியுற்றதாக சயீது இப்னு ஜுபைர் ﵀ கூறுகின்றார்கள்.[31]

31. இப்னு அப்பாஸ் ﵄ அவர்களிடமிருந்து இந்த கருத்தை அவர்களின் மற்ற பல மாணவர்களும் அறிவிப்பதாக இமாம் தபரி ﵀ அவர்கள் தங்கள் தஃப்சீரில் பதிவு செய்துள்ளார்கள். மேலும் இந்த விளக்கத்தைத்தான் அலி ﵁ அவர்கள் கூறுவதாக ஷஅபி ﵀ அறிவிப்பதாகவும் இமாம் தபரி ﵀ பதிவு செய்துள்ளார்கள்.

இப்னு அப்பாஸ் ﵄ அவர்களின் இந்த விளக்கத்தை இமாம் அப்துர் ரஸ்ஸாக் ﵀ அவர்கள் தங்களது முஸன்னஃபில் 506வது எண் அறிவிப்பாகவும் இமாம் இப்னு அபீ ஷைபா ﵀ தங்களது முஸன்னஃபில் 1757வது எண் அறிவிப்பாகவும் பதிவு செய்துள்ளார்கள்.

**عَنْ سَعِيدِ بْنِ جُبَيْرٍ ﵀ قَالَ اخْتَلَفْتُ أَنَا وَأُنَاسٌ مِنَ الْعَرَبِ فِي اللَّمْسِ فَقُلْتُ أَنَا وَأُنَاسٌ مِنَ الْمَوَالِي اللَّمْسُ مَا دُونَ الْجِمَاعِ وَقَالَتِ الْعَرَبُ هُوَ الْجِمَاعُ فَأَتَيْنَا ابْنَ عَبَّاسٍ فَقَالَ غَلَبَتِ الْعَرَبُ هُوَ الْجِمَاعُ**

நானும் அரபுகளின் சிலரும் லம்ஸ் என்பதன் பொருள் என்ன என்பதில் கருத்து வேற்றுமை கொண்டோம். அப்போது நானும் மவ்லாக்களில் சிலரும் லம்ஸ் என்றால் பெண்ணை தொடுவது, இன்னும், இன்னும், உடலுறவைத் தவிர உள்ள எல்லா தொடுதலையும் இது எடுத்துக் கொள்ளும் என்று கூறினோம்.

ஆனால், அரபுகள் அதன் பொருள் உடலுறவு கொள்வது என்று கூறினார்கள்.

நாங்கள் இப்னு அப்பாஸ் ﵄ அவர்களிடம் வந்து இது பற்றி கேட்டோம். அவர்கள் கூறினார்கள். அரபுகள்தான் ஜெயித்தார்கள். அதாவது லம்ஸ் என்றால் உடலுறவு கொள்வதுதான்.

நான்காவதாக,

## ﷺ كَلَامُ التَّابِعِيْنَ தாபியீன்[32] ﷺ உடைய கூற்றுகள்

ஸஹாபாவிடமிருந்து தஃப்ஸீரை கற்பதற்கு மிகுந்த முக்கியத்துவமும் கவனமும் செலுத்திய பெரிய தாபியீன் உடைய கூற்றுகளை அடிப்படையாக வைத்து குர்ஆனுக்கு தஃப்ஸீர் செய்யப்படும். ஸஹாபாவிற்கு பிறகு அவர்களின் மாணவர்களாகிய தாபியீன் குழப்பங்களை விட்டும் மன இச்சைகளை விட்டும் நீங்கியவர்களாக இருந்தார்கள். அரபி மொழியிலும் தேர்ச்சி பெற்றவர்களாக இருந்தார்கள். அவர்களின் காலத்தில் அரபிமொழி பெரியளவில் மாற்றமடையாமல் இருந்தது. ஆகவே, பின்னால் வந்தவர்களை பார்க்கிலும் குர்ஆனை புரிவதில் தாபியீன் உடைய புரியுதல் உண்மையாகவும் சரியாகவும் இருப்பதற்கு அதிகமான வாய்ப்பு இருக்கிறது.

இப்னு தைமிய்யா ﵀ கூறுகிறார்கள்:

தாபியீன் ஒரு குறிப்பிட்ட விஷயத்தில் ஒரே கருத்தை கூறிவிட்டால் அது ஆதாரமாக அமைந்து விடுகிறது. இதில் சந்தேகப்படுதல் கூடாது. அவர்கள் பல கருத்துகளை கூறியிருந்தால் அவர்களில் ஒருவரின் கூற்றை வைத்து மற்றவரின் கூற்றை மறுக்கக் கூடாது. மேலும், அவர்களில் ஒருவரின் கூற்றைத்தான் ஏற்க வேண்டும் என்று பின்னால் வந்தவர்களையும் நிர்பந்திக்கவும் முடியாது. ஆகவே, குர்ஆனின் மொழியை அல்லது சுன்னாவை அல்லது அரபுகளின் கூற்றுகளை அல்லது ஸஹாபாவின் கூற்றுகளை ஆராய்ந்து விளக்கம் அளிக்கப்படும்.[33]

---

32. நபித்தோழர்களிடம் முறையாக மார்க்கக் கல்வி கற்று பிறகு, அல்லாஹ்வின் மார்க்கத்தை பின்பற்றி வாழ்ந்து அதை பிற மக்களுக்கும் போதித்த அறிஞர்களை தாபியீன் என்று அழைக்கப்படுகிறது. பிறகு, இவர்களிடம் முறையாக மார்க்கக் கல்வி கற்று மார்க்கத்தைப் பின்பற்றி பிற மக்களுக்கும் போதித்தவர்களை தபவுத் தாபியீன் என்று அழைக்கப்படுகிறது.

33. மஜ்மூவுல் ஃபதாவா

மேலும் இப்னு தைமிய்யா ﷺ கூறுகிறார்கள்:

யார் ஸஹாபா மற்றும் தாபியீன் உடைய பாதைகளை விட்டும் அவர்கள் கூறிய கருத்துகளை விட்டும் விலகி வேறொன்றை தேர்ந்தெடுப்பாரோ அவர் தவறிழைத்தவர் ஆவார். மாறாக, **مبتدع** முப்ததிஃ - மார்க்கத்தில் புதுமையை புகுத்திய ஒரு பித்அத்வாதியாக இருப்பார். அவர் இஜ்திஹாத்- ஆராய்ச்சி செய்கின்ற ஒரு அறிஞராக இருந்தாலும் சரியே. அவர் இஜ்திஹாத் செய்ததில் அவர் செய்த தவறு மன்னிக்கப்படும் என்பது வேறு விஷயம்.[34]

மேலும் இப்னு தைமிய்யா ﷺ கூறுகிறார்கள்:

யார் அவர்களின் கூற்றுக்கு (-நபித்தோழர்கள் மற்றும் தாபியீன் உடைய கூற்றுக்கு) மாற்றமாக கருத்து கூறுவாரோ, மேலும், அவர்கள் குர்ஆனுக்கு கூறிய விளக்கத்திற்கு மாற்றமான விளக்கத்தை கூறுவாரோ அவர் மார்க்க ஆதாரத்தை புரிவதிலும் அதற்கு விளக்கம் சொல்வதிலும் கண்டிப்பாக தவறிழைத்து விட்டார்.[35]

ஐந்தாவதாக,

**வசனத்தின் முன்பின் தொடருக்கு ஏற்ப மார்க்க ரீதியான அல்லது மொழி ரீதியான பொருள்களில் எது பொருத்தமானதோ அதைக் கொண்டு தஃப்ஸீர் செய்வது.**

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

إِنَّا أَنْزَلْنَا إِلَيْكَ الْكِتَابَ بِالْحَقِّ لِتَحْكُمَ بَيْنَ النَّاسِ بِمَا أَرَاكَ اللَّهُ

(நபியே!) அல்லாஹ் உமக்கு அறிவித்தவற்றைக் கொண்டு மனிதர்களுக்கிடையில் நீர் தீர்ப்பளிப்பதற்காக முற்றிலும் உண்மையுடன் கூடிய இவ்வேதத்தை நாமே உம் மீது இறக்கினோம். (அல்குர்ஆன் 4 : 105)

34. மஜ்மூவுல் ஃபதாவா

35. மஜ்மூவுல் ஃபதாவா

மேலும், அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

إِنَّا جَعَلْنَاهُ قُرْآنًا عَرَبِيًّا لَعَلَّكُمْ تَعْقِلُونَ

நீங்கள் அறிந்து கொள்ளும் பொருட்டே இவ்வேதத்தை (நீங்கள் பேசுகின்ற உங்கள்) அரபி மொழியில் அமைத்தோம்.
(அல்குர்ஆன் 43 : 3)

மேலும், அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَمَا أَرْسَلْنَا مِنْ رَسُولٍ إِلَّا بِلِسَانِ قَوْمِهِ لِيُبَيِّنَ لَهُمْ

(நபியே!) ஒவ்வொரு தூதரும் தன் மக்களுக்குத் தெளிவாக விவரித்துக் கூறும் பொருட்டு, அந்தந்த மக்களின் மொழியைக் கொண்டே (போதனை புரியுமாறு) நாம் அவர்களை அனுப்பி வைத்தோம். (அல்குர்ஆன் 14 : 4)

மார்க்க ரீதியான பொருளுக்கும் மொழி ரீதியான பொருளுக்கும் இடையில் வேறுபாடுகள் இருந்தால் மார்க்க ரீதியான பொருளைக் கொண்டுதான் தஃப்ஸீர் செய்யப்படும். ஏனெனில் குர்ஆன் மார்க்கத்தை விளக்கிக் கூறுவதற்காகத்தான் இறக்கப்பட்டதே தவிர மொழியை விளக்கிக் கூறுவதற்காக அல்ல. ஆனால், மொழி ரீதியான பொருளை கருத்தில் கொள்வதற்கு வலு சேர்க்கும் ஆதாரம் இருந்தால் மொழி ரீதியான பொருளைக் கொண்டு தஃப்ஸீர் செய்யப்படும்.

### மார்க்க ரீதியான பொருளை முற்படுத்துவதற்கு உதாரணம்:

மொழி மற்றும் மார்க்க ரீதியான பொருள்களில் முரண்பாடுகள் இருக்கும்போது மார்க்க ரீதியான பொருளைக் கொண்டுதான் தஃப்ஸீர் செய்யப்படும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَلَا تُصَلِّ عَلَىٰٓ أَحَدٍ مِّنْهُم مَّاتَ أَبَدًا

மேலும், அவர்களில் எவர் இறந்து விட்டாலும் அவர்கள் மீது ஒருபோதும் (ஜனாஸா) தொழுகையும் தொழாதீர்.

(அல்குர்ஆன் 9 : 84)

இந்த வசனத்தில் வந்துள்ள لَا تُصَلِّ லா துஸல்லி என்ற பதத்தில் உள்ள ஸலாஹ் என்பதற்கு துஆ, பிரார்த்தனை என்ற மொழி ரீதியான பொருளும் உள்ளது. தொழுகை நடத்துவது, ஜனாஸா தொழுகை நடத்துவது என்ற மார்க்க ரீதியான பொருளும் உண்டு. இவ்விரண்டு பொருள்களில் மார்க்க ரீதியான பொருளைத்தான் இங்கு நாம் விளக்கமாக கூறவேண்டும். ஏனெனில், அதுதான் இங்கு அல்லாஹ்வுடைய நோக்கமாகும். அதைத்தான் அல்லாஹ் நபி ﷺ அவர்களுக்கு கூற வருகின்றான் என்பதை முன்பின் தொடரை கவனிக்கும்போது புரியலாம்.

முனாஃபிக்களுக்கு துஆ செய்வது கூடாது என்பதற்கு வேறு ஆதாரங்கள் உள்ளன. அதை கூறுவது இந்த வசனத்தின் நோக்கமில்லை.

**மொழி ரீதியான பொருளை முற்படுத்துவதற்கு உதாரணம்:**

மொழி மற்றும் மார்க்க ரீதியான பொருள்களில் முரண்பாடுகள் இருக்கும்போது மொழி ரீதியான பொருளைக் கொண்டு தஃப்ஸீர் செய்வதற்கு உதாரணம்:

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

خُذْ مِنْ أَمْوَالِهِمْ صَدَقَةً تُطَهِّرُهُمْ وَتُزَكِّيهِمْ بِهَا وَصَلِّ عَلَيْهِمْ

(நபியே! அவர்கள் தங்கள் குற்றத்திற்குப் பரிகாரமாகக் கொண்டு வந்திருக்கும்) அவர்களுடைய பொருள்களிலிருந்து தர்மத்தை நீர் எடுத்துக் கொண்டு அவர்களை (உள்ளும் புறமும்) பரிசுத்தமாக்கி

வைத்து அவர்களுக்காக (துஆ) பிரார்த்தனை செய்வீராக.

(அல்குர்ஆன் 9 : 103)

இந்த வசனத்தில் **وَصَلِّ** வஸல்லி என்ற பதத்தில் உள்ள ஸலாஹ் என்பதற்கு துஆ என்பது மொழி ரீதியான பொருள் ஆகும். அதுதான் இங்கு நோக்கமாகும். மார்க்க ரீதியான பொருளாகிய தொழுகை என்பது இங்கு நோக்கமல்ல. இதற்கு ஹதீஸில் ஓர் ஆதாரமும் உண்டு.

அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா ﵁ வாயிலாக இமாம் புகாரி ﵀ பதிவு செய்கிறார்கள்:[36]

**عَنْ عَبْدِ اللهِ بْنِ أَبِي أَوْفَى ﵁ قَالَ كَانَ النَّبِيُّ ﷺ إِذَا أَتَاهُ قَوْمٌ بِصَدَقَتِهِمْ قَالَ اَللّٰهُمَّ صَلِّ عَلَى آلِ فُلاَنٍ فَأَتَاهُ أَبِي بِصَدَقَتِهِ فَقَالَ اَللّٰهُمَّ صَلِّ عَلَى آلِ أَبِي أَوْفَى**

யாராவது ஒரு கூட்டத்தினர் நபி ﷺ அவர்களிடம் தர்ம பொருளை கொண்டுவந்தால் அவர்களுக்கு நபியவர்கள் ஸலாஹ் (துஆ) செய்வார்கள். எனது தந்தையும் நபி ﷺ அவர்களிடம் தனது தர்மத்தை கொண்டு வந்தார்கள். அப்போது நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

**اَللّٰهُمَّ صَلِّ عَلَى آلِ أَبِي أَوْفَى**

அல்லாஹும்ம ஸல்லி அலா ஆலி அபீ அவ்ஃபா

அல்லாஹ்வே! அபூ அவ்ஃபாவிற்கும் அவரது குடும்பத்திற்கும் அருள் புரிவாயாக!

மார்க்க ரீதியான பொருளும் மொழிரீதியான பொருளும் ஒரே

36. ஸஹீஹுல் புகாரி, எண்: 1497

பொருளாக இருப்பதற்கு குர்ஆனில் மிக அதிகமான உதாரணங்கள் இருக்கின்றன.

உதாரணமாக,

اَلسَّمَاءُ – வானம்

اَلْأَرْضُ – பூமி

اَلصِّدْقُ – உண்மை

اَلْكَذِبُ – பொய்

اَلْحَجَرُ – கல்

اَلْإِنْسَانُ – மனிதன்

----------------




# اَلْاِخْتِلَافُ الْوَارِدُ فِي التَّفْسِيْرِ الْـمَأْثُورِ

# தஃப்ஸீர் மஃஸூரில் வருகின்ற கருத்து வேற்றுமைகள்

நபித்தோழர்கள் மற்றும் தாபியீன் கூறியதாக அறிவிக்கப்படும் அல்குர்ஆன் விளக்கங்களை தஃப்ஸீர் மஃஸூர் என்று கூறப்படும். அந்த தஃப்ஸீர் மஃஸூரில் உள்ள கருத்து வேற்றுமைகள் மூன்று வகைப்படும்.

**1). முதலாவது:** வெறும் வார்த்தையில் வேறுபாடுகள் இருக்கும். பொருளில் வேறுபாடுகள் இருக்காது. இத்தகைய கருத்து வேற்றுமை தஃப்ஸீரில் எவ்விதமான பாதிப்பையும் ஏற்படுத்தாது. அறிவிக்கப்பட்ட எல்லா வார்த்தைகளைக் கொண்டும் வசனத்திற்கு விளக்கம் கூறுவது கூடும். காரணம், அந்த வார்த்தைகள் தருகின்ற பொருள்கள் வெவ்வேறாக இருந்தாலும் அந்த பொருள்களின் அடிப்படை கருத்து ஒன்றாகத்தான் இருக்கும். அல்லது ஒன்றுக்கொன்று நெருக்கமாக இருக்கும். அவற்றில் முரண்பாடுகள் இருக்காது.[37]

உதாரணமாக,

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَقَضَى رَبُّكَ أَلَّا تَعْبُدُوا إِلَّا إِيَّاهُ

37. அல்குர்ஆனுடைய வசனங்களுக்கு அறிவிக்கப்படுகின்ற அதிகமான தஃப்ஸீர் மஃஸூர்கள் இந்த வகையை சேர்ந்தவை ஆகும்.

(நபியே!) உமது இறைவன் தன்னைத் தவிர (மற்றெவரையும்) வணங்கக் கூடாதென்று கட்டளையிட்டிருக்கிறான்.

(அல்குர்ஆன் 17 : 23)

இந்த வசனத்தில் வந்துள்ள **قَضَىٰ** - கழா என்ற பதத்திற்கு **أمر** அமர -கட்டளையிட்டான் என்று இப்னு அப்பாஸ் ﷺ கூறுகிறார்கள்.

தாபியி முஜாஹித்[38] ﷺ அவர்கள் **وَصى** வஸ்ஸா -உபதேசம் செய்தான் என்று கூறுகிறார்கள்.

தாபியி ரபீஃ இப்னு அனஸ்[39] ﷺ அவர்கள் **أَوْجَبَ** அவ்ஜப -கட்டாயமாக்கினான் என்று கூறுகிறார்கள்.

இந்த விளக்கங்கள் வார்த்தையால் வேறுபட்டதாக இருந்தாலும் பொருள்கள் அனைத்தும் ஒன்றுக்கொன்று நெருக்கமானதாக இருக்கின்றன.

**2). இரண்டாவது:** வார்த்தையிலும் வேறுபாடு இருக்கும். பொருளிலும் வேறுபாடு இருக்கும். ஆனால், வசனம் அந்த இரண்டு பொருள்களுக்கும் இடம்பாடு உள்ளதாக இருக்கும். ஏனெனில், அந்த பொருள்களில் முரண்பாடு இருக்காது. ஆகவே, அந்த இரண்டு பொருள்களைக் கொண்டும் வசனத்திற்கு தஃப்ஸீர் செய்யப்படும். இதை எப்படி விளங்க வேண்டும் என்றால் கூறப்பட்ட விளக்கங்கள் எல்லாம் வசனத்தின் கருத்துக்கு உதாரணத்தின் அடிப்படையில் கூறப்பட்ட விளக்கமாகும்.

உதாரணமாக,

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

---

38. பிறப்பு: ஹிஜ்ரி 21, இறப்பு: ஹிஜ்ரி 104. முழுப் பெயர்: முஜாஹித் இப்னு ஜப்ர், இவர் அஸ்ஸாயிப் இப்னு அபூ அஸ்ஸாயிப் அவர்களின் உரிமையிடப்பட்ட அடிமையாக இருந்தார். குர்ஆனுக்கு விரிவுரை கூறுவதில் மிகவும் பிரசித்தி பெற்றவர். மற்றும் ஹதீஸ் ஃபிக்ஹ் கலையிலும் அறிஞராக திகழ்ந்தார்.

39. இவர் பக்ர் இப்னு வாயில் வமிசத்தைச் சார்ந்தவர். ஹிஜ்ரி 139 அல்லது 140ல் இறப்பெய்தினார். இவர் குர்ஆன் விரிவுரையாளராகவும் ஹதீஸ் கலை அறிஞராகவும் திகழ்ந்தார்.

وَاتْلُ عَلَيْهِمْ نَبَأَ الَّذِي آتَيْنَاهُ آيَاتِنَا فَانْسَلَخَ مِنْهَا فَأَتْبَعَهُ الشَّيْطَانُ فَكَانَ مِنَ الْغَاوِينَ ○ وَلَوْ شِئْنَا لَرَفَعْنَاهُ بِهَا وَلَكِنَّهُ أَخْلَدَ إِلَى الْأَرْضِ وَاتَّبَعَ هَوَاهُ

(நபியே!) நீர் அவர்களுக்கு (பல்ஆம் இப்னு பாஊர் என்னும்) ஒருவனுடைய சரித்திரத்தை ஓதிக் காண்பிப்பீராக. அவனுக்கு நாம் நம் அத்தாட்சிகளைக் கொடுத்(து கண்ணியமாக்கி வைத்) திருந்தோம். எனினும் அவன் (பாம்பு தன் சட்டையை விட்டு வெளியேறுவதைப் போல) அதிலிருந்து முற்றிலும் வெளியேறி விட்டான். ஆகவே, ஷைத்தான் அவனைப் பின்தொடர்ந்து சென்றான்; (அவனுடைய சூழ்ச்சிக்குள் சிக்கி) அவன் வழிதவறி விட்டான். நாம் எண்ணியிருந்தால் (நம்) அத்தாட்சிகளின் காரணமாக அவனை நாம் உயர்த்தியிருப்போம். எனினும், அவன் இவ்வுலக வாழ்க்கையை நிரந்தரம் என எண்ணி தன் (சரீர) இச்சையைப் பின்பற்றி விட்டான். (அல்குர்ஆன் 7 : 175-176)

இந்த வசனத்தில் கூறப்பட்டவர் யார் என்பதைப் பற்றி விளக்கும் போது இப்னு மஸ்வூத் ﵁ அவர்கள் அவர் இஸ்ரவேலர்களில் உள்ள ஒரு நபர் என்று கூறுகிறார்கள்.

இப்னு அப்பாஸ் ﵁ அவர்கள் அவர் எமன் நாட்டைச் சேர்ந்த ஒரு நபர் என்று கூறுகிறார்கள்.

மற்றும் சிலர், அவர் பல்கா நகரத்தைச் சேர்ந்த ஒரு நபர் என்று கூறுகிறார்கள்.

இந்த விளக்கங்களை எப்படி புரியவேண்டும் என்றால் ஒவ்வொரு விளக்கமும் ஒரு உதாரணமாக கூறப்பட்டது. கூறப்பட்ட எல்லா விளக்கங்களும் இந்த வசனத்திற்கு பொருந்தும். அவற்றுக்கு மத்தியில் முரண்பாடுகள் இல்லை.

மற்றோர் உதாரணம்,

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَكَأْسًا دِهَاقًا

இந்த வசனத்தில் உள்ள **دِهَاقًا** என்ற பதத்திற்கு இப்னு அப்பாஸ் ﵁ அவர்கள் **مملوءة** மம்லூஅதன் நிரம்பியது என்று விளக்கம் கூறுகிறார்கள்.

முஜாஹித் ﵀ அவர்கள் **متتابعة** முததாபிஅதன் தொடர்ச்சியானது என்று விளக்கம் கூறுகிறார்கள்.

இக்ரிமா[40] ﵀ அவர்கள் **صافية** ஸாஃபியதன் தெளிவானது என்று விளக்கம் கூறுகிறார்கள்.

இந்த விளக்கங்கள் வார்த்தையால், பொருளால் மாறுபட்டு இருந்தாலும் வசனம் எல்லா விளக்கங்களுக்கும் இடமளிப்பதாகவே இருக்கின்றது. ஆகவே, இந்த வார்த்தைக்கு பொருள்களாக அறிவிக்கப்பட்டுள்ள எல்லா விளக்கங்களையும் இதற்கு தஃப்ஸீரில் கூறலாம். அவற்றில் எவ்விதமான முரண்பாடுகள் இல்லை. ஒவ்வொரு விளக்கத்தின் மூலமாக குறிப்பிட்ட ஒரு தன்மை எடுத்துக் கூறப்பட்டுள்ளது என்று புரிந்து கொள்ள வேண்டும்.

**மூன்றாவது:** வார்த்தையிலும் வேறுபாடு இருப்பதுடன் பொருளிலும் வேறுபாடு இருக்கும். இரண்டு வேறுபட்ட பொருள்களுக்கு மத்தியில் முரண்பாடுகள் இருப்பதால் இரண்டையும் வசனத்திற்கு விளக்கமாக கூறமுடியாது. ஆகவே, ஆதாரங்களை ஆராய்ந்து, முன்பின் தொடரை கவனித்து இரண்டில் எது அந்த வசனத்திற்கு

40. இவருடைய முழுப் பெயர் அபூ அப்தில்லாஹ் இக்ரிமா இப்னு அப்தில்லாஹ் அல் பர்பரி அல் மதனி, இவர் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் அவர்களின் உரிமையிடப்பட்ட அடிமையாக இருந்தார். இவர் இருநூறு நபித்தோழர்களை சந்தித்து இருப்பதாகவும் எழுபது பெரிய தாபியீன்கள் இவரிடமிருந்து அறிவிப்புகள் செய்வதாகவும் கூறுப்பட்டுள்ளது. தஃப்ஸீர் மற்றும் ஃபிக்ஹ் கலை அறிஞராகத் திகழ்ந்தார். இவரது பிறப்பு ஹிஜ்ரி 25 ஆகும். இறப்பு ஹிஜ்ரி 105 ஆகும்.

ஏற்றமானதாக இருக்கின்றதோ அதைத்தான் விளக்கமாக எடுத்துக் கொள்ளப்படும்.

உதாரணமாக அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

إِنَّمَا حَرَّمَ عَلَيْكُمُ الْمَيْتَةَ وَالدَّمَ وَلَحْمَ الْخِنْزِيرِ وَمَا أُهِلَّ لِغَيْرِ اللَّهِ بِهِ فَمَنِ اضْطُرَّ غَيْرَ بَاغٍ وَلَا عَادٍ فَإِنَّ اللَّهَ غَفُورٌ رَحِيمٌ

(புசிக்கக் கூடாதென்று) உங்களுக்கு விலக்கப்பட்டிருப்பவை எல்லாம் செத்ததும், இரத்தமும், பன்றியின் மாமிசமும் அல்லாஹ் அல்லாதவற்றின் பெயர் கூறப்பட்டவையும் ஆகும். எவரேனும் பாவம் செய்யும் எண்ணமின்றி, (எவராலும்) நிர்ப்பந்திக்கப்பட்டு (அல்லது பசியின் கொடுமையால் அவசியத்திற்கு அதிகப்படாமல் இவற்றைப் புசித்து) விட்டால் (அவர் மீது குற்றமாகாது. ஆகவே, இத்தகைய நிலைமையில் அவரை) நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னித்து மிகக் கருணை காட்டுவான். (அல்குர்ஆன் 16 : 115)

இந்த வசனத்தில் உள்ள غير بَاغ என்பதற்கு மன்னருக்கு எதிராக புரட்சி செய்யாதவர் என்றும் ولاعَاد என்பதற்கு பாவமான காரியத்திற்கு பயணம் செய்யாதவர் என்றும் சிலர் விளக்கம் கூறுகிறார்கள்.[41]

வேறு சிலர் غير بَاغ என்பதற்கு ஹராமை சாப்பிடுவதில் விருப்பமில்லாதவர் என்றும் ولاعَاد என்பதற்கு தேவையான அளவைவிட அதிகம் சாப்பிட்டு வரம்பு மீறாதவர் என்றும் விளக்கம் கூறுகிறார்கள்.[42]

முன்பின் தொடரை கவனித்து இந்த இரண்டாவது பொருளைத்தான் விளக்கமாக எடுத்துக் கொள்ளப்படும். இந்த் வசனத்தில் கூறப்பட்டவற்றை உண்பதை ஹலால் ஆக்கியதின் நோக்கம் நிர்ப்பந்தத்தை நீக்கி கட்டாயமான தேவையை பூர்த்தி செய்வதாகும்.

41. இது முஜாஹித் ﷺ மற்றும் ஸயீது ﷺ அவர்களின் விளக்கமாகும். - தஃப்ஸீர் தபரி
42. இது இப்னு அப்பாஸ் ﷺ அவர்களின் விளக்கமாகும். - தஃப்ஸீர் தபரி

நிர்ப்பந்தம் என்பதும் கட்டாயமான தேவை என்பதும் பொதுவான ஒன்றாகும். அது மன்னருக்கு எதிராக புரட்சி செய்கின்றவருக்கும் ஏற்படலாம். ஹராமான பயணத்தில் இருப்பவருக்கும் ஏற்படலாம். அவர்கள் அல்லாத மற்றவர்களுக்கும் ஏற்படலாம்.

மற்றோர் உதாரணம்

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

**وَإِنْ طَلَّقْتُمُوهُنَّ مِنْ قَبْلِ أَنْ تَمَسُّوهُنَّ وَقَدْ فَرَضْتُمْ لَهُنَّ فَرِيضَةً فَنِصْفُ مَا فَرَضْتُمْ إِلَّا أَنْ يَعْفُونَ أَوْ يَعْفُوَ الَّذِي بِيَدِهِ عُقْدَةُ النِّكَاحِ**

ஆனால், அவர்களுடைய மஹரை நீங்கள் குறிப்பிட்டிருந்து, அவர்களைத் தொடுவதற்கு முன்னதாகவே தலாக்குக் கூறிவிட்டால் நீங்கள் (மஹராகக்) குறிப்பிட்டிருந்ததில் பாதி அப்பெண்களுக்கு உண்டு. எனினும், யாருடைய கையில் திருமண தொடர்பு இருக்கிறதோ அவன் (கணவன்) அல்லது அவள் (மனைவி) விட்டுக் கொடுத்தாலே தவிர (அதாவது கணவன் முழு மஹரையும் கொடுத்திடலாம் அல்லது மனைவி பாதி மஹரையும் வாங்காமல் விட்டு விடலாம்.) (அல்குர்ஆன் 2 : 237)

இந்த வசனத்தில்,

**بِيَدِهِ عُقْدَةُ النِّكَاحِ**

“யாருடைய கையில் திருமண தொடர்பு இருக்கிறதோ” என்பது யாரை குறிக்கிறது?

அதற்கு விளக்கம், **زَوْج** ஸவ்ஜ் -கணவன் என்று அலி ﵁ அவர்கள் கூறுகிறார்கள்.

**وَلِي** வலீ -பெண்ணுடைய பொறுப்பாளர் என்று இப்னு அப்பாஸ் ﵁ கூறுகிறார்கள்.

இவ்விரண்டு விளக்கங்களில் முதல் விளக்கம்தான் ஏற்றமானதாகும். அதை உறுதிசெய்கின்ற நபிமொழியும் தப்ரானி, மற்றும் தாரகுத்னி நூல்களில் காணப்படுகின்றது.[43]

43. عَنْ عَمْرِو بْنِ شُعَيْبٍ ﷺ عَنْ أَبِيهِ عَنْ جَدِّهِ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ الَّذِي بِيَدِهِ عُقْدَةُ النِّكَاحِ الزَّوْجُ رواه الطبراني في المعجم الأوسط

அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னு ஆஸ் ؓ கூறுகிறார்கள்: الَّذِي بِيَدِهِ عُقْدَةُ النِّكَاحِ -யாருடைய கையில் திருமணத்தின் முடிச்சு (-ஒப்பந்த உரிமை) இருக்குமோ என்ற வசனத்திற்கு அவர் கணவர் என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.

நூல்: முஃஜம் அவ்ஸத் - தபரானி, எண்: 6359, தாரகுத்னி 3762.

மேற்கண்ட ஹதீஸின் அறிவிப்பாளர்களில் இப்னு லஹீஆ இடம் பெறுகிறார். இவர் பலவீனமான அறிவிப்பாளர் ஆவார்.

الَّذِي بِيَدِهِ عُقْدَةُ النِّكَاحِ என்ற வசனத்திற்கு அவர் கணவர் என்று கருத்தை இப்னு ஷுப்ருமா (இறப்பு 144 ஹிஜ்ரி) மற்றும் ஸயீது இப்னுல் முஸய்யப் (பிறப்பு ஹிஜ்ரி 15, இறப்பு ஹிஜ்ரி 95) ஆகிய தாபியீன்களும் கூறுகிறார்கள்.

عَنْ عِيسَى بْنِ عَاصِمٍ ؓ قَالَ سَمِعْتُ شُرَيْحًا يَقُولُ قَالَ لِي عَلِيُّ بْنُ أَبِي طَالِبٍ ؓ الَّذِي بِيَدِهِ عُقْدَةُ النِّكَاحِ قُلْتُ وَلِيُّ الْمَرْأَةِ قَالَ لَا بَلْ هُوَ الزَّوْجُ رواه الدارقطني في السنن

الَّذِي بِيَدِهِ عُقْدَةُ النِّكَاحِ - யாருடைய கையில் திருமணத்தின் முடிச்சு (-ஒப்பந்த உரிமை) இருக்குமோ என்ற வசனத்தை அலி ؓ அவர்கள் என்னிடம் கூறினார்கள்: நான் கூறினேன், அவர் وَلِيُّ الْمَرْأَةِ வலியுல் மர்அத்தி - பெண்ணின் காப்பாளர் என்று. அலி ؓ அவர்கள் கூறினார்கள்: இல்லை, மாறாக, அவர் கணவர்தான் என்று.

அறிவிப்பாளர்: ஷுரைஹ், நூல்: சுனன் தாரகுத்னி, எண்: 3713.

عَنْ زَاذَانَ قَالَ قَالَ عَلِيٌّ ؓ الَّذِي بِيَدِهِ عُقْدَةُ النِّكَاحِ الزَّوْجُ قَالَ سُفْيَانُ وَكَانَ ابْنُ شُبْرُمَةَ يَقُولُ هُوَ الزَّوْجُ رواه الدارقطني في السنن

அலி அவர்கள் الَّذِي بِيَدِهِ عُقْدَةُ النِّكَاحِ என்பர் கணவன்தான் என்று கூறினார்கள் என்று ஸாதான் கூறினார். இப்னு ஷுப்ருமா அவர்களும் அவர் கணவர்தான் என்று கூறியதாக ஸுஃப்யான் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: ஸாதான், நூல்: தாரக்குத்னி, எண்: 3717.

**பாடம் 4**



# تَرْجَمَةُ الْقُرْآنِ

# குர்ஆனை மொழிபெயர்த்தல்

தர்ஜமா என்பதன் அகராதி பொருள் தெளிவுபடுத்துதல், விவரித்தல் ஆகும். கல்வி வழக்கத்தில் தர்ஜமா என்றால் ஒரு மொழியில் சொல்லப்பட்ட விஷயத்தை வேறு ஒரு மொழியில் சொல்வதாகும்.

தர்ஜமதுல் குர்ஆன் என்றால் அரபி அல்லாத வேறு ஒரு மொழியில் குர்ஆனின் கருத்துகளை கூறுவதாகும்.

**தர்ஜமா இரு வகைப்படும்**

**ترجمة حرفية தர்ஜமா ஹர்ஃபிய்யா:**

அதாவது, எழுத்துக்கு எழுத்து, வார்த்தைக்கு வார்த்தை மொழிபெயர்ப்பு செய்வது, குர்ஆன் வசனத்தில் உள்ள ஒவ்வொரு வார்த்தைக்கு நேராக வேறு ஒரு மொழியில் அதன் பொருளை எழுதுவது.

**ترجمة معنوية அல்லது ترجمة تفسيرية தர்ஜமா மஃனவிய்யா, தர்ஜமா தஃப்ஸீரிய்யா:**

அதாவது, குர்ஆன் வசனத்தின் பொருளை அல்லது கருத்தை வேறு ஒரு மொழியில் கொண்டுவருவது, மூல மொழியில் உள்ள வாக்கிய அமைப்புக்கும், மற்றும் தனிப்பட்ட வார்த்தைக்கும் மொழிபெயர்ப்பு செய்யாமல் வசனத்தின் மொத்த பொருளும் கருத்தும் தெளிவாகும்படி மொழிபெயர்ப்பு செய்வதை இது குறிக்கும்.

தர்ஜமா ஹர்ஃபிய்யாவிற்கு உதாரணம்

إِنَّا جَعَلْنَاهُ قُرْآنًا عَرَبِيًّا لَعَلَّكُمْ تَعْقِلُونَ

| قُرْءٰنًا<br>குர்ஆனாக | جَعَلْنٰهُ<br>இதை ஆக்கினோம் | اِنَّا<br>நிச்சயமாக நாம் |
|---|---|---|
| لَّعَلَّكُمْ تَعْقِلُوْنَ ۝٣<br>நீங்கள் சிந்தித்து புரிய வேண்டும் என்பதற்காக | | عَرَبِيًّا<br>அரபிமொழி |

தர்ஜமா மஃனவிய்யாவிற்கு உதாரணம்

إِنَّا جَعَلْنَاهُ قُرْآنًا عَرَبِيًّا لَعَلَّكُمْ تَعْقِلُونَ

(மக்காவாசிகளே!) நீங்கள் (எளிதில்) அறிந்துகொள்ளும் பொருட்டே இவ்வேதத்தை (நீங்கள் பேசும் உங்கள்) அரபி மொழியில் அமைத்தோம். (அல்குர்ஆன் 43 : 3)

## حُكْمُ تَرْجَمَةِ الْقُرْآنِ

தர்ஜமா ஹர்ஃபிய்யா என்பது குர்ஆனுக்கு செய்ய முடியாது. இதுதான் அதிகமான அறிஞர்களின் கருத்தாகும். காரணம் என்னவெனில், தர்ஜமா ஹர்ஃபிய்யா செய்ய வேண்டும் என்றால் அதற்கு பல நிபந்தனைகள் பூர்த்தியாகி இருக்க வேண்டும். அப்படி இல்லையென்றால் தர்ஜமா ஹர்ஃபிய்யா செய்ய முடியாது.

அந்த நிபந்தனைகள் பின்வருமாறு:

1). மூல மொழியில் இருக்கின்ற தனிப்பட்ட வார்த்தைகளுக்கு சமமான வார்த்தை எந்த மொழியில் நாம் மொழி பெயர்ப்பு செய்கின்றமோ அதில் இருக்க வேண்டும்.

2). மூல மொழியில் இருக்கின்ற ஹர்ஃப் -தனிப்பட்ட எழுத்துகளுக்கு சமமான எழுத்து மொழிபெயர்ப்பு மொழியில் இருக்க வேண்டும்.

3). இரண்டு மொழிகளும் இணைதல், பிரிதல், ஆரம்பிக்கப்படுதல், முடிதல், தன்மைகளை விவரித்தல், நிலைகளை விவரித்தல், ஒன்றோடொன்று சேர்தல் என இலக்கண இலக்கிய அமைப்புகள் அனைத்திலும் ஒன்றுக் கொன்று சமமாக இருக்க வேண்டும்.

தர்ஜமா ஹர்ஃபிய்யா அடிப்படையில் மொழிபெயர்ப்பு செய்வது ஓரிரு வசனங்களில் சாத்தியப்படும் என்று சில அறிஞர்கள் கூறுகிறார்கள். என்றாலும், குர்ஆன் முழுவதும் அவ்வாறு செய்வது கூடாது. ஏனெனில், அதன் மூலம் வசனங்களின் பொருளை முழுமையாக கொண்டுவர முடியாது. மேலும் அதுபோன்ற மொழிபெயர்ப்பு உள்ளங்களில் ஒரு தாக்கத்தை ஏற்படுத்தாது. தர்ஜமா மஃனவிய்யா கூடும் என்று இருக்கும்போது தர்ஜமா ஹர்ஃபிய்யா செய்ய வேண்டிய அவசியம் இல்லை.

இதன் அடிப்படையில் தர்ஜமா ஹர்ஃபிய்யா சில வாக்கியங்களில் செய்வது சாத்தியமாக இருந்தாலும் முழு குர்ஆனுக்கும் இவ்வாறு செய்வது மார்க்க சட்டப்படி கூடாது. சில நேரங்களில் ஒரு சில வார்த்தைகளுக்கு மட்டும் செய்வது தவறில்லை. குறிப்பாக, முன்னால் இருப்பவர்களுக்கு சில வார்த்தைகளை புரிவைப்பதன் தேவை ஏற்பட்டால் இவ்வாறு செய்வது கூடும்.

குர்ஆனை, தர்ஜமா மஃனவிய்யா அடிப்படையில் மொழிபெயர்ப்பு செய்வது பொதுவாக அனுமதிக்கப்பட்டதாகும். இதுதான் அறிஞர்களின் கருத்தாகும். ஏனெனில், இவ்வாறு செய்வதில் எவ்வித குழப்பமும் ஏற்பட போவதில்லை. மேலும், குர்ஆனை பிற மொழிபேசும் மக்களுக்கு எடுத்துரைப்பது மார்க்க கடமையாகும். ஆகவே, அந்த கடமையை மொழிபெயர்ப்பு இல்லாமல் செய்ய முடியாது என்பதால் மொழிபெயர்ப்பு செய்வது கட்டாயம் என்று ஆகிவிடுகிறது.

தர்ஜமா மஃனவிய்யா செய்வது கூடும் என்று இருந்தாலும் அதற்கும் நிபந்தனைகள் உள்ளன.

1). தர்ஜமாவை -மொழிபெயர்ப்பை குர்ஆனுக்கு பதிலாக ஆக்கிவிடக் கூடாது. அதாவது, தர்ஜமாவை மட்டும் வைத்து விட்டு குர்ஆனை புறக்கணித்து விடக்கூடாது. குர்ஆனும் எழுதப்பட்டு தர்ஜமாவும் அதற்கருகில் எழுதப்படவேண்டும்.

2). தர்ஜமா செய்பவர் இரு மொழிகளிலும் மூல மொழியிலும் தான் மொழிபெயர்க்கின்ற மொழியிலும் புலமை உள்ளவராக இருக்க வேண்டும்.

3). குர்ஆனில் பயன்படுத்தப்பட்டுள்ள பதங்களுக்குரிய மார்க்க ரீதியான பொருளையும் விளக்கத்தையும் அறிந்திருக்க வேண்டும்.

4). முஸ்லிமாகவும் மார்க்கத்தில் நம்பிக்கைக்குரியவராகவும் சீரிய நடத்தை உடையவராகவும் இருக்க வேண்டும்.

-------------



பாடம் 5

# اَلْـمُشْتَهِرُونَ بِالتَّفْسِيْرِ مِنَ الصَّحَابَةِ

# குர்ஆனுக்கு தஃப்ஸீர் செய்வதில் பிரபலமான தோழர்கள்

இமாம் ஸுயூத்தி[44] ﵀ குறிப்பிடுகிறார்கள்: ஸஹாபாவில் பலர் குர்ஆனுக்கு விரிவுரை கூறுவதில் பிரபலமாக இருந்தார்கள். குறிப்பாக, நான்கு கலீஃபாக்கள்

1) அபூ பக்ர் ﵁

2) உமர் ﵁

3) உஸ்மான் ﵁

4) அலி ﵁

ஆனால் முந்திய மூவர்கள் கிலாஃபத்துடைய காரியங்களில் அதிகம் வேலைப்பளு உள்ளவர்களாக இருந்ததால் அவர்கள் மூலம் நமக்கு அதிகம் அறிவிப்புகள் கிடைக்கவில்லை. மேலும், அவர்களின் காலத்தில் தஃப்ஸீரை அறிந்தவர்களும் அதிகமாக இருந்தார்கள். ஆகவே, அதை அறிவிக்க வேண்டும் என்ற அவசியமும் அம்மூவருக்கும் ஏற்படவில்லை.

மேற்கூறப்பட்ட ஸஹாபாவைத்தவிர அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ﵁ மற்றும் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ﵁ ஆகிய இரு தோழர்களும் குர்ஆனுக்கு விரிவுரை கூறுவதில் மிகவும் பிரபலமாக இருந்தார்கள்.

44. பிறப்பு ஹிஜ்ரி 849, இறப்பு ஹிஜ்ரி 911. குர்ஆன் விரிவுரை மற்றும் வரலாற்றுக் கலையில் பிரபலமான மார்க்க அறிஞர்.

நாம் நமது இந்த சிறு நூலில் மூன்று நபித்தோழர்களின் சுருக்கமான அறிமுகத்தை கூறுகிறோம்.

## 1) அலீ இப்னு அபீ தாலிப் ﵁

இவர் ரஸூலுல்லாஹ் ﷺ உடைய பெரிய தந்தை அபூ தாலிபின் மகன் ஆவார், மேலும் நபியவர்களின் மகளார் ஃபாத்திமாவின் கணவனார் ஆவர். நபியவர்களின் உறவினர்களில் இவர்தான் முதன்முதலில் இஸ்லாமை ஏற்றார். இவருக்கு அபுல் ஹசன், அபூ துராப் என்ற புனைப் பெயர்கள் இருந்தன. ஆனால், அலீ என்ற பெயரில்தான் அவர்கள் பிரபலமாக இருந்தார்கள்.

நபியவர்களுக்கு நபித்துவம் கிடைப்பதற்கு பத்து ஆண்டுகளுக்கு முன்பாக இவர்கள் பிறந்தார்கள். நபியவர்களின் அரவணைப்பில் வளர்ந்தார்கள். நபியவர்களின் மதீனா வாழ்க்கையில் எல்லாப் போர்களிலும் நபியுடன் கலந்து கொண்டார்கள். அனைத்து போர்களிலும் முதல் வரிசையில் கொடியை ஏந்தி இருப்பார்கள். தபுக் போரில் மட்டும்தான் மதீனாவில் தங்கிவிட்டார்கள். நபி ﷺ அவர்கள் இவர்களை இவரது குடும்பத்தில் தங்கவைத்துவிட்டு, மூஸாவிற்கு ஹாருன் இருந்ததைப் போன்று என் சார்பாக நீ இருப்பதை நீ விரும்பவில்லையா? ஆனால், எனக்கு பின்னர் யாரும் நபி இல்லை என்று கூறினார்கள்.[45]

---

45. ஸஹீஹுல் புகாரி 3430, 4064.

عَنْ سَعْدٍ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ خَرَجَ إِلَى تَبُوكَ وَاسْتَخْلَفَ عَلِيًّا فَقَالَ أَتُخَلِّفُنِي فِي الصِّبْيَانِ وَالنِّسَاءِ قَالَ أَلَا تَرْضَى أَنْ تَكُونَ مِنِّي بِمَنْزِلَةِ هَارُونَ مِنْ مُوسَى إِلَّا أَنَّهُ لَيْسَ نَبِيٌّ بَعْدِي

ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) அறிவித்தார்: ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் தபூக் போருக்குப் புறப்பட்டார்கள். (மனைவி மக்களைக் கவனித்துக் கொள்வதற்காக மதீனாவில்) அலி ﵁ அவர்களை (தாம் திரும்பிவரும் வரை தமக்கு)ப் பிரதிநிதியாக நியமித்தார்கள். அப்போது அலி ﵁, ‘குழந்தைகளையும் பெண்களையும் கவனித்துக் கொள்வதற்காகவா என்னைவிட்டுச் செல்கிறீர்களா?’ என்று கேட்டார்கள். நபி ﷺ அவர்கள், ‘மூஸாவிடம் ஹாரூன் இருந்த அந்தஸ்தில் என்னிடம் நீங்கள் இருப்பதை விரும்பவில்லையா? ஆயினும், எனக்குப் பிறகு எந்த நபியும் இல்லை’ என்று கூறினார்கள்.

இவர் விஷயத்தில் அறிவிக்கப்பட்ட அளவு சிறப்புகள், தகுதிகள் வேறு யாருக்கும் அறிவிக்கப்படவில்லை. இவர் விஷயத்தில் இரு கூட்டத்தினர் வழிகெட்டு நாசமடைந்தனர். ஒரு கூட்டம், நாசிபா. இவர்கள் அலீ ﵁ அவர்களை பகைத்தார்கள். அவர்களின் சிறப்புகளை மறைக்க முயற்சித்தார்கள். இன்னொரு கூட்டம் ராஃபிழா, இவர்கள் அலீ ﵁ அவர்களை நேசிப்பதில் அளவுகடந்து சென்றனர். அலீ ﵁ அவர்களுக்கு எவ்விதத்திலும் அவசியமில்லாத புகழ்களை பொய்யாக புனைந்தனர். உண்மையில் அவர்கள் அலீ ﵁ அவர்களை புகழவில்லை. மாறாக அந்த கூட்டம் கூறியதெல்லாம் குறைபாடுகள்தான்.

வீரத்திலும் கல்வியிலும் நுண்ணறிவிலும் புத்தி கூர்மையிலும் மிக பிரசித்திப் பெற்று திகழ்ந்தார்கள். அபுல் ஹசன் இல்லாத சமயத்தில் சிக்கலான பிரச்சனைகள் வருவதைவிட்டும் நான் பாதுகாவல் தேடுகிறேன் என்று உமர் ﵁ அவர்கள் கூறுவார்கள். பொதுவாக இலக்கணத்தில் ஒரு கஷ்டமான பாடம் என்றால் அதை அபுல் ஹசன் இல்லாத விஷயம் இது என்று கூறுவார்கள்.

அலீ ﵁ அவர்கள் கூறுவார்கள்: என்னிடம் கேளுங்கள், என்னிடம் கேளுங்கள், என்னிடம் கேளுங்கள், அல்லாஹு தஆலாவின் வேதத்தைப் பற்றி என்னிடம் கேளுங்கள்! அல்லாஹ்வின் மீது ஆணையாக எந்த ஒரு வசனமாக இருந்தாலும் அது இரவில் இறங்கியதா அல்லது பகலிலா என்று அதைப் பற்றி நான் அறியாமல் இருக்க மாட்டேன். இப்னு அப்பாஸ் ﵁ அவர்கள் கூறினார்கள்: அலீ ﵁ அவர்கள் கூறியதாக சரியான அறிவிப்பாளர்கள் அறிவித்து விட்டால் நாங்கள் அந்த கருத்தை விட்டு வேறு கருத்திற்கு செல்ல மாட்டோம். மேலும், அவர்கள் கூறியுள்ளார்கள்: நான் குர்ஆனுடைய தஃப்ஸீரை கற்றதெல்லாம் அலீ ﵁ அவர்களிடமிருந்துதான்.

உமர் ﵁ அவர்கள் தமக்கு பின்னர் கலீஃபாவாக யார் ஆக வேண்டும் என்று பரிந்துரைத்த ஆறு நபர்களில் இவரும் ஒருவர் ஆவார். இவரிடம் தாங்கள் கலீஃபாவாக இருங்கள் என்று

அப்துர்ரஹ்மான் இப்னு அவ்ஃப் ﵁ கூறியபோது அலீ ﵁ அவர்கள் சில நிபந்தனைகளை வைத்தார்கள். அவற்றில் சிலவற்றை அப்துர்ரஹ்மான் ﵁ அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. பிறகுதான் உஸ்மான் ﵁ அவர்களை கலீஃபாவாக ஏற்று அவர்களுக்கு அப்துர்ரஹ்மான் ﵁ பைஅத் செய்தார்கள். பிறகு உஸ்மானுக்கு அலீ ﵁ அவர்களும் பைஅத் செய்து கொடுத்தார்கள். பிறகு, மக்கள் எல்லாம் பைஅத் செய்து கொடுத்தார்கள். உஸ்மான் ﵁ அவர்களுக்கு பின்னர் அலீ ﵁ அவர்கள் கலீஃபாவாக ஆக்கப்பட்டார்கள். பிறகு, கூஃபா நகரத்தில் ஹிஜ்ரி நாற்பதாம் ஆண்டு ரமழான் மாதம் பிறை பதினேழு இரவு அவர்கள் ஷஹீதாக கொல்லப்பட்டார்கள்.

## 2). அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ﵁

இவர்களின் பெயர், அப்துல்லாஹ் மஸ்வூத் இப்னு ஃகாஃபில் அல்ஹுதலி.

இவர்களின் தாயார் பெயர் உம்மு அப்த். ஆகவே இவர்களை சில நேரம் இப்னு உம்மி அப்த் என்று அழைக்கப்படும். இஸ்லாமை முதன்முதலில் ஏற்றுக்கொண்ட தோழர்களில் இவரும் ஒருவர் ஆவார். இரு ஹிஜ்ரத் செய்தார்கள். ஒன்று ஹபஷாவை நோக்கி, இரண்டாவது மதீனாவை நோக்கி. பத்ரு, மற்றும் அதை அடுத்துள்ள எல்லாப் போர்களிலும் நபியவர்களுடன் கலந்துகொண்டார்கள்.

நபி ﷺ அவர்களிடமிருந்து நேரடியாக எழுபதுக்கு மேற்பட்ட சூராக்களை மனனம் செய்தார்கள்.

இஸ்லாமின் ஆரம்ப காலத்தில் இவரைப் பார்த்து, إِنَّكَ لَغُلَامٌ مُعَلَّمٌ நீ கல்விகற்பதில் ஆர்வமுள்ள இளைஞன் என்று நபி ﷺ அவர்கள் பாராட்டினார்கள்.[46]

மேலும், நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

46. நூல்: அஹ்மது, எண்: 3417

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ أَحَبَّ أَنْ يَقْرَأَ الْقُرْآنَ غَرِيضًا – كَذَا قَالَ – كَمَا أُنْزِلَ فَلْيَقْرَأْهُ عَلَى قِرَاءَةِ ابْنِ أُمِّ عَبْدٍ

யார் குர்ஆனை அது இறக்கப்பட்டது போன்று பசுமையாக ஓத விரும்புவாரோ அவர் இப்னு உம்மி அப்த் உடைய ஓதுதலின் அடிப்படையில் ஓதவும்.[47]

عَنْ شَقِيق بْن سَلَمَةَ ﷺ قَالَ خَطَبَنَا عَبْدُ اللهِ بْنُ مَسْعُودٍ ﷺ فَقَالَ وَاللهِ لَقَدْ أَخَذْتُ مِنْ فِي رَسُولِ اللهِ ﷺ بِضْعًا وَسَبْعِينَ سُورَةً وَاللهِ لَقَدْ عَلِمَ أَصْحَابُ النَّبِيِّ ﷺ أَنِّي مِنْ أَعْلَمِهِمْ بِكِتَابِ اللهِ وَمَا أَنَا بِخَيْرِهِمْ

ஷஃகீக் இப்னு சலமா கூறுகிறார்: எங்களுக்கு முன் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் உரை நிகழ்த்தினார்கள். அப்போது அவர்கள் கூறுயதாவது, நான் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களின் வாயிலிருந்து நேரடியாக எழுபதுக்கும் மேற்பட்ட சூராக்களை கற்றேன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடைய தோழர்கள் நன்கு அறிந்திருந்தார்கள்: நிச்சயமாக நான் அல்லாஹ்வின் வேதத்தை அவர்களில் அதிகம் அறிந்தவன் என்று. இருந்தும் நான் அவர்களின் சிறந்தவன் என்று நான் கூறவில்லை.[48]

عَنْ مَسْرُوقٍ قَالَ قَالَ عَبْدُ اللهِ ﷺ وَاللهِ الَّذِي لاَ إِلَهَ غَيْرُهُ، مَا أُنْزِلَتْ سُورَةٌ مِنْ كِتَابِ اللهِ إِلَّا أَنَا أَعْلَمُ أَيْنَ أُنْزِلَتْ وَلاَ أُنْزِلَتْ آيَةٌ

47. இப்னு மாஜா, எண்: 138. இது போன்ற செய்தியை அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ﷺ அவர்கள் வாயிலாகவும் அம்ர் இப்னு ஹாரிஸ் இப்னு முஸ்தலிக் ﷺ வாயிலாகவும் இமாம் அஹ்மது ﷺ பதிவு செய்துள்ளார்கள். எண்: 9378, 17729.

48. ஸஹீஹுல் புகாரி, எண்: 4616.

مِنْ كِتَابِ اللهِ إِلَّا أَنَا أَعْلَمُ فِيمَ أُنْزِلَتْ وَلَوْ أَعْلَمُ أَحَدًا أَعْلَمَ مِنِّي بِكِتَابِ اللهِ تُبَلِّغُهُ الإِبِلُ لَرَكِبْتُ إِلَيْهِ

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ﵁ கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் மீது சத்தியமாக, அவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாரும் அறவே இல்லை, அல்லாஹ்வின் வேதத்தில் எந்த ஒரு அத்தியாயமும் அது எங்கு இறங்கியது என்று நான் அறியாமல் இல்லை. இன்னும் அல்லாஹ்வின் வேதத்தில் எந்த ஒரு வசனமும் அது எது விஷயமாக இறக்கப்பட்டது என்று நான் அறியாமல் இல்லை. அல்லாஹ்வின் வேதத்தை என்னைவிட அதிகம் அறிந்தவர் ஒருவர் இருக்கின்றார் என்று நான் அறிந்து, அவரிடம் பயணம் செய்து செல்ல முடியும் என்று இருந்தால் நான் அவரிடம் பயணம் செய்து சென்று (அந்த விளக்கத்தை) கற்றிருப்பேன்.[49]

நபி ﷺ அவர்களுக்கு பணிவிடை செய்த தோழர்களில் இவரும் குறிப்பிடத்தக்க ஒருவர் ஆவார். நபி ﷺ அவர்களின் செருப்பு, உளூ செய்யும் பாத்திரம், தலையணை இவரிடம் இருக்கும்.

عَنْ اَبِي مُوسَى الأَشْعَرِيِّ ﵁ قَالَ قَدِمْتُ أَنَا وَأَخِي مِنَ اليَمَنِ فَمَكَثْنَا حِينًا مَا نُرَى إِلَّا أَنَّ عَبْدَ اللهِ بْنَ مَسْعُودٍ ﵁ رَجُلٌ مِنْ أَهْلِ بَيْتِ النَّبِيِّ ﷺ لِمَا نَرَى مِنْ دُخُولِهِ وَدُخُولِ أُمِّهِ عَلَى النَّبِيِّ ﷺ

நானும் எனது சகோதரரும் ஏமன் நாட்டிலிருந்து வந்தோம். (மதீனாவில்) சில காலம் தங்கி இருந்தோம். அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ﵁ அவர்களும் அவர்களின் தாயாரும் நபியவர்களிடம் அதிகம் உள்ளே சென்று வந்ததை நாங்கள் பார்த்து அவர் நபி ﷺ அவர்களின் குடும்பத்தைச் சார்ந்த ஒரு நபர் என்றே கருதினோம்.[50]

49. புகாரி, 5002

50. நூல்: புகாரி, எண்: 3763

عَنْ عَبْدِ الرَّحْمَنِ بْنِ يَزِيدَ ﵁ قَالَ سَأَلْنَا حُذَيْفَةَ عَنْ رَجُلٍ قَرِيبِ السَّمْتِ وَالهَدْيِ مِنَ النَّبِيِّ ﷺ حَتَّى نَأْخُذَ عَنْهُ فَقَالَ مَا أَعْرِفُ أَحَدًا أَقْرَبَ سَمْتًا وَهَدْيًا وَدَلًّا بِالنَّبِيِّ ﷺ مِنْ ابْنِ أُمِّ عَبْدٍ

அப்துர் ரஹ்மான் இப்னு யஸீது ﵁ கூறுகிறார்கள்: பழக்க வழக்கத்திலும் அழகிய தோற்றத்திலும் நபி ﷺ அவர்களுக்கு மிக நெருக்கமான ஒருவர் யார், நாங்கள் அவரிடம் கல்வி கற்க விரும்புகிறோம் என்று ஹுதைஃபா ﵁ அவர்களிடம் நாங்கள் கேட்டோம். அதற்கு அவர் கூறினார்: இப்னு உம்மு அப்தை விட நபி ﷺ அவர்களுக்கு அழகிய தோற்றத்தாலும் பழக்க வழக்கத்தாலும் அங்க அடையாளத்தாலும் நெருக்கமான ஒருவரை நான் அறிய மாட்டேன்.[51]

உமர் ﵁ அவர்கள் தங்கள் ஆட்சியில் கூஃபா நகரத்திற்கு அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ﵁ அவர்களை அங்குள்ள மக்களுக்கு கல்வி போதிப்பதற்காக அனுப்பினார்கள். மேலும் அம்மார் ﵁ அவர்களை கூஃபாவிற்கு அதன் கவர்னராக அனுப்பி வைத்தார்கள். மேலும், கூறினார்கள்: இந்த இருவரும் நபி ﷺ அவர்களின் தோழர்களில் மிக உயர்ந்த கண்ணியவான்களில் உள்ளவர்கள். ஆகவே, நீங்கள் அனைவரும் அவ்விருவரையும் பின்பற்றி நடந்து கொள்ளுங்கள்!

உஸ்மான் ﵁ அவர்கள் தங்கள் ஆட்சியில் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ﵁ அவர்களையே கூஃபாவின் கவர்னராக சில காலம் வைத்திருந்தார்கள். பிறகு அப்பதவியிலிருந்து நீக்கிவிட்டு அவர்களை மதீனாவிற்கு அழைத்துக் கொண்டார்கள்.

ஹிஜ்ரி முப்பத்தி மூன்றாம் ஆண்டு தனது எழுபதுக்கும் கொஞ்சம் கூடுதலான வயதில் இப்னு மஸ்வூத் ﵁ அவர்கள் மதீனாவில்

51. புகாரி, எண்: 3762

இறப்பெய்தினார்கள். பகீஃஃ அடக்கஸ்த் தலத்தில் அவர்கள் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

## 3) அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ﵄

இவர் ரஸூலுல்லாஹ் ﷺ உடைய சிறிய தந்தை அப்பாஸ் அவர்களின் மகன் ஆவார். நபி ﷺ அவர்கள் ஹிஜ்ரா செல்வதற்கு மூன்று ஆண்டுகளுக்கு முன்பாக இவர் பிறந்தார். நபியின் நெருக்கமான உறவினராக இருந்த காரணத்தால் இவர் எப்போதும் நபியவர்களுடன் இருந்து வந்தார். இவரின் சிறிய அன்னை மைமூனா அவர்கள் நபியின் மனைவியாக இருந்தார்கள்.

இவரை தனது நெஞ்சுடன் அனைத்து அல்லாஹ்வே இவருக்கு ஞானத்தை கற்றுக்கொடு என்று நபி ﷺ அவர்கள் துஆ செய்தார்கள். மற்றொரு அறிவிப்பில் அல்லாஹ்வே! இவருக்கு வேதத்தைக் கற்றுக்கொடு என்று வந்துள்ளது.[52]

ஒரு முறை நபி ﷺ அவர்களுக்கு உளூ செய்வதற்கு தண்ணீர் கொண்டுவந்து வைத்தார்கள். அப்போது அல்லாஹ்வே இவருக்கு மார்க்கத்தில் விளக்கத்தை கொடு என்று துஆ செய்தார்கள்.[53]

இந்த அருள்மிக்க துஆவினால் இப்னு அப்பாஸ் ﵄ அவர்கள் இந்த உம்மத்தின் பெரும் கல்விமானாக மாறினார். குர்ஆன் உடைய விரிவுரைகளையும் மார்க்க சட்ட ஞானங்களையும் மக்களுக்கு போதித்த பெரும் கல்வி கடலாக விளங்கினார்கள்.

கல்வியை தேடிப் பெறுவது, கல்விக்காக பெரும் முயற்சி எடுப்பது, அதை அடையப் பெறுவதிலும் அதை போதிப்பதிலும் மன உறுதியுடன் சகிப்புடன் இருப்பது என பல நற்பேறுகளுக்கு அல்லாஹ் அவருக்கு அருள் புரிந்தான்.

இதன் மூலம் பெரும் கண்ணியத்தையும் மதிப்பையும் அவர்கள் அடையப் பெற்றார்கள்.

---

52. ஸஹீஹுல் புகாரி, எண்: 75. 3756.
53. ஸஹீஹுல் புகாரி, எண்: 143.

உமர் ﵁ அவர்கள் இப்னு அப்பாஸை தனது சபைக்கு அழைத்து தனக்கருகில் அமரவைப்பார்கள். அவர்களின் கூற்றை ஏற்றுக்கொள்வார்கள். அப்போது சில முஹாஜிர்கள், எங்களுக்கும் ஆண் பிள்ளைகள் இருக்கிறார்கள். இப்னு அப்பாஸை அழைத்து உட்கார வைப்பது போன்று அவர்களையும் அழைத்து உட்கார வைக்கலாமே என்று உமர் ﵁ அவர்களிடம் கூறினார்கள். அதற்கு உமர் ﵁ கூறினார்கள்: அவர் அறிவு முதிர்ச்சி பெற்றவர், கேள்வி கேட்கின்ற நாவும் சிந்தித்து புரிகின்ற உள்ளமும் அவரிடம் இருக்கின்றது.[54]

**عَنِ ابْنِ عَبَّاسٍ ﵁ قَالَ كَانَ عُمَرُ بْنُ الخَطَّابِ ﵁ يُدْنِي ابْنَ عَبَّاسٍ فَقَالَ لَهُ عَبْدُ الرَّحْمٰنِ بْنُ عَوْفٍ ﵁ إِنَّ لَنَا أَبْنَاءً مِثْلَهُ فَقَالَ إِنَّهُ مِنْ حَيْثُ تَعْلَمُ فَسَأَلَ عُمَرُ ابْنَ عَبَّاسٍ عَنْ هٰذِهِ الآيَةِ {إِذَا جَاءَ نَصْرُ اللّٰهِ وَالفَتْحُ} فَقَالَ «أَجَلُ رَسُولِ اللّٰهِ ﷺ أَعْلَمَهُ إِيَّاهُ قَالَ مَا أَعْلَمُ مِنْهَا إِلَّا مَا تَعْلَمُ رواه البخاري برقم ٣٦٢٧**

பிறகு, ஒரு நாள் தனது அனுபவத்தை தமது தோழர்களுக்கு காட்டுவதற்காக ஒரு முறை இப்னு அப்பாஸை தன்னுடன் சபைக்கு அழைத்து வந்தார்கள் உமர் ﵁ அவர்கள்.

சபையோரிடம்,

**إِذَا جَاءَ نَصْرُ اللّٰهِ وَالْفَتْحُ ○ وَرَأَيْتَ النَّاسَ يَدْخُلُونَ فِي دِينِ اللّٰهِ أَفْوَاجًا ○ فَسَبِّحْ بِحَمْدِ رَبِّكَ وَاسْتَغْفِرْهُ إِنَّهُ كَانَ تَوَّابًا ○**

54. முஸன்னஃப் அப்துர் ரஸ்ஸாக், முஸ்தத்ரகுல் ஹாகிம், முஃஜம் கபீர் - தபரானி

عَنِ الزُّهْرِيِّ ﵁ قَالَ قَالَ الْمُهَاجِرُونَ لِعُمَرَ بْنِ الْخَطَّابِ ﵁ ادْعُ أَبْنَاءَنَا كَمَا تَدْعُو ابْنَ عَبَّاسٍ ﵁ قَالَ ذَاكُمْ فَتَى الْكُهُولِ إِنَّ لَهُ لِسَانًا سَئُولًا وَقَلْبًا عَقُولًا رواه الحاكم في المستدرك

இந்த அத்தியாயத்தை ஓதிக் காண்பித்து இது பற்றி நீங்கள் என்ன கூறுகிறீர்கள் என்று சபையோரிடம் கேட்டார்கள். அவர்களில் சிலர், நமக்கு அல்லாஹ் வெற்றி கொடுக்கும்போது நாம் அல்லாஹ்வை துதிக்க வேண்டும், புகழ வேண்டும் என்று நமக்கு கட்டளை கொடுக்கப்பட்டுள்ளது என்று கூறினார்கள்.

சிலர் அமைதியாக இருந்தார்கள். அப்போது உமர் ﵁ அவர்கள் இப்னு அப்பாஸை ﵁ அவர்களை நோக்கி நீர் இப்படித்தான் கூறுகிறீரா? என்று கேட்க அவர் இல்லை என்றார். அப்படி என்றால் நீர் என்ன சொல்கிறீர் என்று உமர் ﵁ கேட்டார்கள். அதற்கு இப்னு அப்பாஸ் கூறினார்கள்: இந்த அத்தியாயம் ரஸூலுல்லாஹ் ﷺ உடைய அஜல் -ஆயுள் காலம் முடிவதைப் பற்றிய முன் அறிவிப்பாகும். இதன் மூலம் அல்லாஹ் நபியின் ஆயுள் காலம் முடிவதை அவர்களுக்கு அறிவித்தான். வெற்றி என்பது மக்காவின் வெற்றியாகும். அதுதான் உமது இறுதி தவணையாகும். ஆகவே, உமது இறைவனை புகழ்ந்து துதித்து, அவனிடம் பாவமன்னிப்பு கோரி வருவீராக! நிச்சயமாக அவன் பெரும் பிழைப் பொறுப்பாளன் ஆவான். இவ்வாறு இப்னு அப்பாஸ் கூறி முடித்தார்கள். அதற்கு உமர் ﵁ அவர்கள், நீர் அறிந்திருந்த இந்த கருத்தைத்தான் நானும் அறிந்திருக்கின்றேன் என்று கூறினார்கள்.[55]

قَالَ عَبْدُ اللهِ نِعْمَ تُرْجُمَانُ الْقُرْآنِ ابْنُ عَبَّاسٍ ﵄

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ﵁ அவர்கள் கூறினார்கள்: குர்ஆனுக்கு விளக்கம் கூறுவதில் இப்னு அப்பாஸ் ﵄ மிகவும் சிறந்தவர் ஆவார்.[56]

قَالَ عَبْدُ اللهِ لَوْ أَنَّ ابْنَ عَبَّاسٍ ﵄ أَدْرَكَ أَسْنَانَنَا مَا عَاشَرَهُ مِنَّا أَحَدٌ رواه الحاكم في المستدرك برقم ٦٢٨٩

55, புகாரி, எண்: 3627

56. முஸன்னஃப் இப்னு அபீ ஷைபா, எண்: 32884

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ﷺ அவர்கள் கூறினார்கள்: நிச்சயமாக இப்னு அப்பாஸ் ﷺ எங்கள் வயதை பெற்றிருந்தால் எங்களில் யாரும் அவருக்கு சமமாக வாழ்ந்திருக்க முடியாது.[57]

இப்னு மஸ்வூத் ﷺ அவர்களுக்கு பின்னர் இப்னு அப்பாஸ் ﷺ அவர்கள் முப்பத்தி ஆறு ஆண்டுகள் வாழ்ந்திருக்கின்றார்கள் என்றால் எவ்வளவு இல்மை இன்னும் அவர்கள் தேடிப் பெற்றிருப்பார்கள்.

ஒருவர் தன்னிடம் குர்ஆன் வசனம் ஒன்றை குறித்து விளக்கம் கேட்டபோது இப்னு அப்பாஸ் ﷺ இடம் சென்று கேளுங்கள், அவர்தான் இப்போது இருப்பவர்களில் நபி முஹம்மது ﷺ அவர்கள் மீது இறக்கப்பட்ட வேதத்தை மிகவும் அறிந்தவர் என்று இப்னு உமர் ﷺ கூறினார்கள்.

தாபியி அதா[58] ﷺ கூறுகிறார்கள்: இப்னு அப்பாஸ் ﷺ உடைய சபையைவிட ஒரு கண்ணியமான கல்வி சபையை நான் பார்த்ததில்லை. அது மிகுந்த இறையச்சம் உடையதாக இருந்தது. மார்க்க சட்ட வல்லுனர்களும் அவரிடம் இருந்தார்கள். குர்ஆன் அறிஞர்களும் அவரிடம் இருந்தார்கள். அரபு கவிதைகள் அறிந்த அறிஞர்களும் அவரிடம் இருந்தார்கள். இப்னு அப்பாஸ் அவர்கள் ஒரு மிக விசாலமான ஓடை ஆவார்கள். அனைவருக்கும் அவர்கள் தேவையானதை கற்றுக்கொடுத்து அனுப்புவார்கள்.

அபூ வாயில் கூறுகிறார்: உஸ்மான் ﷺ அவர்களின் ஆட்சி காலத்தில் ஹஜ்ஜுக்கு அமீராக இப்னு அப்பாஸ் ﷺ அனுப்பிவைக்கப்பட்டார்கள். அது சமயம் அரஃபா மைதானத்தில் ஸூரா அன்நூரை ஒரு ஒரு வசனமாக ஓதி விளக்கம் கொடுத்தார்கள். இவரைப் போன்று வேறு யாரின் பேச்சையும் நான் செவியுற்றதில்லை. (கல்வியில்) இவரைப் போன்று வேறு யாரையும் நான் பார்த்ததில்லை. பாரசீகர்களும்

57, முஸ்தத்ரகுல் ஹாகிம், எண்: 6289.

58. அதா இப்னு அபீ ரபாஃ -இவரைப் பற்றிய குறிப்பு அடுத்த பாடத்தில் வருகிறது.

ரோமர்களும் துருக்கியர்களும் இவரின் பேச்சை செவியுற்றால் கண்டிப்பாக இஸ்லாமை தழுவி விடுவார்கள்.[59]

ஹிஜ்ரி முப்பத்தி ஐந்தாம் ஆண்டு ஹஜ்ஜுக்கு அமீராக இவரை உஸ்மான் ﵁ அவர்கள் நியமித்தார்கள்.

இவரை பஸராவின் கவர்னராக அலி ﵁ அவர்கள் நியமித்து இருந்தார்கள். அலீ அவர்கள் கொல்லப்பட்ட பிறகு, அங்கிருந்து ஹிஜாஸ் வந்து சில காலம் மக்காவில் தங்கி இருந்துவிட்டு பிறகு, தாயிஃப் சென்று அங்கு தங்கிவிட்டார்கள். அங்குதான் அவர்கள் தனது எழுபத்தி ஒன்றாவது வயதில் இறப்பெய்தினார்கள்.

---------------------

59. முஸ்தத்ரகுல் ஹாகிம் 6353



பாடம் 6

## اَلْـمُشْتَهِرُونَ بِالتَّفْسِيْرِ مِنَ التَّابِعِينَ

## தஃப்ஸீரில் பிரபலமான தாபியீன்

நபித்தோழர்களின் மாணவர்களை தாபியீன் என்று அழைக்கப்படுகின்றது. தாபியி என்பதன் பன்மை தாபீயீன் ஆகும்.

பல தாபியிகள் குர்ஆனுக்கு விரிவுரை கூறுவதில் பிரபலமாக விளங்கினார்கள்.

அ). மக்கவில் வாழ்ந்த தாபியிகள். இவர்கள் இப்னு அப்பாஸ் ﵁ அவர்களிடம் கல்வி கற்றவர்கள். அவர்களில் குறிப்பாக, முஜாஹித், இக்ரிமா, அதா இப்னு அபீ ரபாஹ்[60] ﵏ ஆகியோர் பிரபலமாக இருந்தார்கள்.

ஆ). மதீனாவில் வாழ்ந்த தாபியிகள். இவர்கள் உபை இப்னு கஅப் ﵁ உடைய மாணவர்கள் ஆவார்கள். அவர்களில் குறிப்பாக, சைது இப்னு அஸ்லம்,[61] அபுல் ஆலியா,[62] முஹம்மது இப்னு கஅப் குரளி[63] ﵏ ஆகியோர் பிரபலமாக இருந்தார்கள்.

---

60. முழுப் பெயர் அபூ முஹம்மத் அதா இப்னு அபீ ரபாஹ் அஸ்லம் இப்னு ஸஃப்வான். பிறப்பு ஹிஜ்ரி 27, இறப்பு ஹிஜ்ரி 114. மூத்த தாபியீன்களில் ஒருவர். குர்ஆன், ஹதீஸ் மற்றும் ஃபிக்ஹு கலைகளின் பிரசித்தி பெற்ற அறிஞராவார். யமன் நாட்டில் பிறந்த இவர் மக்காவில் வளர்ந்து, மக்கா மற்றும் மதீனாவில் இருந்த நபித்தோழர்களிடம் கல்வி பயின்றார். இவரின் தந்தை அடிமையாக இருந்து உரிமையிடப்பட்டவர்.

61. இவர் கலீஃபா உமர் அவர்களின் உரிமையிடப்பட்ட அடிமையாக இருந்த அஸ்லம் அவர்களின் மகனாவார். பல நபித்தோழர்களிடமும் மூத்த தாபியீன்களிடமும் கல்வி பயின்றார். இவரின் இறப்பு ஹிஜ்ரி 136 அல்லது 146 என்று சொல்லப்படுகிறது.

62. இவரின் பெயர் ரஃபீஃ இப்னு மிஹ்ரான் அர்ரியாஹி அல்பசரி. அய்யாமுல் ஜாஹிலிய்யாவையும் பெற்ற இவர் ஹிஜ்ரி 12ல் இஸ்லாமை ஏற்று நபித்தோழர்களிடம் கல்வி கற்றார். மூத்த தாபியியாக விளங்கிய இவர் குர்ஆன், ஹதீஸ் மற்றும் ஃபிக்ஹு கலைகளில் அறிஞராகத் திகழ்ந்தார்.

63. இவரின் பிறப்பு ஹிஜ்ரி 40, மதினா. இறப்பு ஹிஜ்ரி 108. இவருடைய தந்தை பனூ

இ) கூஃபாவில் வாழ்ந்த தாபியிகள். இவர்கள் இப்னு மஸ்வூத் ؓ உடைய மாணவர்கள் ஆவார்கள். அவர்களில் கதாதா, அல்கமா,[64] ஷஅபி[65] ؒ பிரபலமாக இருந்தார்கள்.

மேற்கூறப்பட்ட தாபியிகளில் இருவரின் சுருக்கமான அறிமுகத்தை நாம் இங்கு பதிவு செய்கிறோம்.

## 1). முஜாஹித் ؒ

இவரின் பெயர் முஜாஹித் இப்னு ஜப்ர் அல்மக்கி இவர் அஸ்ஸாயிப் இப்னு அபிஸ் ஸாயிப் உடைய மவ்லா -உரிமையிடப்பட்ட அடிமையாக இருந்தார். இவர் ஹிஜ்ரி இருபத்தி ஒன்றில் பிறந்தார். இப்னு அப்பாஸ் ؓ அவர்களிடம் தஃப்ஸீர் கல்வியை கற்றார். இவர் கூறியதாக இப்னு இஸ்ஹாக் ؒ அறிவிக்கின்றார்: நான் குர்ஆன் முழுவதையும் இப்னு அப்பாஸ் ؓ அவர்களிடம் மூன்று முறை ஓதிக் காண்பித்தேன். ஒவ்வொரு வசனத்திலும் நிறுத்தி நிறுத்தி நான் அவர்களிடம் அந்த வசனம் பற்றி கேட்பேன்.

அறிஞர் ஸுஃப்யான் சவ்ரி[66] ؒ கூறுகிறார்கள்: முஜாஹித் ؒ கூறிய தஃப்ஸீர் உமக்கு கிடைத்தால் அதுவே உமக்கு போதுமாகும்.

முஜாஹித் ؒ கூறுகின்ற விளக்கத்தை இமாம் ஷாஃபியி, புகாரி ؒ போன்றோர் நம்பி, ஆதாரமாக எடுத்து இருக்கின்றார்கள்.

குறைளா உடன் நடந்த போரில் கைது செய்யப்பட்ட வாலிபராக இருந்தார். பிறகு, இஸ்லாமை ஏற்று, மதீனாவிலேயே வாழ்ந்தார். அவரின் மகனாகிய முஹம்மத் குர்ஆன் மற்றும் ஹதீஸ் கலையின் அறிஞராகத் திகழ்ந்தார்.

64. இவர் பல மூத்த நபித்தோழர்களிடம் கல்வி பெற்ற அறிஞராவார். மன்னர் அப்துல் மலிக் இப்னு மர்வான் அவர்களுடைய காலத்தில் இவர் இறப்பெய்தினார்.

65. இவரின் பெயர் ஆமிர் இப்னு ஷராஹீல் இப்னு அப்த் அல்ஹம்தானி அஷ்ஷஅபி ஆவார். இவரை சுருக்கமாக இமாம் ஷஅபி என்று அழைக்கப்படும். இவர் கலீஃபா உமர் அவர்களின் காலத்தில் கூபா நகரத்தில் ஹிஜ்ரி 21ல் பிறந்து ஹிஜ்ரி 103ல் இறந்தார். இவர் குர்ஆன், ஹதீஸ், ஃபிக்ஹ், வரலாறு மற்றும் நீதித்துறை அறிஞராக விளங்கினார்.

66. இவரது பெயர் அபூ அப்தில்லாஹ் ஸுப்யான் இப்னு ஸயீது இப்னு மஸ்ரூக். இவர் கூஃபா நகரத்தைச் சார்ந்தவர். பிறப்பு: ஹிஜ்ரி 97, இறப்பு ஹிஜ்ரி 161. தபுவுத் தாபியின்களில் ஹதீஸ் மற்றும் ஃபிக்ஹு கலையின் மாபெரும் அறிஞர்களில் ஒருவராகத் திகழ்ந்தார்.

இமாம் புகாரி ﵀ அவர்கள் தங்கள் நூல் ஸஹீஹுல் புகாரியில் குர்ஆனுக்கு விளக்கம் கூறும்போது முஜாஹித் ﵀ அவர்களின் கருத்தை பதிவு செய்வார்கள்.

இமாம் தஹபி ﵀ அவர்கள் முஜாஹித் ﵀ அவர்களைப் பற்றி எழுதும்போது இறுதியில் இவ்வாறு கூறுகிறார்கள்: முஜாஹித் ﵀ அவர்கள் தஃப்ஸீர் கல்வியின் இமாம், முன்னோடி என்பதையும் அவர்களின் விளக்கம் ஆதாரமாக எடுப்பதற்கு தகுந்தது என்பதையும் உம்மத் அனைவரும் ஒருமனதோடு ஏற்று இருக்கின்றார்கள்.[67]

முஜாஹித் ﵀ அவர்கள் ஸுஜூத் செய்த நிலையில் மக்காவில் ஹிஜ்ரி நூற்றி நான்கில் தனது என்பத்தி மூன்றாவது வயதில் இறப்பெய்தினார்கள்.

## 2). கதாதா ﵀

இவர் பெயர் கதாதா இப்னு தஆமா அஸ்ஸதூஸி அல்பஸரி. இவர் பிறக்கும்போதே கண் பார்வை அற்றவராக பிறந்தார். ஹிஜ்ரி அறுபத்தி ஒன்றில் பிறந்தார். கல்வியை தேடி கற்பதில் பெரிது சிரமமும் முயற்சியும் மேற்கொண்டார். அல்லாஹ் அவருக்கு மிக அபாரமான நினைவாற்றலை வழங்கி இருந்தான். நான் எந்த அறிஞரிடமும் இன்னொரு முறை கூறுங்கள் என்று சொன்னதில்லை, என் இரு காதுகளும் எதை செவியுற்றாலும் அதை என் உள்ளம் மனனம் செய்துகொள்ளும் என்று தன்னைப் பற்றி கதாதா ﵀ கூறுகின்றார்கள்.

இமாம் அஹ்மது ﵀ அவர்கள் கதாதாவைப் பற்றி மிக விரிவாக சிலாகித்து கூறி இருக்கின்றார்கள். கதாதா ﵀ அவர்களின் கல்வி ஞானம், மார்க்க சட்ட விளக்கம், கருத்து வேற்றுமை பற்றிய விளக்கம், குர்ஆன் தஃப்ஸீர் என அனைத்தையும் இமாம் அஹ்மது குறிப்பிடுகின்றார்கள். மேலும், கதாதா அவர்கள் மிக உறுதிமிக்க

67. மீஸானுல் இஃதிதால்

நினைவாற்றல் உள்ளவர், மார்க்க சட்ட நுணுக்கங்களை அறிந்தவர் என்று அவர்களைப் பற்றி இமாம் அஹ்மது ﵀ வர்ணிக்கின்றார்கள். மேலும், இவரை முந்துபவர்கள் மிகக் குறைவுதான். இவரைப் போன்றவர் வேண்டுமானால் இருக்கலாம். என்று அஹ்மது ﵀ கூறுகிறார்கள். மேலும், பஸ்ரா நகரத்து கல்வியாளர்களில் இவர்தான் மிக மிக நினைவாற்றல் மிக்கவர். இவர் எதை செவியுற்றாலும் அதை நினைவில் வைத்துக் கொள்வார் என்று இவரைப் பற்றி அஹ்மது ﵀ கூறுகிறார்கள்.

இவர் வாசித் நகரத்தில் ஹிஜ்ரி 117ம் ஆண்டு ஐம்பத்தி ஆறாவது வயதில் இறப்பெய்தினார்கள்.

-----------------------




# اَلْقُرْآنُ مُحْكَمٌ وَمُتَشَابِهٌ

# குர்ஆன் முஹ்கம் இன்னும் முதஷாபிஹ்

**مُحْكَمْ** முஹ்கம் என்பது **أَحْكَمَ** அஹ்கம என்ற வினைச்சொல்லில் இருந்து எடுக்கப்பட்ட **اِسْمُ الْمَفْعُول** இஸ்ம் மஃஃப்வூல் ஆகும். **أَحْكَمَ** அஹ்கம என்பதற்கு உறுதி செய்தான், தெளிவுப்படுத்தினான், குழப்பமின்றி தீர்ப்பளித்தான் ஆகிய பொருள்கள் உள்ளன. ஆகவே, முஹ்கம் என்றால் பொருள் தெளிவாக இருப்பது, கருத்து உறுதி செய்யப்பட்டது, பொருளில் குழப்பமற்றது என்று பொருள்படும்.

**مُتَشَابِه** முதஷாபிஹ் என்பது **تَشَابَه** தஷாபஹ என்ற வினை சொல்லின் **اسم الفاعل** இஸ்ம் ஃபாயில் ஆகும். அதன் பொருள், ஒன்றுக்கொன்று ஒப்பாகி இருப்பது, குழப்பமாக இருப்பது, தெளிவில்லாமல் இருப்பது, பொருள் தெரியாதவை ஆகும்.

குர்ஆனுடைய வசனங்கள் **مُحْكَمْ** முஹ்கம் என்ற வகையை சேர்ந்தவையா அல்லது **مُتَشَابِه** முதஷாபிஹ் என்ற வகையை சேர்ந்தவையா என்று பார்க்கும்போது அறிஞர்கள் அவற்றை மூன்று வகைகளாக வகைப்படுத்துகிறார்கள்.

**முதலாவது: الإحكام العام** அல்இஹ்காமுல் ஆம் - பொதுவாக உறுதி செய்யப்பட்டு இருத்தல். இந்த வகையில் குர்ஆன் அனைத்தும் **مُحْكَمْ** முஹ்கம் ஆகும். அதாவது, குர்ஆனில் உள்ள வசனங்கள் அனைத்தும் **مُحْكَمْ** முஹ்கம் என்ற வகையை சேர்ந்தவைதான்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

الر كِتَابٌ أُحْكِمَتْ آيَاتُهُ ثُمَّ فُصِّلَتْ مِنْ لَدُنْ حَكِيمٍ خَبِيرٍ

அலிஃப் லாம் றா. (இது) வேத நூல். அனைத்தையும் நன்கறிந்த ஞானவானால் இதன் வசனங்கள் (பல அத்தாட்சிகளைக் கொண்டு) உறுதி செய்யப்பட்டு, பின்னர் (தெளிவாக) விவரிக்கப்பட்டுள்ளன.

(அல்குர்ஆன் 11 : 1)

இங்கு அல்குர்ஆனுடைய வசனங்கள் அனைத்தும் முஹ்கம் என்று கூறப்பட்டுள்ளது எதை குறிக்கிறது என்றால், குர்ஆனில் பதங்கள், பொருள்கள், கருத்துகள், நடைகள் என அனைத்தும் உயர்ந்த தரத்திலும், மிக நேர்த்தியான விதத்திலும் அமைந்திருப்பதை குறிக்கின்றது.

மேலும், குர்ஆன் மிக சிறப்பான இலக்கிய நயமுடையது, மிக உயர்ந்த இலக்கண நடையிலும் அமையப்பெற்றது என்பதை குறிக்கின்றது.

மேலும், இதன் செய்திகள் உண்மையானவை, பலனுள்ளவை, அவற்றில் பொய் இருக்காது, முரண்பாடுகள் இருக்காது, தேவையற்ற வீணான விஷயங்கள் இருக்காது என்பதை குறிக்கின்றது.

மேலும், இதன் சட்டங்கள் நீதமானவை, ஞானமிக்கவை, அவற்றில் அநீதி, மடமை, முரண்பாடுகள். முட்டாள்தனமான தீர்ப்புகள் இல்லை என்பதை குறிக்கிறது.

**இரண்டாவது வகை:** பொதுவான **تَشَابُه** தஷாபுஹ். அதாவது குர்ஆன் முழுவதும் முதஷாபிஹ் ஆக இருப்பது. அதாவது, குர்ஆன் வசனங்கள் ஒன்று மற்றொன்றுக்கு அழகிலும், சிறப்பான நோக்கத்திலும் பரிபூரணத்துவத்திலும் ஒத்து இருக்கின்றது என்பதை இது குறிக்கின்றது.

இந்த கருத்தில்தான் பின்வருகின்ற குர்ஆன் வசனம் அமைந்துள்ளது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

اللَّهُ نَزَّلَ أَحْسَنَ الْحَدِيثِ كِتَابًا مُتَشَابِهًا مَثَانِيَ تَقْشَعِرُّ مِنْهُ جُلُودُ الَّذِينَ يَخْشَوْنَ رَبَّهُمْ ثُمَّ تَلِينُ جُلُودُهُمْ وَقُلُوبُهُمْ إِلَى ذِكْرِ اللَّهِ

அல்லாஹ் மிக அழகான விஷயங்களையே (இந்த வேதத்தில்) இறக்கி இருக்கிறான். (இதிலுள்ள வசனங்களுக்கிடையில் முரண்பாடில்லாமல்) ஒன்றை மற்றொன்று ஒத்ததாகவும் (மனதில் பதிவதற்காக ஒரே விஷயத்தை) திரும்பத் திரும்பவும் கூறப்பட்டுள்ளது. எவர்கள் தங்கள் இறைவனுக்குப் பயப்படுகிறார்களோ, (அவர்கள் அதைக் கேட்ட உடன்) அவர்களுடைய தோல்கள் சிலிர்த்து விடுகின்றன. பின்னர், அவர்களுடைய தோல்களும் உள்ளங்களும் அல்லாஹ்வுடைய வேதத்தின் பக்கம் இளகி அதன்படி செயல்படுகின்றன. (அல்குர்ஆன் 39 : 23)

குர்ஆன் வசனங்கள் எல்லாம் முதஷாபிஹ் ஆக இருப்பதால்தான் வசனங்கள் அனைத்தும் தங்களுக்குள் முரண்பாடுகள் நீங்கி இருக்கின்றன. ஒரு வசனம் மற்றொரு வசனத்தை விவரிக்கக் கூடியதாகவும் உண்மைப்படுத்தக் கூடியதாகவும் இருக்கின்றன. அப்படி இல்லையென்றால் அவற்றில் குழப்பமும் முரண்பாடுகளும் அநேகம் இடம் பெற்றிருக்கும்.

**மூன்றாவது வகை:** சில வசனங்கள் مُحْكَمْ முஹ்கமாகவும், சில வசனங்கள் مُتَشَابِه முதஷாபிஹ் ஆகவும் இருக்கும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

هُوَ الَّذِي أَنْزَلَ عَلَيْكَ الْكِتَابَ مِنْهُ آيَاتٌ مُحْكَمَاتٌ هُنَّ أُمُّ الْكِتَابِ وَأُخَرُ مُتَشَابِهَاتٌ فَأَمَّا الَّذِينَ فِي قُلُوبِهِمْ زَيْغٌ فَيَتَّبِعُونَ مَا تَشَابَهَ مِنْهُ ابْتِغَاءَ الْفِتْنَةِ وَابْتِغَاءَ تَأْوِيلِهِ وَمَا يَعْلَمُ تَأْوِيلَهُ إِلَّا اللَّهُ وَالرَّاسِخُونَ

فِي الْعِلْمِ يَقُولُونَ آمَنَّا بِهِ كُلٌّ مِنْ عِنْدِ رَبِّنَا وَمَا يَذَّكَّرُ إِلَّا أُولُو الْأَلْبَابِ

(நபியே!) அவனே இவ்வேதத்தையும் உங்கள்மீது இறக்கி வைத்தான். இதில் முற்றிலும் தெளிவான பொருள் கொண்ட வசனங்களும் இருக்கின்றன. இவைதான் இவ்வேதத்தின் அடிப்படையாகும். மேலும், (உங்களுக்கு) முழுமையான பொருள் தெரிய முடியாத வசனங்களும் இருக்கின்றன. எவர்களுடைய உள்ளங்களில் மாறுபாடு இருக்கிறதோ அவர்கள் தெளிவற்ற பொருள்களுடைய வசனங்களையே தேடிப் பின்பற்றுவார்கள். குழப்பத்தை உண்டு பண்ணக் கருதியும் அதை (தங்களின் தவறான நோக்கத்திற்கேற்ப) மாற்றுவதற்காகவும் இவ்வாறு செய்கின்றனர். ஆயினும், இதன் உண்மைக் கருத்தை அல்லாஹ்வையன்றி ஒருவரும் அறிய மாட்டார்கள். உறுதிமிக்க கல்விமான்களோ (அதன் கருத்து தங்களுக்கு முழுமையாக விளங்காவிட்டாலும்) இதனையும் நாங்கள் நம்பிக்கை கொண்டோம். (இவ்விருவகை வசனங்கள்) அனைத்தும் எங்கள் இறைவனிடமிருந்து வந்தவைதான் என்று கூறுவார்கள். அறிவுடையவர்களையன்றி மற்ற எவரும் (இவைகளைக் கொண்டு) நல்லுபதேசம் அடைய மாட்டார்கள். (அல்குர்ஆன் 3 : 7)

மேற்கண்ட வசனத்தில் சில வசனங்கள் முஹ்கமாக இருக்கின்றன என்பதன் பொருள் வசனத்தின் கருத்து தெளிவாகவும், வெளிப்படையாகவும் எவ்விதமான மூடல் மறைவு இல்லாமலும் இருப்பதாகும்.

குர்ஆனில் உள்ள பெரும்பாலான வசனங்கள் இந்த வகையை சேர்ந்தவைதான்.

மேலும், சில வசனங்கள் முதஷாபிஹ் ஆக இருக்கின்றன என்பதன் பொருள் வசனத்தின் கருத்து மறைவாகவும் வெளிப்படையில் பார்க்கும்போது சந்தேகமாகவும் இருப்பதாகும். அதாவது

அந்த வசனத்தின் வெளிப்படையான பொருளைக் கொண்டு அல்லாஹ்விற்கு அல்லது குர்ஆனுக்கு அல்லது தூதருக்கு தகுதி இல்லாத விஷயத்தை ஒருவர் மனதில் நினைத்துவிடும்படி இருக்கும். ஆனால், கல்வியில் உறுதியுள்ளவர்கள் அப்படி புரியமாட்டார்கள். அந்த வசனங்களை எப்படி புரிய வேண்டுமோ அந்த விதத்தில் அவர்கள் புரிவார்கள்.

இந்த இரண்டு வகைகளுக்கும் உதாரணங்கள் பின்வருமாறு:

**முஹ்கம் உடைய உதாரணங்கள்:**

يَا أَيُّهَا النَّاسُ إِنَّا خَلَقْنَاكُمْ مِنْ ذَكَرٍ وَأُنْثَى وَجَعَلْنَاكُمْ شُعُوبًا وَقَبَائِلَ لِتَعَارَفُوا إِنَّ أَكْرَمَكُمْ عِنْدَ اللَّهِ أَتْقَاكُمْ إِنَّ اللَّهَ عَلِيمٌ خَبِيرٌ

மனிதர்களே! உங்கள் அனைவரையும் நிச்சயமாக நாம் ஒரேஓர் ஆண், ஒரேஓர் பெண்ணிலிருந்துதான் படைத்தோம். பின்னர், ஒருவர் மற்றவரை அறிந்துகொள்ளும் பொருட்டு, உங்களைக் கிளைகளாகவும் கோத்திரங்களாகவும் ஆக்கினோம். (ஆதலால், உங்களில் ஒருவர் மற்றவரைவிட மேலானவர் என்று பெருமை பேசாதீர்கள்.) எனினும், உங்களில் எவர் இறையச்சம் உடையவராக இருக்கிறாரோ, அவர்தான் அல்லாஹ்விடத்தில் நிச்சயமாக மிக கண்ணியமானவர். நிச்சயமாக அல்லாஹ் (அனைத்தையும்) நன்கறிந்தவன், நன்கு தெரிந்தவன் ஆவான்.(அல்குர்ஆன் 49 : 13)

يَا أَيُّهَا النَّاسُ اعْبُدُوا رَبَّكُمُ الَّذِي خَلَقَكُمْ وَالَّذِينَ مِنْ قَبْلِكُمْ لَعَلَّكُمْ تَتَّقُونَ ○ الَّذِي جَعَلَ لَكُمُ الْأَرْضَ فِرَاشًا وَالسَّمَاءَ بِنَاءً وَأَنْزَلَ مِنَ السَّمَاءِ مَاءً فَأَخْرَجَ بِهِ مِنَ الثَّمَرَاتِ رِزْقًا لَكُمْ فَلَا تَجْعَلُوا لِلَّهِ أَنْدَادًا وَأَنْتُمْ تَعْلَمُونَ ○

மனிதர்களே! உங்களையும் உங்களுக்கு முன்னிருந்தவர்களையும்

படைத்த உங்கள் இறைவனையே வணங்குங்கள். (அதனால்) நீங்கள் இறை அச்சமுடையவர்களாக ஆகலாம். அவனே பூமியை நீங்கள் வசிக்கும் இடமாகவும், வானத்தை ஒரு முகடாகவும் அமைத்து, மேகத்திலிருந்து மழையைப் பொழிவித்து, அதைக் கொண்டு (நீங்கள்) புசிக்கக்கூடிய கனிவர்க்கங்களையும் உங்களுக்கு வெளியாக்குகிறான். ஆகவே, (இவற்றையெல்லாம்) நீங்கள் தெளிவாக அறிந்துகொண்டே அல்லாஹ்வுக்கு இணைகளை ஆக்காதீர்கள். அல்குர்ஆன் 2 : 21, 22

وَأَحَلَّ اللّٰهُ الْبَيْعَ وَحَرَّمَ الرِّبَا

அல்லாஹ் வணிகத்தை ஆகுமாக்கி வைத்து வட்டியை தடுத்து விட்டான். அல்குர்ஆன் 2 : 275

إِنَّمَا حَرَّمَ عَلَيْكُمُ الْمَيْتَةَ وَالدَّمَ وَلَحْمَ الْخِنْزِيرِ وَمَا أُهِلَّ بِهِ لِغَيْرِ اللّٰهِ
فَمَنِ اضْطُرَّ غَيْرَ بَاغٍ وَلَا عَادٍ فَلَا إِثْمَ عَلَيْهِ إِنَّ اللّٰهَ غَفُورٌ رَحِيمٌ

(நம்பிக்கையாளர்களே!) தாமாக செத்தது, இரத்தம், பன்றியின் மாமிசம், அல்லாஹ் அல்லாத (வேறு) பெயர் கூறப்பட்டவை ஆகியவற்றைத்தான் அல்லாஹ் உங்களுக்குத் தடை செய்துள்ளான். ஆதலால், எவரேனும் வரம்பு மீறாமலும், பாவம் செய்யும் நோக்கமில்லாமலும் இருந்து (இவற்றைப் புசிக்க) நிர்ப்பந்திக்கப்பட்டு விட்டால் (அது) அவர் மீது குற்றமாகாது. நிச்சயமாக அல்லாஹ் மிகவும் மன்னிப்பவன், மிக்க கருணையுடையவன்.

அல்குர்ஆன் 2 : 173

இதுபோன்று முஹ்கமான வசனங்கள்தான் அல்குர்ஆனில் அதிகம் இருக்கின்றன.

**முதஷாபிஹ் உடைய உதாரணங்கள்**

அல்லாஹ் உடன் சம்பந்தப்பட்ட விஷயத்தில் சந்தேகிப்பவருக்கு

சந்தேகம் வருவதற்கு வாய்ப்பு இருப்பதைப் போன்று தோன்றும் சில வசனங்கள்:

بَلْ يَدَاهُ مَبْسُوطَتَانِ

மாறாக, அல்லாஹ்வுடைய இரு கைகளோ (எப்பொழுதும்) விரிந்தே இருக்கின்றன. அல்குர்ஆன் 5 : 64

இந்த வசனத்தில் மனிதர்களின் கரங்களுக்கு ஒப்பான இரு கரங்கள் அல்லாஹ்விற்கு இருக்கின்றனவோ என்று யாரும் சந்தேகப்படலாம்.

குர்ஆனில் முரண்பாடு இருப்பதை போன்றும் ஒரு வசனம் மற்றொரு வசனத்தை பொய்ப்பிப்பது போன்றும் சிலருக்கு தோன்றக்கூடிய சில வசனங்கள்:

مَا أَصَابَكَ مِنْ حَسَنَةٍ فَمِنَ اللّٰهِ وَمَا أَصَابَكَ مِنْ سَيِّئَةٍ فَمِنْ نَفْسِكَ

மேலும், (இவ்வாறு கூறுகின்றவனை நோக்கி) "உனக்கு ஒரு நன்மை ஏற்பட்டால் அது அல்லாஹ்வினால் ஏற்பட்டது" என்றும் "உனக்கு ஒரு தீங்கேற்பட்டால் அது (நீ இழைத்த குற்றத்தின் காரணமாக) உன்னால்தான் வந்தது" (என்று கூறுவீராக.) அல்குர்ஆன் 4 : 79

இந்த அத்தியாயத்தின் இதற்கு முந்திய வசனத்தில் அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَإِنْ تُصِبْهُمْ حَسَنَةٌ يَقُولُوا هَذِهِ مِنْ عِنْدِ اللّٰهِ وَإِنْ تُصِبْهُمْ سَيِّئَةٌ يَقُولُوا هَذِهِ مِنْ عِنْدِكَ قُلْ كُلٌّ مِنْ عِنْدِ اللّٰهِ فَمَالِ هَؤُلَاءِ الْقَوْمِ لَا يَكَادُونَ يَفْقَهُونَ حَدِيثًا

(நபியே! உமது கட்டளைப்படி போருக்குச் சென்ற) அவர்களை ஒரு நன்மை அடையும் பட்சத்தில் "இது அல்லாஹ்விடமிருந்து (எங்களுக்குக்) கிடைத்தது" எனக் கூறுகின்றனர். அவர்களுக்கு ஒரு

தீங்கு ஏற்பட்டு விட்டாலோ “(நபியே!) இது உம்மால்தான் (எங்களுக்கு ஏற்பட்டது)” எனக் கூறுகின்றனர். (ஆகவே,) நீர் கூறுவீராக: (நானாக என் இஷ்டப்படி உங்களுக்குக் கட்டளையிடவில்லை. அல்லாஹ் அறிவித்தபடியே நான் உங்களுக்கு கட்டளையிட்டேன். ஆகவே,) அனைத்தும் அல்லாஹ்விடமிருந்தே கிடைக்கின்றன. இவர்களுக்கு என்ன நேர்ந்துவிட்டது? எவ்விஷயத்தையுமே இவர்கள் அறிந்து கொள்வதில்லையே! அல்குர்ஆன் 4 : 78

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களின் விஷயத்தில் சிலருக்கு சந்தேகம் தோன்றும்படி உள்ள வசனத்திற்கு உதாரணம்

فَإِنْ كُنْتَ فِي شَكٍّ مِمَّا أَنْزَلْنَا إِلَيْكَ فَاسْأَلِ الَّذِينَ يَقْرَءُونَ الْكِتَابَ مِنْ قَبْلِكَ لَقَدْ جَاءَكَ الْحَقُّ مِنْ رَبِّكَ فَلَا تَكُونَنَّ مِنَ الْمُمْتَرِينَ

(நபியே!) நாம் உமக்கு இறக்கியிருக்கும் இதில் (சிறிதும் சந்தேகம் கொள்ளாதீர்.) நீர் சந்தேகித்தால் உமக்கு முன்னர் அருளப்பட்ட வேதங்களை ஓதுபவர்களிடம் நீர் கேட்டுப் பார்ப்பீராக. நிச்சயமாக உமது இறைவனிடமிருந்தே உண்மை(யான இவ்வேதம்) உம்மிடம் வந்தது. ஆதலால், சந்தேகப்படுபவர்களில் நீரும் (ஒருவராக) ஆகிவிட வேண்டாம். அல்குர்ஆன் 10 : 94

இந்த வசனத்தை ஓதுபவர்களில் சிலர், அதன் வெளிப்படையான பொருளை வைத்து நபி ﷺ அவர்களுக்கு குர்ஆனில் சந்தேகம் இருந்ததோ, அதனால்தான் அல்லாஹ் இப்படி கூறுகின்றானோ என்று சந்தேகிக்கலாம்.

---

பாடம் 8 

## مَوْقِفُ الرَّاسِخِيْنَ فِي الْعِلْمِ وَالزَّائِغِيْنَ مِنَ الْـمُتَشَابِهِ

## முதஷாபிஹ் விஷயத்தில் கல்வியில் தேர்ச்சி பெற்றவர்கள் மற்றும் வழிபிசகியவர்கள் உடைய நிலைப்பாடு

கல்வியில் தேர்ச்சி பெற்றவர்கள் முதஷாபிஹ விஷயத்தில் எப்படி நடந்து கொள்வார்கள், வழிபிசகியவர்கள் எப்படி நடந்து கொள்வார்கள் என்பதை அல்லாஹ் பின்வருகின்ற வசனத்தில் குறிப்பிடுகின்றான்:

فَأَمَّا الَّذِينَ فِي قُلُوبِهِمْ زَيْغٌ فَيَتَّبِعُونَ مَا تَشَابَهَ مِنْهُ ابْتِغَاءَ الْفِتْنَةِ وَابْتِغَاءَ تَأْوِيلِهِ

எவர்களுடைய உள்ளங்களில் மாறுபாடு இருக்கிறதோ அவர்கள் தெளிவற்ற பொருள்களுடைய வசனங்களையே தேடிப் பின்பற்றுவார்கள். குழப்பத்தை உண்டுபண்ணக் கருதியும் அதை (தங்களின் தவறான நோக்கத்திற்கேற்ப) மாற்றுவதற்காகவும் இவ்வாறு செய்கின்றனர். அல்குர்ஆன் 3 : 7

கல்வியில் தேர்ச்சி பெற்றவர்களின் விஷயத்தில் அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான்:

وَالرَّاسِخُونَ فِي الْعِلْمِ يَقُولُونَ آمَنَّا بِهِ كُلٌّ مِنْ عِنْدِ رَبِّنَا

உறுதிமிக்க கல்விமான்களோ (அதன் கருத்து தங்களுக்கு முழுமையாக விளங்காவிட்டாலும்) இதையும் நாங்கள் நம்பிக்கை

கொண்டோம். (இவ்விருவகை வசனங்கள்) அனைத்தும் எங்கள் இறைவனிடமிருந்து வந்தவைதான் என்று கூறுவார்கள்.

(அல்குர்ஆன் 3 : 7)

வழிபிசகியவர்களோ முதஷாபிஹ் வசனங்களை தவறாக புரிந்து கொண்டு அதன் மூலம் குர்ஆனில் விமர்சனம் செய்வார்கள். மக்களை குழப்புவார்கள். அல்லாஹ்வின் நோக்கத்திற்கு முரணாக அதற்கு விளக்கம் கூறுவார்கள். ஆகவே, தாமும் வழிகெட்டு, மற்றவர்களையும் வழிகெடுப்பார்கள்.

ஆனால், கல்வியில் தேர்ச்சி பெற்றவர்கள் அல்லாஹ்வின் வேதத்தில் கூறப்பட்டுள்ள அனைத்தும் உண்மைதான், அவற்றில் முரண்பாடுகள், குழப்பங்கள் இல்லை என்று நம்பிக்கை கொள்வார்கள். காரணம், குர்ஆனின் வசனங்கள் எல்லாம் அல்லாஹ்வின் புறத்திலிருந்து இறங்கியவைதான். அல்லாஹ்வின் புறத்திலிருந்து வந்ததில் எவ்வித குழப்பமும் முரண்பாடும் இருக்காது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

أَفَلَا يَتَدَبَّرُونَ الْقُرْآنَ وَلَوْ كَانَ مِنْ عِنْدِ غَيْرِ اللَّهِ لَوَجَدُوا فِيهِ اخْتِلَافًا كَثِيرًا

இந்த குர்ஆனை அவர்கள் ஆழ்ந்து கவனிக்க வேண்டாமா? இது அல்லாஹ் அல்லாதவரிடமிருந்து வந்திருந்தால் இதில் பல (தவறுகளையும்) முரண்பாடுகளை(யும்) அவர்கள் கண்டிருப்பார்கள்.

அல்குர்ஆன் 4 : 82

கல்வியில் தேர்ச்சி பெற்றவர்கள் முதஷாபிஹ் வசனத்தை முஹ்கம் வசனத்தோடு சேர்த்து கருத்து முரண்பாடுகள் வராமல் புரிவார்கள். அப்போது முதஷாபிஹ் வசனமும் முஹ்கம் வசனமாக ஆகிவிடும்.

இப்போது, சந்தேகத்திற்கு இடமளிக்கும் வகையில் இருந்த வசனங்களை எப்படி சரியாக புரிவது என்பதை பார்ப்போம்.

بَلْ يَدَاهُ مَبْسُوطَتَانِ

மாறாக, அல்லாஹ்வுடைய இரு கைகளோ (எப்பொழுதும்) விரிந்தே இருக்கின்றன. (அல்குர்ஆன் 5 : 64)

என்ற இந்த வசனத்தில் கல்வியில் தேர்ச்சி பெற்றவர்களின் கூற்று என்னவென்றால், நிச்சயமாக அல்லாஹ்விற்கு உண்மையான இரு கரங்கள் உண்டு. அவை அவனுடைய கண்ணியத்திற்கு தகுதியான வகையில் இருக்கின்றன. அவனது கரங்கள் படைப்பினங்களின் கரங்களுக்கு ஒப்பானவை அல்ல. எப்படி அல்லாஹ்விற்கு என்று தனி தாத் -ஓர் உள்ளமை உண்டோ அப்படித்தான் அவனக்கு என்று தகுதியான கண்ணியமான, ஒப்பு உவமை அற்ற இரு கரங்கள் உள்ளன.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

لَيْسَ كَمِثْلِهِ شَيْءٌ وَهُوَ السَّمِيعُ الْبَصِيرُ

அவனுக்கு ஒப்பானது ஒன்றுமில்லை. அவன் (அனைத்தையும்) செவியுறுபவன், உற்று நோக்குபவன் ஆவான்.
(அல்குர்ஆன் 42 : 11)

மேலும், பின்வரும் வசனங்களில் கல்வியில் ஆழமானவர்களின் நிலைப்பாடு என்ன என்பதை விளக்குவோம்.

مَا أَصَابَكَ مِنْ حَسَنَةٍ فَمِنَ اللهِ وَمَا أَصَابَكَ مِنْ سَيِّئَةٍ فَمِنْ نَفْسِكَ وَأَرْسَلْنَاكَ لِلنَّاسِ رَسُولًا وَكَفَى بِاللهِ شَهِيدًا

மேலும், (இவ்வாறு கூறுகின்றவனை நோக்கி) ‘‘உனக்கு ஒரு நன்மை ஏற்பட்டால் அது அல்லாஹ்வினால் ஏற்பட்டது’’ என்றும் ‘‘உனக்கு ஒரு தீங்கேற்பட்டால் அது (நீ இழைத்த குற்றத்தின் காரணமாக) உன்னால்தான் வந்தது’’ (என்றும் கூறுவீராக. நபியே!) நாம்

உம்மை ஒரு தூதராகவே மனிதர்களுக்கு அனுப்பியிருக்கிறோம். (இதற்கு) அல்லாஹ்வே போதுமான சாட்சியாக இருக்கிறான்.
(அல்குர்ஆன் 4 : 79)

இந்த அத்தியாயத்தின் இதற்கு முந்திய வசனத்தில் அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَإِنْ تُصِبْهُمْ حَسَنَةٌ يَقُولُوا هٰذِهِ مِنْ عِنْدِ اللّٰهِ وَإِنْ تُصِبْهُمْ سَيِّئَةٌ يَقُولُوا هَذِهِ مِنْ عِنْدِكَ قُلْ كُلٌّ مِنْ عِنْدِ اللّٰهِ فَمَالِ هَؤُلَاءِ الْقَوْمِ لَا يَكَادُونَ يَفْقَهُونَ حَدِيثًا

அவர்களுக்கு ஒரு தீங்கு ஏற்பட்டு விட்டாலோ "(நபியே!) இது உம்மால்தான் (எங்களுக்கு ஏற்பட்டது)" எனக் கூறுகின்றனர். (ஆகவே,) நீர் கூறுவீராக: "(நானாக என் இஷ்டப்படி உங்களுக்குக் கட்டளையிடவில்லை. அல்லாஹ் அறிவித்தபடியே நான் உங்களுக்கு கட்டளையிட்டேன். ஆகவே,) அனைத்தும் அல்லாஹ்விடமிருந்தே கிடைக்கின்றன. இவர்களுக்கு என்ன நேர்ந்துவிட்டது? எவ்விஷயத்தையுமே இவர்கள் அறிந்து கொள்வதில்லையே! அல்குர்ஆன் 4: 78

அறிஞர்கள் கூறுவது என்ன என்றால், நல்லது கெட்டது அனைத்தும் அல்லாஹ் உடைய விதியின்படிதான் நடக்கின்றன. என்றாலும், நல்லது அல்லாஹ்வின் புறத்திலிருந்து அவனது அருளால் அவனுடைய அடியார்களுக்கு கொடுக்கப்படுகின்றது. கெட்டது நடப்பதற்கு காரணம் அடியானின் செயலாக இருக்கின்றது.

அல்லாஹ் இவ்வாறு கூறுகின்றான்:

وَمَا أَصَابَكُمْ مِنْ مُصِيبَةٍ فَبِمَا كَسَبَتْ أَيْدِيكُمْ وَيَعْفُو عَنْ كَثِيرٍ

ஒரு தீங்கு உங்களை வந்தடைவதெல்லாம், உங்கள் கரங்கள்

தேடிக் கொண்ட (தீய) செயலின் காரணமாகவேதான். ஆயினும், (அவற்றில்) அனேகமானவற்றை அவன் மன்னித்தும் விடுகிறான்.
அல்குர்ஆன் 42 : 30

ஆகவே, தீமையை அடியானின் பக்கம் சேர்த்து கூறப்பட்டதன் தத்துவம் என்னவென்றால் ஒரு பதிலை அதன் காரணத்துடன் சேர்ப்பது என்ற அடிப்படையில் ஆகும். அதை உருவாக்குபவன் பக்கம் சேர்ப்பது என்ற அடிப்படையில் அல்ல. எங்கு நல்லதையும் கெட்டதையும் அல்லாஹ்வின் பக்கம் சேர்க்கபட்டதோ அங்கு தத்துவம் என்னவென்றால் அவற்றை படைப்பவன் பக்கம் அவை சேர்க்கப்பட்டன என்ற அடிப்படையில் ஆகும். இவ்வாறு நாம் புரியும்போது சந்தேகம் நமக்கு நீங்கிவிடும்.

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களின் விஷயத்தில் சிலருக்கு சந்தேகம் தோன்றும்படி உள்ள பின் வரும் வசனத்திற்கு அறிஞர்கள் கூறும் விளக்கமாவது:

فَإِنْ كُنْتَ فِي شَكٍّ مِمَّا أَنْزَلْنَا إِلَيْكَ فَاسْأَلِ الَّذِينَ يَقْرَءُونَ الْكِتَابَ
مِنْ قَبْلِكَ لَقَدْ جَاءَكَ الْحَقُّ مِنْ رَبِّكَ فَلَا تَكُونَنَّ مِنَ الْمُمْتَرِينَ

(நபியே!) நாம் உமக்கு இறக்கியிருக்கும் இதில் (சிறிதும் சந்தேகம் கொள்ளாதீர்.) நீர் சந்தேகித்தால் உமக்கு முன்னர் அருளப்பட்ட வேதங்களை ஓதுபவர்களிடம் நீர் கேட்டுப் பார்ப்பீராக. நிச்சயமாக உமது இறைவனிடமிருந்தே உண்மை(யான இவ்வேதம்) உம்மிடம் வந்தது. ஆதலால், சந்தேகப்படுபவர்களில் நீரும் (ஒருவராக) ஆகிவிட வேண்டாம்.
அல்குர்ஆன் 10 : 94

நபி ﷺ அவர்களுக்கு குர்ஆனில் எவ்விதமான சந்தேகமும் இருக்க வில்லை. மாறாக, அவர்கள் குர்ஆனை அதிகம் அறிந்தவர்களாகவும் அதன் மீது உறுதியான நம்பிக்கை உள்ளவர்களாகவும் இருந்தார்கள்.

இதே அத்தியாயத்தின் மற்றொரு வசனத்தில் அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

يَا أَيُّهَا النَّاسُ إِنْ كُنْتُمْ فِي شَكٍّ مِنْ دِينِي فَلَا أَعْبُدُ الَّذِينَ تَعْبُدُونَ مِنْ دُونِ اللَّهِ وَلَكِنْ أَعْبُدُ اللَّهَ الَّذِي يَتَوَفَّاكُمْ وَأُمِرْتُ أَنْ أَكُونَ مِنَ الْمُؤْمِنِينَ

(நபியே! அவர்களை நோக்கி) கூறுவீராக: மனிதர்களே! நீங்கள் என் மார்க்கத்தில் சந்தேகம் கொண்டபோதிலும், அல்லாஹ்வைத் தவிர நீங்கள் வணங்குபவற்றை நான் எக்காலத்திலும் வணங்கப் போவதில்லை. எனினும், உங்கள் அனைவருடைய உயிரையும் கைப்பற்றும் (சக்தி பெற்ற) அல்லாஹ்வையே வணங்குவேன். நம்பிக்கையாளர்களில் நானும் ஒருவனாக இருக்க வேண்டுமென்றே கட்டளையிடப்பட்டுள்ளேன். (அல்குர்ஆன் 10 : 104)

இந்த வசனத்தின் கருத்தாவது, மக்களே! உங்களுக்கு இது விஷயத்தில் சந்தேகம் இருந்தாலும் நான் இதில் உறுதியான நம்பிக்கையோடு இருக்கின்றேன். ஆகவே, அல்லாஹ்வை அன்றி நீங்கள் வணங்குகின்ற எதையும் நான் வணங்க மாட்டேன். மாறாக, அவற்றை நான் நிராகரித்துவிட்டு அல்லாஹ்வை மட்டும் வணங்குவேன்.

فَإِنْ كُنْتَ فِي شَكٍّ مِمَّا أَنْزَلْنَا إِلَيْكَ

நாம் உமக்கு இறக்கிய வேதத்தில் நீர் சந்தேகத்தில் இருந்தால் என்று அல்லாஹ் கூறியிருப்பதில் இருந்து நபி ﷺ சந்தேகப்பட்டார்கள் என்றோ அல்லது சந்தேகப்பட வாய்ப்பு இருந்தது என்றோ கூறமுடியாது. உதாரணமாக அல்லாஹ் இவ்வாறு கூறுகின்றான்:

قُلْ إِنْ كَانَ لِلرَّحْمَٰنِ وَلَدٌ فَأَنَا أَوَّلُ الْعَابِدِينَ

(நபியே!) கூறுவீராக: "ரஹ்மானுக்கு சந்ததி இருந்தால் (அதை) வணங்குபவர்களில் நானே முதன்மையானவனாக இருப்பேன்"
(அல்குர்ஆன் 43 : 81)

இவ்வாறு கூறியிருப்பதால் அல்லாஹ்விற்கு குழந்தை இருப்பதற்கு சாத்தியக் கூறு இருக்கிறது என்றோ அல்லது குழந்தை இருக்கிறது என்றோ கூறமுடியுமா? கண்டிப்பாக ஒருபோதும் அவ்வாறு கூறமுடியாது. அல்லாஹ்விற்கு சந்ததி இல்லை. இன்னும் இருக்கவும் முடியாது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَقَالُوا اتَّخَذَ الرَّحْمٰنُ وَلَدًا ○ لَقَدْ جِئْتُمْ شَيْئًا إِدًّا ○ تَكَادُ السَّمَاوَاتُ يَتَفَطَّرْنَ مِنْهُ وَتَنْشَقُّ الْأَرْضُ وَتَخِرُّ الْجِبَالُ هَدًّا ○ أَنْ دَعَوْا لِلرَّحْمٰنِ وَلَدًا ○ وَمَا يَنْبَغِي لِلرَّحْمٰنِ أَنْ يَتَّخِذَ وَلَدًا ○ إِنْ كُلُّ مَنْ فِي السَّمَاوَاتِ وَالْأَرْضِ إِلَّا آتِي الرَّحْمٰنِ عَبْدًا ○

ரஹ்மான் சந்ததி எடுத்துக் கொண்டதாக அ(ந்த கிறிஸ்தவர்கள், இன்னும் இணைவைப்ப)வர்கள் கூறுகின்றனர். (நபியே! அவர்களை நோக்கி கூறுவீராக:) நிச்சயமாக நீங்கள் பெரியதோர் அபாண்டத்தைக் கூறுகிறீர்கள். வானங்கள் கிழிந்து போகவும், பூமி பிளந்து விடவும், மலைகள் இடிந்து சரிந்து விடவும் நெருங்கி விட்டன. ரஹ்மானுக்குச் சந்ததி உண்டென்று அவர்கள் கூறுவதன் காரணத்தால். சந்ததி எடுத்துக் கொள்வது ரஹ்மானுக்குத் தகுமானதல்ல. ஏனென்றால், நிச்சயமாக வானங்களிலும் பூமியிலும் உள்ள ஒவ்வொன்றும் ரஹ்மானிடம் அடிமையாகவே வருகிறது.(அல்குர்ஆன் 19 : 88-93)

فَلَا تَكُونَنَّ مِنَ الْمُمْتَرِينَ

ஆதலால், சந்தேகப்படுபவர்களில் நீரும் (ஒருவராக) ஆகிவிட வேண்டாம். (அல்குர்ஆன் 10 : 94)

என்று கூறப்பட்டதால் நபி ﷺ அவர்கள் சந்தேகப்பட்டார்கள் என்று பொருளல்ல. ஏனெனில், சில சமயம் ஒரு காரியத்தை அறவே செய்யாதவரைப் பார்த்தும் அதை செய்யாதீர் என்று கூறப்படும். உதாரணமாக அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَلَا يَصُدُّنَّكَ عَنْ آيَاتِ اللهِ بَعْدَ إِذْ أُنْزِلَتْ إِلَيْكَ وَادْعُ إِلَى رَبِّكَ وَلَا تَكُونَنَّ مِنَ الْمُشْرِكِينَ ○

இவ்வேதம் உமக்கு அருளப்பட்ட பின் (இதிலுள்ள) அல்லாஹ்வுடைய வசனங்களி(ன் பக்கம் நீர் மக்களை அழைப்பதி)லிருந்து அவர்கள் உம்மை தடுத்துவிட வேண்டாம். ஆகவே, உமது இறைவன் பக்கம் (நீர் அவர்களை) அழைத்துக் கொண்டேயிருப்பீராக. நிச்சயமாக இணைவைத்து வணங்குபவர்களுடன் சேர்ந்து விட வேண்டாம். (அல்குர்ஆன் 28 : 86-88)

இந்த வசனங்களில் நபி ﷺ அவர்களை நோக்கி பல தடைகளை அல்லாஹு தஆலா கூறுகின்றான். ஆனால், அல்லாஹ் தடுத்த எதையும் நபி ﷺ அவர்கள் அதற்கு முன்னர் அறவே செய்திருக்க வில்லை என்பது தெரிந்த விஷயம்தான்.

ஒரு காரியத்தை செய்யாதவரைப் பார்த்து அதை செய்யாதே என்று சொல்வதன் நோக்கம் அதை யார் செய்தார்களோ அவர்களை கண்டிப்பதும் அவர்களின் வழிமுறையைக் குறித்து எச்சரிப்பதும் ஆகும். இவ்வாறு நாம் விளக்கமாக அறிந்துகொள்வதால் நபி ﷺ அவர்களுக்கு தகுதி இல்லாத ஒன்றை அவர்களோடு சேர்த்து எண்ணுவதும் வீண் குழப்பமும் நீங்கி விடுகிறது.

---------------------------




# أَنْوَاعُ التَّشَابُهِ فِي الْقُرْآنِ

# முதஷாபிஹ் உடைய வகைகள்

**குர்ஆனில் இருவகையான முதஷாபிஹ் வசனங்கள் உள்ளன.**

**1). حقيقي ஹகீக்கி.**

அதாவது, அறவே மனிதர்களில் யாரும் அதன் உண்மை நிலையை அறிய முடியாது.

உதாரணமாக அல்லாஹ்வின் உள்ளமை மற்றும் தன்மைகளைப் பற்றி பேசுகின்ற வசனங்கள். நாம் இந்த வசனங்களையும் அதில் கூறப்பட்டுள்ள தன்மைகளின் அர்த்தங்களையும் விளங்கி இருந்தாலும் அதன் உண்மை நிலையையும் அதன் விளக்கத்தையும் நாம் அறிந்துகொள்ள முடியாது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

يَعْلَمُ مَا بَيْنَ أَيْدِيهِمْ وَمَا خَلْفَهُمْ وَلَا يُحِيطُونَ بِهِ عِلْمًا

அவர்களுக்கு முன்னுள்ளதையும் பின்னுள்ளதையும் அவன் நன்கறிவான். எனினும், அவர்கள் அவனை முழுமையாக அறிந்து கொள்ள முடியாது. (அல்குர்ஆன் 20 : 110)

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

لَا تُدْرِكُهُ الْأَبْصَارُ وَهُوَ يُدْرِكُ الْأَبْصَارَ وَهُوَ اللَّطِيفُ الْخَبِيرُ

பார்வைகள் அவனை அடையமுடியாது. அவனோ பார்வைகள்

அனைத்தையும் அறிந்து கொள்கிறான். அவன் (எவரின் பார்வைக்கும் அகப்படாத) மிக நுட்பமானவன்; மிக்க அறிந்தவன்.
(அல்குர்ஆன் 6 : 103)

இமாம் மாலிக் ﵀ அவர்களிடம்,

الرَّحْمٰنُ عَلَى الْعَرْشِ اسْتَوَى

ரஹ்மான் (-அளவற்ற அருளாளனாகிய அல்லாஹ்) அர்ஷின் மீது (தன் மகிமைக்குத் தக்கவாறு) உயர்ந்து விட்டான்.
(அல்குர்ஆன் 20 : 5)

அவன் எப்படி உயர்ந்திருக்கின்றான் என்று கேள்வி கேட்கப்பட்டது. அதற்கு இமாம் பதில் அளித்தார்கள்: உயர்ந்திருத்தல் என்பது அறியப்பட்டாத ஒன்றல்ல. ஆனால், அதன் விளக்கம், மற்றும் தன்மை அறிவால் அறியமுடியாத ஒன்றாகும். ஆகவே, இதை நம்பிக்கை கொள்வது கட்டாயமாகும். இதைப் பற்றி கேள்வி கேட்பது பித்அத் -ஓர் அனாச்சாரமான செயலாகும்.

இந்த வகையைச் சார்ந்த வசனங்களின் விளக்கங்களை நாம் அறியமுடியாத காரணத்தால் அவற்றைப் பற்றி கேள்வி கேட்பது கூடாது.

## 2). نسبى நிசபி.

அதாவது, சிலருக்கு அது முதஷாபிஹ் ஆக இருக்கும். ஆனால், கல்வியில் தேர்ச்சி பெற்றவர்களுக்கு அது பொருள் அறியப்பட்டதாக இருக்கும். இந்த வகை வசனங்களை பற்றி கேட்டறிந்து புரிந்து கொள்ள வேண்டும். ஏனெனில், குர்ஆனில் யாராலும் புரியமுடியாத வசனம் என்று ஏதும் இல்லை.

அல்லாஹ் குர்ஆனைப் பற்றி இவ்வாறு கூறுகின்றான்:

هٰذَا بَيَانٌ لِلنَّاسِ وَهُدًى وَمَوْعِظَةٌ لِلْمُتَّقِينَ

இது மக்களுக்கு (சத்தியத்தை) தெளிவுப்படுத்தக்கூடியதாகவும் நேர்வழியாகவும், தக்வா உள்ளவர்களுக்கு நல்லுபதேசமாகவும் இருக்கின்றது. (அல்குர்ஆன் 3 : 138)

وَنَزَّلْنَا عَلَيْكَ الْكِتَابَ تِبْيَانًا لِكُلِّ شَيْءٍ

நாம் இந்த வேதத்தை எல்லா விஷயங்களையும் மிகத் தெளிவுப்படுத்தக் கூடியதாக இறக்கினோம். (அல்குர்ஆன் 16 : 89)

فَإِذَا قَرَأْنَاهُ فَاتَّبِعْ قُرْآنَهُ ○ ثُمَّ إِنَّ عَلَيْنَا بَيَانَهُ ○

ஆகவே, (ஜிப்ரயீல் மூலம்) அதை நாம் (உமக்கு) ஓதிக்காண்பித்தால், (அவர் ஓதி முடித்த பின்னர்) அவ்வாறே அதை நீர் பின்தொடர்ந்து ஓதுவீராக. பின்னர், அதை விவரித்துக் கூறுவதும் நம்மீதுள்ள கடமையாகும். (அல்குர்ஆன் 75 : 18, 19)

يَاأَيُّهَا النَّاسُ قَدْ جَاءَكُمْ بُرْهَانٌ مِنْ رَبِّكُمْ وَأَنْزَلْنَا إِلَيْكُمْ نُورًا مُبِينًا

மனிதர்களே! உங்கள் இறைவனிடமிருந்து (போதுமான) அத்தாட்சியாளர் நிச்சயமாக உங்களிடம் வந்துவிட்டார். (அவருடன்) மிகத்தெளிவான (வேதமென்னும்) ஒளியை நாம் உங்களுக்கு இறக்கியிருக்கிறோம். (அல்குர்ஆன் 4 : 174)

இந்த நிசபி வகையை சேர்ந்த வசனங்கள் அல்குர்ஆனில் அதிகம் உள்ளன.

**வசனம் 1**

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

لَيْسَ كَمِثْلِهِ شَيْءٌ وَهُوَ السَّمِيعُ الْبَصِيرُ

அவனுக்கு ஒப்பானது ஒன்றுமில்லை. அவன் (அனைத்தையும்) செவியுறுபவன், உற்று நோக்குபவன் ஆவான்.

(அல்குர்ஆன் 42 : 11)

இந்த வசனத்தை எடுத்துக்கொண்டு அல்லாஹ்விற்கு அறவே தன்மைகள் இல்லை என்றும் தன்மைகளை அல்லாஹ்விற்கு கூறுவது அவனை படைப்புகளுக்கு ஒப்பாக்குவதாகும் என்றும் சிலர் கூறுகின்றனர். இவர்கள் அல்லாஹ்விற்கு ஸிபாத் - உயர்வான தன்மைகள் உண்டு என்று கூறுகின்ற பல வசனங்களை புறக்கணித்து விடுகின்றனர். ஒரு தன்மை அல்லாஹ்விற்கு இருக்கு என்று கூறுவதால் அது படைப்பினத்தின் தன்மைக்கு ஒப்பாகத்தான் இருக்க வேண்டும் என்ற எந்த அவசியமும் இல்லை. அல்லாஹ்வின் தன்மைகளை மறுப்பவர்களுக்கு **معطلة** முஅத்திலா என்று கூறப்படும்.

**வசனம் 2**

**وَمَنْ يَقْتُلْ مُؤْمِنًا مُتَعَمِّدًا فَجَزَاؤُهُ جَهَنَّمُ خَالِدًا فِيهَا وَغَضِبَ اللّٰهُ عَلَيْهِ وَلَعَنَهُ وَأَعَدَّ لَهُ عَذَابًا عَظِيمًا**

எவனேனும் ஒரு முஸ்லிமை (நன்கறிந்து) வேண்டுமென்றே கொலை செய்தால் அவனுக்குரிய தண்டனை நரகம்தான். அதில் அவன் நீண்ட காலம் தங்கி விடுவான். அவன்மீது அல்லாஹ் கோபம்கொண்டு அவனை சபித்துவிடுவான். இன்னும் மகத்தான வேதனையையும் அவனுக்கு தயார்படுத்தி வைத்திருக்கிறான்.

(அல்குர்ஆன் 4 : 93)

இந்த வசனத்தை சிலர் தவறாக புரிந்து கொண்டு முஃமினை கொன்றவர் நிரந்தரமாக நரகத்தில் தங்கிவிடுவார் என்று கூறுகின்றனர். அத்துடன் இதை அடிப்படையாக வைத்து பெரும்பாவம் எதுவாக இருந்தாலும் அதை ஒருவர் செய்துவிட்டால் அவர் நரகத்தில் நிரந்தரமாக தங்கிவிடுவார் என்றும் கூறுகின்றனர். இவர்களுக்கு

**وعيدية** வயீதிய்யா என்று கூறப்படும். இவர்களோ, ஷிர்க்கைத் தவிர மற்ற எல்லா பாவங்களையும் அல்லாஹ் நாடினால் மன்னித்து விடுவான் என்று கூறும் பல வசனங்களை புறக்கணித்து விடுகிறார்கள்.

**வசனம் 3**

أَلَمْ تَعْلَمْ أَنَّ اللّٰهَ يَعْلَمُ مَا فِي السَّمَاءِ وَالْأَرْضِ إِنَّ ذٰلِكَ فِي كِتَابٍ إِنَّ ذٰلِكَ عَلَى اللّٰهِ يَسِيرٌ

(நபியே!) வானத்திலும் பூமியிலும் இருப்பவற்றை நிச்சயமாக அல்லாஹ் நன்கறிவான் என்பதை நீர் அறியவில்லையா? நிச்சயமாக இவை அனைத்தும் அவனுடைய (நிகழ்ச்சிக் குறிப்பாகிய) ‘லவ்ஹுல் மஹ்ஃபூளில்’ இருக்கின்றன. நிச்சயமாக இது அல்லாஹ்வுக்கு மிக்க சுலபமானதே! (அல்குர்ஆன் 22 : 70)

இந்த வசனத்தை சிலர் தவறாக புரிந்து கொண்டு அடியானுக்கு எவ்வித சுய விருப்பமும் அவனது செயலில் இல்லை, அவன் எதை செய்தாலும் அவன் நிர்ப்பந்திக்கப்பட்டுதான் அதை செய்கிறான், அவனுக்கு என்று விருப்பமும் இல்லை, தனி ஆற்றலும் இல்லை என்று கூறுகிறார்கள். அடியானுக்கு என்று சுய விருப்பம் உண்டு, ஒன்றை செய்வதற்கும் விடுவதற்கும் அவனுக்கு ஆற்றல் உண்டு, அடியானின் சில செயல்கள் அவனது விருப்பத்துடன் நடக்கின்றது, சில செயல்கள் விருப்பமின்றி விதியின் படி நடக்கின்றன என்று கூறுகின்ற பல குர்ஆன் வசனங்களை புறக்கணித்து விடுகின்றனர்.

கல்வியில் தேர்ச்சி பெற்ற, நேரிய நல்லறிவு பெற்றவர்கள் இது போன்ற முதஷாபிஹான வசனங்களை எப்படி மற்ற வசனங்களுடைய பொருளுக்கு ஏற்றதுபோல் கையாள வேண்டும் என்பதை அறிவார்கள்.

--------------------------




## اَلْحِكْمَةُ فِي تَنَوُّعِ الْقُرْآنِ إِلَى مُحْكَمٍ وَمُتَشَابِهٍ

## குர்ஆன் முஹ்கம் மற்றும் முதஜாபிஹ் ஆக இருப்பதில் உள்ள தத்துவம்

குர்ஆனில் எல்லா வசனங்கங்களும் முஹ்கமாக இருந்திருந்தால் வழிகேடர்கள் யார், நேர்வழி பெற்றவர்கள் யார் என்று பிரித்தறிதல் சாத்தியமாக இருந்திருக்காது. எல்லா வசனங்களின் பொருளும் தெளிவாகவும் உறுதியாகவும் இருப்பதால் உள்ளத்தில் கோணல் உள்ளவர்கள் தங்களின் வழிகேடான சிந்தனைகளுக்கு அதிலிருந்து எதையும் ஆதாரமாக காட்டி இருக்க முடியாது. மேலும், எந்த வசனத்திற்கும் திரித்து, புரட்டி, தப்பான அர்த்தங்களை கூறியிருக்க முடியாது. ஆகவே, உண்மையான நம்பிக்கையாளர்கள், அல்குர்ஆனை முழுமையாக ஏற்றுக் கொண்டவர்கள் யார் என்ற சோனையே இருக்காது.

குர்ஆன் வசனங்கள் எல்லாம் முதஷாபிஹ் ஆக இருந்திருந்தால் மக்கள் குர்ஆனிலிருந்து தெளிவையும் நேர்வழியையும் பெற்றிருக்க முடியாது. நாம் வாழ்க்கையில் எந்த அமலும் செய்திருக்க முடியாது, சரியான நம்பிக்கையை கற்றிருக்க முடியாது.

அப்படி இல்லாமல் அல்லாஹ் அவனது வேதத்தில் பல வசனங்களை முஹ்கமாக ஆக்கி இருக்கின்றான். சில வசனங்களை முதஷாபிஹ் ஆக ஆக்கி இருக்கின்றான். குழப்பமான நேரத்தில் முஹ்கம் வசனங்கள் நமக்கு முடிவு சொல்லும். உள்ளத்தில் வழிகேடு உள்ளவர் யார் என்பதை முதஷாபிஹ் வசனத்தை வைத்து அறிந்து கொள்ளலாம். அதாவது, யார் தனது வழிகேடான கருத்துகளுக்கு

முதஷாபிஹ் வசனங்களை ஆதாரமாக கொண்டுவருவாரோ, முஹ்கம் வசனங்களை விட்டுவிடுவாரோ அவர் வழிகெட்டவர் என்பதை நாம் புரிந்து கொள்ள முடியும்.

உண்மையான ஈமான் உள்ளவர் அப்படி செய்ய மாட்டார். முஹ்கமான வசனங்களை வைத்து முதஷாபிஹ் வசனங்களுக்குரிய பொருள்களை முடிவு செய்வார். முஹ்கமான வசனங்களுக்கு முரண்படாமல் முதஷாபிஹ் வசனங்களை புரிய முயற்சிப்பார். அல்லாஹ்வின் புறத்திலிருந்து வந்த அனைத்தும் உண்மை, அவற்றில் குழப்பங்கள், முரண்பாடுகள், தவறுகள் இருக்காது என்பதை அவர் உறுதியாக நம்பிக்கை கொள்வார்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

**وَإِنَّهُ لَكِتَابٌ عَزِيزٌ ○ لَا يَأْتِيهِ الْبَاطِلُ مِنْ بَيْنِ يَدَيْهِ وَلَا مِنْ خَلْفِهِ تَنْزِيلٌ مِنْ حَكِيمٍ حَمِيدٍ ○**

நிச்சயமாக இது மிக கண்ணியமான வேதமாகும். இதற்கு முன்னும் சரி, இதற்குப் பின்னும் சரி உண்மைக்கு மாறான ஒரு விஷயமும் (திருகுர்ஆனாகிய) இதை (அணுகவே) அணுகாது. மிக்க புகழும் ஞானமும் உடையவனால் (இது) இறக்கப்பட்டது.

(அல்குர்ஆன் 41 : 41, 42)

**أَفَلَا يَتَدَبَّرُونَ الْقُرْآنَ وَلَوْ كَانَ مِنْ عِنْدِ غَيْرِ اللّٰهِ لَوَجَدُوا فِيهِ اخْتِلَافًا كَثِيرًا**

இந்த குர்ஆனை அவர்கள் ஆழ்ந்து கவனிக்க வேண்டாமா? இது அல்லாஹ் அல்லாதவரிடமிருந்து வந்திருந்தால் இதில் பல (தவறுகளையும்) முரண்பாடுகளை(யும்) அவர்கள் கண்டிருப்பார்கள்.

(அல்குர்ஆன் 4 : 82)

உள்ளத்தில் வழிகேடு உள்ளவர்கள் முதஷாபிஹ் வசனங்களைக் கொண்டு தங்கள் கருத்துக்களை அமைப்பார்கள். பிறகு, முஹ்கமான வசனங்களில் தஹ்ரீஃப் - மாற்றம் செய்வார்கள். மன இச்சையை பின்பற்றி உறுதியான செய்திகளில் சந்தேகம் உண்டுபண்ணுவார்கள். உறுதியான வசனங்களையும் ஹதீஸ்களையும் ஏற்க மறுப்பார்கள். வழிகெட்டவர்கள் எல்லோரும் முதஷாபிஹ் வசனங்களைக் கொண்டுதான் தங்கள் கொள்கைகளையும் அமல்களையும் அமைத்துக் கொள்வார்கள்.

------------------------------

பாடம் 11

# مَوْهِمُ التَّعَارِضِ فِي الْقُرْآنِ

# குர்ஆனில் முரண்பாடு தோன்றும் இடங்கள்

முரண்பாடு என்றால் இருவசனங்களில் ஒன்று மற்றொன்றின் கருத்துக்கு எதிராக இருக்கும். ஒரு வசனத்தின் கருத்தை மற்றொரு வசனம் மறுக்கக்கூடியதாக இருக்கும். ஒரு வசனம் ஒன்றை உறுதிபடுத்தினால் மற்றொரு வசனம் அதை நீக்கக் கூடியதாக இருக்கும்.

செய்திகளாக இருக்கின்ற இரு வசனங்களுக்கு இடையில் முரண்பாடுகள் இருக்க முடியாது. ஏனெனில், அப்படி முரண்பாடு இருந்தால் ஒன்று உண்மை என்றும் மற்றொன்று பொய் என்றும் ஆகிவிடும். அல்லாஹ்வின் செய்திகளில் பொய் என்பது நிகழ முடியாத ஒன்றாகும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَمَنْ أَصْدَقُ مِنَ اللّٰهِ حَدِيثًا

அல்லாஹ்வைவிட உண்மை சொல்பவர் யார்?

(அல்குர்ஆன் 4 : 87)

وَمَنْ أَصْدَقُ مِنَ اللّٰهِ قِيلا

அல்லாஹ்வைவிட உண்மை சொல்பவர் யார்?

(அல்குர்ஆன் 4 : 122)

இரண்டு வசனங்களும் ஒரு சட்டத்தைப் பற்றி பேசக்கூடியதாக இருந்தால் அப்போதும் இரண்டுக்கும் இடையில் முரண்பாடுகள் நிகழாது. ஏனெனில், அந்த இரண்டு வசனங்களில் எது பிந்தியதோ அது முந்திய வசனத்தின் சட்டத்தை மாற்றிவிட்டது என்று ஆகிவிடும். ஆகவே, முரண்பாடு என்ற பேச்சு அங்கே வராது. முந்திய வசனத்தின் சட்டம் இப்போது அமலில் இல்லை. ஆகவே, அது அடுத்துவந்த வசனத்திற்கு முரணாக இருக்கின்றது என்று கூற முடியாது.

ஆகவே, இரு வசனங்களுக்கு இடையில் முரண்பாடுகள் இருப்பதைப் போன்று உனக்கு தெரிந்தால் அவ்விரண்டுக்கும் இடையில் ஒருங்கிணைப்பை ஏற்படுத்த நீ முயற்சி செய்ய வேண்டும். அப்படி ஒருங்கிணைக்க உன்னால் முடியவில்லை என்றால் கற்றறிந்த கல்வியாளர்களிடம் அதை நீ ஒப்படைத்து விட வேண்டும்.

முரண்பாடு இருப்பதாக தோன்றும் வசனங்களுக்கு இடையில் ஒற்றுமையை ஏற்படுத்தி பல உதாரணங்களை அறிஞர்கள் குறிப்பிட்டிருக்கின்றார்கள். இந்த தலைப்பில் கோர்வை செய்யப்பட்ட நூல்களில் அறிஞர் முஹம்மது அல்அமீன் ஷின்கீத்தி அவர்கள் எழுதிய دَفْعُ إِيْهَامِ الْاِضْطِرَابِ عَنْ آيِ الْكِتَابِ என்ற நூல் மிகவும் பயனுள்ள பல விஷயங்களை உள்ளடக்கியதாகும்.

இதற்கு சில உதாரணங்களை பார்ப்போம்.

உதாரணம்: 1).

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

ذٰلِكَ الْكِتَابُ لَا رَيْبَ فِيهِ هُدًى لِلْمُتَّقِينَ

இதுதான் வேதநூல். இதில் சந்தேகமேயில்லை. இறையச்சம் உடையவர்களுக்கு (இது) நேரான வழியைக் காட்டும்.

(அல்குர்ஆன் 2 : 2)

شَهْرُ رَمَضَانَ الَّذِي أُنْزِلَ فِيهِ الْقُرْآنُ هُدًى لِلنَّاسِ

ரமழான் மாதம் எத்தகைய (மகத்துவமுடைய)து என்றால் அதில்தான் மனிதர்களுக்கு நேர்வழி காட்டும் திரு குர்ஆன் (என்னும் வேதம்) இறக்கப்பட்டது. (அல்குர்ஆன் 2 : 185)

முதல் வசனத்தில் இந்த வேதம் அல்குர்ஆன் தக்வா உள்ளவர்களுக்கு நேர்வழி காட்டும் என்று கூறப்பட்டுள்ளது.

இரண்டாவது வசனத்தில் மக்கள் எல்லோருக்கும் இது நேர்வழி காட்டும் என்று கூறப்பட்டுள்ளது.

இதற்கு விளக்கமாவது: முதல் வசனத்தில் கூறப்பட்ட நேர்வழி காட்டல் என்பது இந்த வேதத்தைக் கொண்டு பயன்பெற்று நேர்வழி நடப்பதற்கு அல்லாஹ்வின் தவ்ஃபீக் -அருள் கிடைப்பதை குறிக்கின்றது.

இரண்டாவது வசனத்தில் தெளிவுபடுத்துதல், வழி காண்பித்தல் என்ற நேர்வழி காட்டலை குறிக்கின்றது. ஆகவே, முந்தியது தக்வா உள்ளவர்களுக்கு மட்டும் கிடைக்கக் கூடியதாகும். இரண்டாவது எல்லா மக்களுக்கும் பொதுவாக இருக்கும். அவர்களில் யார் அல்லாஹ்வை அஞ்சி, மறுமையை பயந்து நேர்வழியில் நடக்க வேண்டும் என்று விரும்புவார்களோ அவர்களுக்கு கண்டிப்பாக முதல் வகையான நேர்வழி காட்டலை அல்லாஹ் இந்த வேதத்தின் மூலம் வழங்குவான்.

மேற்கூறப்பட்ட இரு வசனங்களைப் போன்றே ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் விஷயத்தில் அல்லாஹ் கூறுகின்ற இரு வசனங்களையும் நாம் புரிய வேண்டும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

إِنَّكَ لَا تَهْدِي مَنْ أَحْبَبْتَ وَلَكِنَّ اللَّهَ يَهْدِي مَنْ يَشَاءُ وَهُوَ أَعْلَمُ بِالْمُهْتَدِينَ

(நபியே!) நிச்சயமாக இவர்களில் நீர் விரும்பியவர்களை நேரான வழியில் செலுத்த உம்மால் முடியாது. எனினும் அல்லாஹ், தான் விரும்பியவர்களை(த்தான்) நேரான வழியில் செலுத்துகிறான். நேரான வழியில் செல்லத் தகுதியுடையவர் யார் என்பதை அவனே நன்கறிவான். (அல்குர்ஆன் 28 : 56)

மேலும் அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَإِنَّكَ لَتَهْدِي إِلَى صِرَاطٍ مُسْتَقِيمٍ

(நபியே!) நிச்சயமாக நீர் (அதன் மூலம் மக்களுக்கு) நேரான வழியைக் காண்பிக்கிறீர். (அல்குர்ஆன் 42 : 52)

முதல் வசனத்தில் **لَا تَهْدِي** நீங்கள் விரும்பியவர்களுக்கு நீங்கள் நேர்வழி காட்ட முடியாது என்று வந்துள்ளது.

இரண்டாவது வசனத்தில் **لَتَهْدِي** நிச்சயமாக நீங்கள் நேரான பாதையின் பக்கம் வழி காட்டுகிறீர்கள் என்று வந்துள்ளது.

முதலாவது வசனத்தில் சொல்லப்பட்டது ஹிதாயத்துத் தவ்ஃபீக் - நன்மை செய்வதற்கு அருள் புரிவது, வாய்ப்பளிப்பது என்ற பொருளில் சொல்லப்பட்டது. அது அல்லாஹ்வுடைய செயலாகும்.

இரண்டாவது வசனத்தில் சொல்லப்பட்டது ஹிதாயத்துத் தப்யீன்- நேர்வழி எது என்று தெளிவுபடுத்தி கூறுவது. இதுதான் நபிமார்களின் பணியாகும்.

உதாரணம் 3

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

شَهِدَ اللّٰهُ أَنَّهُ لَا إِلَٰهَ إِلَّا هُوَ وَالْمَلَائِكَةُ وَأُولُو الْعِلْمِ قَائِمًا بِالْقِسْطِ
لَا إِلَٰهَ إِلَّا هُوَ الْعَزِيزُ الْحَكِيمُ

(நபியே! நீதவானாகிய) அல்லாஹ் சாட்சி கூறுகிறான்: "நிச்சயமாக அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குத் தகுதியான இறைவன் வேறுயாரும் (இல்லவே) இல்லை." அப்படியே வானவர்களும் (வேதத்தை கற்றுத் தேர்ந்த) கல்வியாளர்களும் சாட்சி கூறுகின்றனர்; (அனைவரையும்) மிகைத்தவனும் ஞானமுடையவனுமான அவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறுயாருமில்லை.

(அல்குர்ஆன் 3 : 18)

وَمَا مِنْ إِلَٰهٍ إِلَّا اللّٰهُ

வணக்கத்திற்குத் தகுதியான இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறுயாரும் (இல்லவே) இல்லை. (அல்குர்ஆன் 3 : 62)

மேற் கூறப்பட்ட இரு வசனங்களிலும் அல்லாஹ்வைத் தவிர வேறு கடவுள் அறவே இல்லை என்று கூறப்பட்டுள்ளது.

وَلَا تَدْعُ مَعَ اللّٰهِ إِلَٰهًا آخَرَ

(நபியே!) அல்லாஹ்வுடன் வணக்கத்திற்குரிய வேறொரு கடவுளை நீர் அழைக்க வேண்டாம். (அல்குர்ஆன் 28 : 88)

فَمَا أَغْنَتْ عَنْهُمْ آلِهَتُهُمُ الَّتِي يَدْعُونَ مِنْ دُونِ اللّٰهِ مِنْ شَيْءٍ لَمَّا
جَاءَ أَمْرُ رَبِّكَ وَمَا زَادُوهُمْ غَيْرَ تَتْبِيبٍ

உங்கள் இறைவனின் வேதனை வந்த சமயத்தில் அல்லாஹ்வை தவிர்த்து அவர்கள் அழைத்துக் கொண்டிருந்த தெய்வங்களில்

ஒன்றுமே அவர்களுக்கு ஒரு பயனும் அளிக்கவில்லை; மேலும், நஷ்டத்தையே அவை அவர்களுக்கு அதிகப்படுத்தின!

(அல்குர்ஆன் 11 : 101)

இந்த இரு வசனங்களிலும் அல்லாஹ்வைத் தவிர சில கடவுள்களும் உள்ளன என்று கூற வருவதைப் போன்று இருக்கிறது.

இதற்கு விளக்கம் என்னவென்றால், அல்லாஹ்வின் பக்கம் சேர்த்து கூறப்பட்ட உலூஹிய்யத் -கடவுள் தன்மை என்பது அவன்தான் உண்மையான கடவுள், அவனுக்குத்தான் உண்மையான கடவுள் தன்மை -உலூஹிய்யத் இருக்கிறது என்ற பொருளில் கூறப்பட்டதாகும்.

அல்லாஹ்வைத் தவிர பிறருக்கு உலூஹிய்யத் -கடவுள் தன்மை சேர்த்துக் கூறப்பட்டதுடைய பொருள் அவை பொய்யாக மக்களால் வணங்கப்படுகின்றன என்பதாகும். இதை அல்லாஹ்வின் பின்வருகின்ற கூற்று நமக்கு தெளிவுப்படுத்துகின்றது.

ذٰلِكَ بِأَنَّ اللّٰهَ هُوَ الْحَقُّ وَأَنَّ مَا يَدْعُونَ مِنْ دُونِهِ هُوَ الْبَاطِلُ وَأَنَّ اللّٰهَ هُوَ الْعَلِيُّ الْكَبِيرُ

இதன் காரணமாவது: நிச்சயமாக அல்லாஹ்தான் உண்மையானவன். நிச்சயமாக அவர்கள் அல்லாஹ்வையன்றி (இறைவனென) அழைப்பவை அனைத்தும் பொய்யானவைதான். நிச்சயமாக அல்லாஹ்தான் உயர்ந்தவன், (மேலானவன்,) மகா பெரியவன்.

(அல்குர்ஆன் 22 : 62)

இன்னும் இது போன்ற ஏராளமான வசனங்கள் உள்ளன. அவற்றின் சரியான விளக்கத்தை அறிய ஆசைப்படுபவர்கள் ஷைக் ஷின்கீத்தி அவர்களின் நூலை வாசிக்கவும்.

----------------------------




# اَلْقَسَمُ

# கசம் - சத்தியம்

கசம் என்றால் சத்தியம் செய்தல் ஆகும். அதாவது ஒரு செய்தியை கூறும்போது அதை உறுதிபடுத்துவதற்காக கண்ணியமிக்க ஒன்றின் மீது சத்தியத்திற்குரிய எழுத்தை பயன்படுத்தி சத்தியம் செய்வதாகும். சத்தியத்திற்காக பயன்படுத்தப்படுகின்ற பதங்கள் மூன்றாகும்.

## 1). الواو **வாவ்**

உதாரணம்:

فَوَرَبِّ السَّمَاءِ وَالْأَرْضِ إِنَّهُ لَحَقٌّ

வானம், பூமியின் இறைவன் மீது சத்தியமாக! நிச்சயமாக இது, உண்மையானதாகும். (அல்குர்ஆன் 51 : 23)

வாவை அடுத்துவரக்கூடியது **اسم ظاهر** இஸ்ம் ளாஹிர் ஆகத்தான் இருக்க வேண்டும். **ضمير** ழமீராக இருக்க முடியாது. வாவ் எழுத்து வரும்போது சத்தியம் செய்கிறேன் என்ற வாசகம் வெளிப்படையாக இருக்காது. வாவை கூறுவதே சத்தியத்திற்கு போதுமானதாக இருக்கும்.

## 2). الباء **பா**

உதாரணம்:

لَا أُقْسِمُ بِيَوْمِ الْقِيَامَةِ

மறுமை நாளின் மீது நான் சத்தியம் செய்கிறேன்.

(அல்குர்ஆன் 75 : 1)

சத்தியத்திற்குரிய பா எழுத்தை பயன்படுத்தும்போது நான் சத்தியம் செய்கிறேன் என்ற பதம் சில சமயம் வெளிப்படையாக இருக்கும். முன்னர் கூறப்பட்ட வசனத்தில் இருப்பதைப் போன்று. சில சமயம் அந்த பதம் வாசகத்தில் இல்லாமல் போக்கப்பட்டிருக்கும். உதாரணமாக, அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

قَالَ فَبِعِزَّتِكَ لَأُغْوِيَنَّهُمْ أَجْمَعِينَ

அதற்கவன், உன் மகத்துவத்தின் மீது சத்தியமாக நான் (மனிதர்கள்) அனைவரையும் வழி கெடுத்து விடுவேன் என்று கூறினான்.

(அல்குர்ஆன் 38 : 82)

சத்தியத்திற்குரிய பாவை அடுத்து இஸ்மு ளாஹிர் -வெளிப்படையான பெயர் சொல்லும் இருக்கலாம் அல்லது ளமீரும் இருக்கலாம்.

உதாரணமாக அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

قَالَ فَبِعِزَّتِكَ لَأُغْوِيَنَّهُمْ أَجْمَعِينَ

உதாரணமாக நாம் கூறுவதைப் போல

اَللّٰهُ رَبِّي وَبِهِ أَحْلِفُ لَيَنْصُرَنَّ الْـمُؤْمِنِيْنَ

அல்லாஹ்தான் எனது ரப்பு. அவன் நிச்சயமாக முஃமின்களுக்கு உதவுவான் என்று அவன் மீது நான் சத்தியம் செய்து கூறுகின்றேன்.

**3). التاء தா**

உதாரணம்: 1

تَاللّٰهِ لَتُسْأَلُنَّ عَمَّا كُنْتُمْ تَفْتَرُونَ

அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீங்கள் கற்பனையாகக் கூறும் இப்பொய்(க் கூற்று)களைப் பற்றி (மறுமையில்) நிச்சயமாக நீங்கள் கேள்வி கேட்கப்படுவீர்கள். (அல்குர்ஆன் 16 : 56)

தாவை பயன்படுத்தி சத்தியம் செய்யும்போது அங்கு ஆமில் (நான் சத்தியம் செய்கிறேன் என்ற வாக்கியம்) வெளிப்படையாக இருக்காது. மேலும் இந்த தாவை அல்லாஹ் அல்லது ரப்பு என்ற உயர்வுமிக்க பதங்களுடந்தான் பயன்படுத்தப்படும்.

சத்தியம் செய்து கூறும்போது **مقسم به** -முக்சம் பிஹி எதைக் கொண்டு சத்தியம் செய்யப்படுகின்றதோ அது வாக்கியத்தில் கூறப்படுவதுதான் பொதுவான நியதியாகும்.

உதாரணமாக

تَاللّٰهِ لَتُسْأَلُنَّ عَمَّا كُنْتُمْ تَفْتَرُونَ

இவ்விடத்தில் முக்சம் பிஹி, தா என்ற எழுத்தாகும்.

சில நேரங்களில், முக்சம் பிஹி வாக்கியத்தில் கூறப்பட்டிருக்காது.

உதாரணமாக

أَحْلَفُ عَلَيْكَ لَتَجْتَهِدَنَّ

நீ கண்டிப்பாக முயற்சி செய்யவேண்டும் என்று நான் சத்தியம் செய்கிறேன்.

இவ்வாக்கியத்தில் சத்தியத்திற்கு பயன்படுத்தப்படும் வாவ், பா, தா ஆகிய மூன்று எழுத்துக்களில் எதுவும் கூறப்படவில்லை.

சத்தியம் செய்யும்போது **مقسم عليه** -முக்சம் அலைஹி எதற்காக சத்தியம் செய்யப்படுகிறதோ அது வாக்கியத்தில் கூறப்படுவதுதான் பொதுவான நியதியாகும்.

உதாரணமாக

قُلْ بَلَى وَرَبِّي لَتُبْعَثُنَّ ثُمَّ لَتُنَبَّؤُنَّ بِمَا عَمِلْتُمْ

(நபியே!) நீர் கூறுவீராக: "அவ்வாறல்ல. என் இறைவன் மீது சத்தியமாக! மெய்யாகவே நீங்கள் எழுப்பப்படுவீர்கள். நீங்கள் செய்து கொண்டிருப்பவற்றைப் பற்றி பின்னர் நீங்கள் அறிவுறுத்தவும் படுவீர்கள். (அல்குர்ஆன் 64 : 7)

சில நேரங்களில் **مقسم عليه** -முக்சம் அலைஹி கூறப்பட்டிருக்காது. உதாரணமாக

ق وَالْقُرْآنِ الْمَجِيدِ

கீர்த்திமிக்க குர்ஆன் மீது சத்தியமாக (அல்குர்ஆன் 50 : 1)

இந்த வசனத்தில் கீர்த்திமிக்க குர்ஆன் மீது சத்தியமாக என்று கூறப்பட்ட பின்னர் எதற்காக சத்தியம் செய்யப்பட்டதோ அந்த செய்தி வாக்கியத்தில் கூறப்படவில்லை. ஆனால், வசனத்தின் தொடரை கவனித்து அதை நாம் புரிந்து கொள்ளலாம். அதாவது, கீர்த்திமிக்க குர்ஆன் மீது சத்தியமாக அவர்கள் (-நிராகரிப்பாளர்கள்) அழிந்து நாசமாவார்கள். இந்த இடத்தில் அவர்கள் (-நிராகரிப்பாளர்கள்) அழிந்து நாசமாவார்கள் என்பதுதான் அந்த (முக்சம் அலைஹி) செய்தியாகும்.

சில நேரங்களில் சத்தியத்திற்குரிய பா, தா, வாவ் ஆகிய இந்த பதங்கள் வார்த்தையில் கூறப்பட்டிருக்காது. அனால், அதை அறிவிக்கக்கூடிய வார்த்தை வசனத்தில் இடம்பெற்றிருக்கும்.

உதாரணமாக:

ثُمَّ لَتُسْأَلُنَّ يَوْمَئِذٍ عَنِ النَّعِيمِ

(உங்களுக்கு இறைவன் புரிந்த) அருளை (நீங்கள் எவ்வழியில் செலவு செய்தீர்கள் என்பதை)ப் பற்றியும், பின்னர் அந்நாளில் நிச்சயமாக நீங்கள் கேட்கப்படுவீர்கள். (அல்குர்ஆன் 102 : 8)

## சத்தியம் செய்யப்படுவதில் உள்ள பலன்கள்:

1). எதைக் கொண்டு சத்தியம் செய்யப்படுகின்றதோ அதன் மகத்துவத்தை வெளிப்படுத்துவது நோக்கமாக இருக்கும்.

2). எதற்காக சத்தியம் செய்யப்படுகின்றதோ அதன் முக்கியத்துவத்தை வெளிப்படுத்துவதும் அதை உறுதி படுத்துவதும் நோக்கமாக இருக்கும்.

ஆகவே, பொதுவாக மூன்று சூழ்நிலைகளில் தவிர வேறு இடங்களில் சத்தியம் செய்வது பொருத்தமாக இருக்காது.

1). முக்ஸம் அலைஹி -எதற்காக சத்தியம் செய்யப்படுகின்றதோ அது மிக முக்கியமானதாக இருக்க வேண்டும்.

2). முன்னிலையில் இருப்பவருக்கு (-செய்தி யாருக்கு சொல்லப்படுகின்றதோ அவருக்கு) அந்த செய்தியில் குழப்பம், சந்தேகம் இருக்க வேண்டும்.

3). அல்லது முன்னிலையில் இருப்பவர் அந்த செய்தியை மறுப்பவராக இருக்க வேண்டும்.

----------------------------

பாடம் 13

# اَلْقَصَصُ

# அல் கஸஸ் - வரலாறுகள்

**القصص** அல்கஸஸ் மற்றும் **القص** அல்கஸ்ஸு என்றால் அடிசுவடுகளை தேடி அவற்றை பின்தொடர்ந்து செல்வதற்கு கூறப்படும்.

தொடர் நிகழ்வுகளையும் சம்பவங்களையும் உள்ளடக்கிய வரலாறுக்கு நமது வழக்கத்தில் அல்கஸஸ் என்று கூறப்படும்.

குர்ஆனுடைய வரலாறுகள், வரலாறுகள் அனைத்திலும் மிக உண்மையானவையாகும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَمَنْ أَصْدَقُ مِنَ اللّٰهِ حَدِيثًا

அல்லாஹ்வைவிட உண்மை சொல்பவர் யார்?

(அல்குர்ஆன் 4 : 87)

குர்ஆனுடைய வரலாறுகள் வரலாறுகள் அனைத்திலும் மிக அழகானவையாகும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

نَحْنُ نَقُصُّ عَلَيْكَ أَحْسَنَ الْقَصَصِ بِمَا أَوْحَيْنَا إِلَيْكَ هٰذَا الْقُرْآنَ

(நபியே!) வஹ்யி மூலம் நாம் உமக்கு அறிவிக்கும் இந்தக் குர்ஆனின் மூலம் சரித்திரங்களில் மிக்க அழகானதொன்றை உமக்கு நாம் விவரிக்கிறோம். (அல்குர்ஆன் 12 : 3)

குர்ஆனுடைய வரலாறுகளின் வாசக அமைப்பு மிக உயர்ந்த இலக்கிய நயமுடையவையாகவும், அதன் கருத்துகள் மிகவும் ஆழ்ந்த தாக்கமுடயவையாகவும் இருப்பதால் குர்ஆன் கூறுகின்ற வரலாறை மிக அழகிய வரலாறு என்று கூறுகிறோம்.

குர்ஆனுடைய வரலாறுகள், வரலாறுகள் அனைத்திலும் மிகவும் நற்பலன்களை தரக்கூடியவையாகும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

لَقَدْ كَانَ فِي قَصَصِهِمْ عِبْرَةٌ لِأُولِي الْأَلْبَابِ

அறிவுடையவர்களுக்கு (நபிமார்களாகிய) இவர்களுடைய சரித்திரங்களில் நல்லதோர் படிப்பினை நிச்சயமாக இருக்கிறது.
(அல்குர்ஆன் 12 : 111)

உள்ளங்களை பண்படுத்தும் அறிவுரைகளும் அமல்களையும் குணங்களையும் சீர்செய்கின்ற உபதேசங்களும் அல்குர்ஆனின் வரலாறுகளில் நிறைந்து இருக்கின்றன.

## குர்ஆனில் கூறப்பட்டுள்ள வரலாறுகள் மூன்று வகைப்படும்.

1). நபிமார்கள் மற்றும் ரஸூல்மார்களைப் பற்றிய வரலாறாக இருக்கும். மேலும், அவர்களின் காலத்தில் வாழ்ந்த முஃமின்களுடன் மற்றும் காஃபிர்களுடன் இறைத்தூதர்களுக்கு என்ன நடந்தது என்பதை எடுத்துக் கூறுகின்ற வரலாறாக இருக்கும்.

2). சில குறிப்பிட்ட நபர்கள், குறிப்பிட்ட கூட்டத்தினர் பற்றிய வரலாறாக இருக்கும். அதில் நமக்கு படிப்பினைகள் இருப்பதால் அவர்களைப் பற்றி செய்திகளை அல்லாஹ் நமக்கு எடுத்துக் கூறுவான். உதாரணமாக: மர்யம் عليها السلام அவர்களின் வரலாறு, லுக்மான் عليه السلام அவர்களின் வரலாறு, தனது முகடுகள் மீது விழுந்து கிடந்த ஊரை கடந்து சென்றவர் உடைய வரலாறு,

துல்கர்னைன் ﷺ உடைய வரலாறு, காரூன் உடைய வரலாறு, குகைவாசிகளின் வரலாறு, யானைப் படையின் வரலாறு, அகழ்வாசிகளின் வரலாறு, இன்னும் இவை போன்ற பல வரலாறுகள்.

3). நபி ﷺ அவர்களின் காலத்தில் நடந்த சம்பவங்கள், அவர்களின் காலத்தில் வாழ்ந்த சமூகத்தவர்கள் பற்றிய வரலாறாக இருக்கும். உதாரணமாக, பத்ரு போர், உஹுது போர், அகழ் போர், பனூ குறைளா போர், பனூ நழீர் போர் இன்னும் இவைப் போன்ற போர்களின் வரலாறுகள். ஸைது இப்னு ஹாரிசா அவர்கள் உடைய சம்பவம், அபூ லஹப் பற்றிய செய்தி, இன்னும் இவைப் போன்ற செய்திகள்.

**குர்ஆனில் வரலாறு கூறப்படுவதில் மகத்தான பல நன்மைகளும் தத்துவங்களும் உள்ளன.**

1). வரலாறுகளில் அல்லாஹ் ஏற்படுத்தியுள்ள ஞானத்தையும் தத்துவத்தையும் விவரிப்பது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَلَقَدْ جَاءَهُمْ مِنَ الْأَنْبَاءِ مَا فِيهِ مُزْدَجَرٌ ○ حِكْمَةٌ بَالِغَةٌ فَمَا تُغْنِ النُّذُرُ○

(இவர்களுக்குப்) போதுமான படிப்பினை தரக்கூடிய பல விஷயங்கள் (இதற்கு முன்னரும்) நிச்சயமாக அவர்களிடம் வந்தே இருக்கின்றன. (அவை அவர்களுக்கு) முழு ஞானம் அளிக்கக்கூடியவைதான். எனினும், (அவற்றைக் கொண்டு) அச்சமூட்டி எச்சரிக்கை செய்தது (இவர்களுக்கு) ஒரு பயனும் அளிக்கவில்லை.

(அல்குர்ஆன் 54 : 4, 5)

2). பொய்பித்தவர்களை தண்டித்ததின் மூலம் அல்லாஹ்வின் நீதத்தை விவரிப்பது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَمَا ظَلَمْنَاهُمْ وَلَكِنْ ظَلَمُوا أَنْفُسَهُمْ فَمَا أَغْنَتْ عَنْهُمْ آلِهَتُهُمُ الَّتِي يَدْعُونَ مِنْ دُونِ اللهِ مِنْ شَيْءٍ لَمَّا جَاءَ أَمْرُ رَبِّكَ وَمَا زَادُوهُمْ غَيْرَ تَتْبِيبٍ

இவர்களில் எவருக்குமே நாம் தீங்கிழைக்கவில்லை. எனினும், அவர்களே தங்களுக்கு தீங்கிழைத்துக் கொண்டனர். உங்கள் இறைவனின் வேதனை வந்த சமயத்தில் அல்லாஹ்வை தவிர்த்து அவர்கள் அழைத்துக் கொண்டிருந்த தெய்வங்களில் ஒன்றுமே அவர்களுக்கு ஒரு பயனும் அளிக்கவில்லை; மேலும், நஷ்டத்தையே அவை அவர்களுக்கு அதிகப்படுத்தின! (அல்குர்ஆன் 11 : 101)

3). முஃமின்களுக்கு அல்லாஹ் நற்கூலி வழங்கியதை கூறுவதின் வாயிலாக அல்லாஹ்வின் பேரருளை விவரிப்பது.

إِلَّا آلَ لُوطٍ نَجَّيْنَاهُمْ بِسَحَرٍ ○ نِعْمَةً مِنْ عِنْدِنَا كَذَلِكَ نَجْزِي مَنْ شَكَرَ ○

லூத்துடைய குடும்பத்தாரைத் தவிர, மற்றவர்கள் மீது நாம் கல்மாரி பொழியச் செய்தோம். விடியற்காலை நேரத்தில் நாம் அவ(ருடைய குடும்பத்தா)ர்களை பாதுகாத்துக் கொண்டோம். இது நமது அருளாகும். இவ்வாறே நன்றி செலுத்துபவர்களுக்கு நாம் கூலி கொடுப்போம். (அல்குர்ஆன் 54 : 34, 35)

4). நபியவர்களுக்கு அவர்களை பொய்பித்த நிராகரிப்பாளர்களால் ஏற்பட்ட சோதனைகளில் நபி ﷺ அவர்களுக்கு ஆறுதல் அளிப்பது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَإِنْ يُكَذِّبُوكَ فَقَدْ كَذَّبَ الَّذِينَ مِنْ قَبْلِهِمْ جَاءَتْهُمْ رُسُلُهُمْ بِالْبَيِّنَاتِ وَبِالزُّبُرِ وَبِالْكِتَابِ الْمُنِيرِ ○ ثُمَّ أَخَذْتُ الَّذِينَ كَفَرُوا فَكَيْفَ كَانَ نَكِيرِ ○

(நபியே!) அவர்கள் உம்மைப் பொய்யாக்கினால் (அதற்காக நீர் கவலைப்பட வேண்டாம். இவ்வாறே) இவர்களுக்கு முன்னிருந்தவர்களும் (தூதர்களை) பொய்யாக்கினார்கள். அவர்களுடைய தூதர்கள் தெளிவான அத்தாட்சிகளுடன் 'ஸுஹுஃபு'களையும், பிரகாசமான வேதங்களையும் அவர்களிடம் கொண்டு வந்திருந்தனர். ஆகவே, (அத்தூதர்களை) நிராகரித்த அவர்களை நாம் பிடித்துக் கொண்டோம். எனது தண்டனை எவ்வாறாயிற்று (என்பதை நீர் கவனித்தீரா)? (அவ்வாறே, உம்மை நிராகரிக்கும் இவர்களையும் வேதனையைக் கொண்டு நாம் பிடித்துக் கொள்வோம்.) (அல்குர்ஆன் 35 : 25, 26)

5). முன்சென்ற முஃமின்களுக்கு கிடைத்த வெற்றியைப் பற்றி கூறும்போது அது இப்போதைய முஃமின்களுக்கு ஈமானிலும் அமலிலும் உறுதியாக இருப்பதற்கும் ஈமான், அமலில் அதிகம் முன்னேறுவதற்கும் ஆர்வமூட்டும்படியாக அமைந்திருக்கும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

فَاسْتَجَبْنَا لَهُ وَنَجَّيْنَاهُ مِنَ الْغَمِّ وَكَذٰلِكَ نُنْجِي الْمُؤْمِنِينَ

நாம் அவருடைய பிரார்த்தனையை அங்கீகரித்து (அவருடைய மிக்க துயரமான) சிரமத்திலிருந்தும் அவரை நாம் பாதுகாத்துக் கொண்டோம். இவ்வாறே, (சிரமத்தில் சிக்கி நம்மிடம் பிரார்த்தனை செய்யும்) நம்பிக்கையாளர்களையும் நாம் பாதுகாத்துக் கொள்வோம். (அல்குர்ஆன் 21 : 88)

மேலும் அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَلَقَدْ أَرْسَلْنَا مِنْ قَبْلِكَ رُسُلًا إِلَى قَوْمِهِمْ فَجَاءُوهُمْ بِالْبَيِّنَاتِ فَانْتَقَمْنَا مِنَ الَّذِينَ أَجْرَمُوا وَكَانَ حَقًّا عَلَيْنَا نَصْرُ الْمُؤْمِنِينَ

(நபியே!) நிச்சயமாக நாம் உமக்கு முன்னரும் பல தூதர்களை அவர்களுடைய சமுதாய மக்களிடம் அனுப்பி வைத்தோம். அவர்களும் தெளிவான அத்தாட்சிகளையே அவர்களிடம் கொண்டு வந்தனர். (எனினும், அவற்றை அவர்கள் நிராகரித்து விட்டனர்.) ஆகவே, (அவற்றை நிராகரித்த)குற்றவாளிகளை நாம் பழிவாங்கினோம். (ஏனென்றால் இவ்வாறு பழிவாங்கி) நம்பிக்கையாளர்களுக்கு உதவி செய்வது நம்மீது கடமையாக இருக்கிறது. (அல்குர்ஆன் 30 : 47)

6). தொடர்ந்து நிராகரிப்பில் திளைத்திருக்கின்ற காஃபிர்களுக்கு எச்சரிக்கை விடுப்பது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

أَفَلَمْ يَسِيرُوا فِي الْأَرْضِ فَيَنْظُرُوا كَيْفَ كَانَ عَاقِبَةُ الَّذِينَ مِنْ قَبْلِهِمْ دَمَّرَ اللَّهُ عَلَيْهِمْ وَلِلْكَافِرِينَ أَمْثَالُهَا

அவர்கள் பூமியில் சுற்றித் திரிந்து பார்க்கவில்லையா? அவ்வாறாயின் இவர்களுக்கு முன்னர் (விஷமம் செய்துகொண்டு) இருந்தவர்களின் முடிவு எவ்வாறாயிற்று என்பதைக் கண்டு கொள்வார்கள். (முன்னர் விஷமம் செய்திருந்த) அவர்களை அடியோடு அழித்துவிட்டான். நிராகரிக்கும் இவர்களுக்கும் இது போன்ற தண்டணைகளே நிகழும். (அல்குர்ஆன் 47 : 10)

7). நபி ﷺ அவர்களின் தூதுத்துவத்தை உறுதிப்படுத்துவது.

அதாவது, அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறிந்திருக்க முடியாத சம்பவங்களையும் நிகழ்வுகளையும் சரித்திரங்களையும் கூறுவது ஒரு நபியால் மட்டும்தான் முடியும். அல்லாஹ்வின்

புறத்திலிருந்து வஹ்யி இல்லாமல் அவற்றை கூறுவது முற்றிலும் சாத்தியமற்ற ஒன்றாகும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

تِلْكَ مِنْ أَنْبَاءِ الْغَيْبِ نُوحِيهَا إِلَيْكَ مَا كُنْتَ تَعْلَمُهَا أَنْتَ وَلَا قَوْمُكَ مِنْ قَبْلِ هٰذَا فَاصْبِرْ إِنَّ الْعَاقِبَةَ لِلْمُتَّقِينَ

(நபியே!) இது (உமக்கு) மறைவான சரித்திரங்களில் உள்ளதாகும். வஹ்யி மூலமாகவே நாம் இதை உமக்கு அறிவிக்கிறோம். இதற்கு முன்னர் நீரோ அல்லது உமது மக்களோ இதை அறிந்திருக்கவில்லை. ஆகவே, (நபியே! நூஹைப்போல் நீரும் சிரமங்களைச்) சகித்துப் பொறுத்திருப்பீராக. நிச்சயமாக முடிவான வெற்றி இறையச்சம் உடையவர்களுக்குத்தான். (அல்குர்ஆன் 11 : 49)

மேலும் அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

أَلَمْ يَأْتِكُمْ نَبَأُ الَّذِينَ مِنْ قَبْلِكُمْ قَوْمِ نُوحٍ وَعَادٍ وَثَمُودَ وَالَّذِينَ مِنْ بَعْدِهِمْ لَا يَعْلَمُهُمْ إِلَّا اللّٰهُ

உங்களுக்கு முன்னர் சென்றுபோன நூஹ், ஆது, ஸமூது இன்னும் அவர்களுக்குப் பின்னர் வந்தவர்களுடைய சரித்திரம் உங்களுக்குக் கிடைக்கவில்லையா? அவர்க(ளின் விபரங்க)ளை அல்லாஹ்வைத் தவிர மற்றெவரும் அறிந்துகொள்ள முடியாது. (அல்குர்ஆன் 14 : 9)

## வரலாறுகள் திரும்பத் திரும்ப கூறப்படுவது

சில வரலாறுகள் ஒரு முறை மட்டும் கூறப்பட்டிருக்கும். உதாரணமாக, லுக்மான் عليه السلام அவர்களின் வரலாறு, குகைவாசிகள் வரலாறு.

சில வரலாறுகள் தேவைக்கு ஏற்ப பல முறை கூறப்பட்டிருக்கும்.

ஆனால், எல்லா இடத்திலும் ஒரே மாதிரியாக கூறப்பட்டிருக்காது. சில இடத்தில் சுருக்கமாக, சில இடத்தில் விரிவாக. சில இடத்தில் மென்மையாக, சில இடத்தில் கடுமையாக, சில இடத்தில் ஒரு வரலாற்றின் சில பகுதிகளும் வேறு ஓர் இடத்தில் மற்ற சில பகுதிகளும் கூறப்பட்டிருக்கும்.

## வரலாறுகள் திரும்பத் திரும்ப கூறப்படுவதில் உள்ள தத்துவம்

1). அந்த வரலாற்றின் முக்கியத்துவத்தை விவரிப்பது. அந்த குறிப்பிட்ட வரலாறு பலமுறை கூறப்படுவது அதற்கு அல்லாஹ் கொடுக்கின்ற தனி கவனத்தை நமக்கு உணர்த்துகின்றது.

2). அந்த வரலாற்றை பல முறை கூறி உறுதிபடுத்தி அதன் மூலம் முஃமின்களின் உள்ளத்தில் அதை ஆழமாக பதியவைப்பது.

3). வரலாறு கூறப்படுகின்ற காலத்தை கவனிப்பதோடு அந்த வரலாறு யாருக்கு முன் கூறப்படுகின்றது என்பதை கவனித்து வரலாறு பல முறை கூறப்படும். ஆகவேதான் மக்கீ சூராக்களில் கூறப்படுகின்ற வரலாறுகள் சுருக்கமாகவும் அதன் பதங்கள் கடுமையாகவும் இருக்கும். மதனீ சூராக்களில் கூறப்படுகின்ற வரலாறுகள் இதற்கு மாற்றமாக இருக்கும்.

4). இடம், பொருள், ஏவலுக்கு ஏற்ப இவ்வாறும் அவ்வாறும் பலவிதங்களில் ஒரே வரலாறு திரும்ப திரும்ப கூறப்படுவதும் அதில் சடைவு இல்லாமல் ஈர்ப்பு இருப்பதும் குர்ஆனின் இலக்கிய நயத்திற்கு மிகப்பெரிய சான்றாகும்.

5). குர்ஆனின் உண்மைத் தன்மை வெளிப்படுவது. அதாவது, வரலாறுகள் பல முறை, பல வகையில் திரும்ப திரும்பக் கூறப்பட்டாலும் அவற்றில் எவ்வித முரண்பாடும் நிகழவில்லை என்பது இவ்வேதம் அல்லாஹ்வின் புறத்திலிருந்து இறங்கியதுதான் என்பதற்கு மிகப் பெரிய சான்றாகும்.

---------------------------

பாடம் 14

# اَلْإِسْرَائِيْلِيَّاتُ

# இஸ்ராயீலி வரலாறுகள்

நமக்கு முன்னால் வேதம் கொடுக்கப்பட்டவர்கள் - யூதர்கள் மற்றும் கிறிஸ்த்துவர்கள் வாயிலாக கூறப்பட்ட முந்திய கால வரலாறுகளையும் செய்திகளையும் இஸ்ராயீலிய்யாத் - இஸ்ரவேலர்கள் கூறியவை என்று கூறப்படும்.

யூதர்கள் மூலம் கிடைக்கப்பெற்ற வரலாறுகள், கிறிஸ்த்துவர்கள் மூலம் கிடைக்கப்பெற்ற வரலாறுகளைவிட அதிகம்.

இவை மூன்று வகைப்படும்.

1). இஸ்லாம் ஏற்றுக்கொண்ட, உண்மை என்று இஸ்லாமில் அங்கீகரிக்கப்பட்ட செய்திகள் மற்றும் வரலாறுகள்.

உதாரணமாக இப்னு மஸ்வூத் ﵁ அறிவிக்கின்றார்கள்[68]

عَنْ عَبْدِ اللهِ ﵁ قَالَ جَاءَ حَبْرٌ مِنَ الأَحْبَارِ إِلَى رَسُولِ اللهِ ﷺ فَقَالَ يَا مُحَمَّدُ إِنَّا نَجِدُ أَنَّ اللهَ يَجْعَلُ السَّمَوَاتِ عَلَى إِصْبَعٍ وَالأَرَضِينَ عَلَى إِصْبَعٍ وَالشَّجَرَ عَلَى إِصْبَعٍ وَالمَاءَ وَالثَّرَى عَلَى إِصْبَعٍ وَسَائِرَ الخَلَائِقِ عَلَى إِصْبَعٍ فَيَقُولُ أَنَا المَلِكُ فَضَحِكَ النَّبِيُّ ﷺ حَتَّى بَدَتْ نَوَاجِذُهُ تَصْدِيقًا لِقَوْلِ الحَبْرِ ثُمَّ قَرَأَ رَسُولُ اللهِ ﷺ {وَمَا قَدَرُوا اللهَ

---

68. இமாம் புகாரி ﵀ ஹதீஸ் எண்: 4811, 7414, 7415, 7451, 7513

حَقَّ قَدْرِهِ وَالأَرْضُ جَمِيعًا قَبْضَتُهُ يَوْمَ القِيَامَةِ وَالسَّمَوَاتُ مَطْوِيَّاتٌ بِيَمِينِهِ سُبْحَانَهُ وَتَعَالَى عَمَّا يُشْرِكُونَ}

யூத மத அறிஞர்களில் ஒருவர் இறைத்தூதர் ﷺ அவர்களிடம் வந்து, முஹம்மதே! அல்லாஹ், வானங்களை ஒரு விரல் மீதும், பூமிகளை ஒரு விரல் மீதும், இதரப் படைப்பினங்களை ஒரு விரல் மீதும் வைத்துக் கொண்டு, நானே (சர்வ வல்லமையும் உள்ள) அரசன் என்று சொல்வான் என நாங்கள் (எங்களின் வேத நூலான தவ்ராத்தில்) கண்டோம் என்று கூறினார். இதைக் கேட்ட நபி ﷺ அவர்கள் அந்த அறிஞரின் கருத்தை உண்மையென ஆமோதிக்கும் விதத்தில், தம் கடைவாய்ப் பற்கள் தெரியச் சிரித்தார்கள். பிறகு,

وَمَا قَدَرُوا اللَّهَ حَقَّ قَدْرِهِ وَالأَرْضُ جَمِيعًا قَبْضَتُهُ يَوْمَ القِيَامَةِ وَالسَّمَوَاتُ مَطْوِيَّاتٌ بِيَمِينِهِ سُبْحَانَهُ وَتَعَالَى عَمَّا يُشْرِكُونَ

என்ற வசனத்தை ஓதினார்கள்.

பொருள்: அவர்கள் அல்லாஹ்வை எவ்வாறு மதிக்க வேண்டுமோ, அவ்வாறு மதிக்கவில்லை. மறுமை நாளில் பூமி முழுவதும் அவன் கைப் பிடியில் இருக்கும். வானங்கள் அவனுடைய வலக்கரத்தில் சுருட்டப்பட்டிருக்கும். அவர்கள் இணைவைப்பவற்றிலிருந்து அவன் தூயவன்; உயர்ந்தவன். (அல்குர்ஆன் 39 : 67)

2). இஸ்லாம் மறுத்துவிட்ட, பொய் என்று இஸ்லாமில் உறுதியாகி விட்ட செய்திகள் மற்றும் வரலாறுகள். ஆகவே, இந்த வகை செய்திகளும் வரலாறுகளும் பொய்யும் வீணானதும் ஆகும்.

உதாரணமாக ஜாபிர் ﵁ அவர்கள் அறிவிக்கின்றார்கள்:[69]

ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் ﵁ அறிவிகின்றார்கள்: ஒருவர்

69. வாயிலாக இமாம் புகாரி ﵀ எண்: 4528

தம் மனைவியிடம் பின்பக்கத்திலிருந்து உடலுறவு கொண்டால் குழந்தை மாறுகண் கொண்டதாகப் பிறக்கும் என்று யூதர்கள் சொல்லி வந்தார்கள். எனவே,

نِسَاؤُكُمْ حَرْثٌ لَكُمْ فَأْتُوا حَرْثَكُمْ أَنَّى شِئْتُمْ

பொருள்: உங்கள் பெண்கள் உங்களுக்குரிய விளை நிலம் ஆவர். எனவே, உங்கள் விளை நிலத்திற்கு நீங்கள் விரும்பியபடி செல்லுங்கள் எனும் (அல்குர்ஆன் 02 : 223 வது) வசனம் அருளப்பட்டது.

3). இஸ்லாம் மறுக்கவும் செய்யாத ஏற்கவும் செய்யாத செய்திகள், வரலாறுகள். இத்தகைய செய்திகள் விஷயத்தில் நாம் நிதானிக்க வேண்டும். அவசரப்பட்டு அவை உண்மை என்றோ அல்லது பொய் என்றோ நாம் முடிவு செய்துவிடக்கூடாது.

அபூ ஹுரைரா ﵁ அறிவிகின்றார்கள்:[70]

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ كَانَ أَهْلُ الكِتَابِ يَقْرَءُونَ التَّوْرَاةَ بِالعِبْرَانِيَّةِ وَيُفَسِّرُونَهَا بِالعَرَبِيَّةِ لِأَهْلِ الإِسْلاَمِ فَقَالَ رَسُولُ اللهِ ﷺ لا تُصَدِّقُوا أَهْلَ الكِتَابِ وَلا تُكَذِّبُوهُمْ وَقُولُوا {آمَنَّا بِاللهِ وَمَا أُنْزِلَ إِلَيْنَا}**

வேதக்காரர்(களான யூதர்)கள், தவ்ராத்தை ஹீப்ரு மொழியில் ஓதி, அதை இஸ்லாமியர்களுக்கு அரபு மொழியில் விளக்கம் கொடுத்து வந்தார்கள். அப்போது இறைத்தூதர் ﷺ அவர்கள், வேதக்காரர்களை (அவர்கள் உங்களிடம சொல்வதில்) நம்பவும் வேண்டாம்; பொய்ப்பிக்கவும் வேண்டாம். (மாறாக, முஸ்லிம்களே!) நீங்கள் சொல்லுங்கள்: நாங்கள் அல்லாஹ்வையும் எங்களுக்கு இறக்கப்பட்டதையும் உங்களுக்கு இறக்கப்பட்டதையும் நம்பிக்கை கொண்டோம் என்று கூறினார்கள்.

70. வாயிலாக இமாம் புகாரி எண்: 4485

இந்த வகை செய்திகளை அறிவிப்பதில் தவறான கருத்து ஏதும் ஏற்பட்டுவிடும் என்ற பயம் இல்லை என்றால் அவற்றை எடுத்துக் கூறுவது கூடும்.

அப்துல்லாஹ் இப்னு அம்ர் ﵁ அறிவிக்கின்றார்கள்:[71]

عَنْ عَبْدِ اللهِ بْنِ عَمْرٍو أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ بَلِّغُوا عَنِّي وَلَوْ آيَةً وَحَدِّثُوا عَنْ بَنِي إِسْرَائِيلَ وَلاَ حَرَجَ وَمَنْ كَذَبَ عَلَيَّ مُتَعَمِّدًا فَلْيَتَبَوَّأْ مَقْعَدَهُ مِنَ النَّارِ

இறைத்தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்: என்னிடமிருந்து ஒரேயொரு (சிறு) வசனம் கிடைத்தாலும் சரி, அதை(ப் பிறருக்கு) எடுத்துரையுங்கள். இஸ்ரவேலர்களின் வாயிலாகக் கிடைத்த செய்திகளையும் அறிவியுங்கள். அதனால் குற்றமில்லை. எவன் என் மீது (நான் சொன்னதாக) வேண்டுமென்றே பொய்யுரைக்கிறானோ அவன் தன் இருப்பிடத்தை நரகத்தில் அமைத்துக் கொள்ளட்டும்.

பொதுவாக இஸ்ரவேலர்கள் மூலம் அறிவிக்கப்படுகின்ற செய்திகள் மார்க்க அடிப்படையில் நமக்கு பெரும் பலன்கள் உள்ளவையாக இருக்காது. ஒரு சம்பவம் அல்லது வரலாறு குறித்து மார்க்க விஷயங்களில் நமக்கு தேவை இல்லாத ஒன்றாகவே அவர்களின் அறிவிப்புகள் இருக்கும். உதாரணமாக குகை வாசிகளின் நாயின் நிறம் என்ன, குகை வாசிகளின் பெயர்கள் என்ன, இப்படியாக பலவற்றை கூறலாம்.

நமது மார்க்க காரியங்களைப் பற்றி அவர்களிடம் நாம் கேட்பது அறவே கூடாது, ஹராம் ஆகும்.

ஜாபிர் ﵁ அவர்கள் அறிவிக்கிறார்கள்:[72]

71. இமாம் புகாரி ﵀ எண்: 3461

72. இமாம் அஹ்மது ﵀ பதிவு செய்கிறார்கள். எண்: 14631. இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான முஜாலித் இப்னு ஸயீத் என்பவர் பலவீனர் என்பதால் இந்த ஹதீஸ் பலவீனமானது என கூறப்படுகிறது.

**عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللهِ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَا تَسْأَلُوا أَهْلَ الْكِتَابِ عَنْ شَيْءٍ فَإِنَّهُمْ لَنْ يَهْدُوكُمْ وَقَدْ ضَلُّوا فَإِنَّكُمْ إِمَّا أَنْ تُصَدِّقُوا بِبَاطِلٍ أَوْ تُكَذِّبُوا بِحَقٍّ فَإِنَّهُ لَوْ كَانَ مُوسَى حَيًّا بَيْنَ أَظْهُرِكُمْ مَا حَلَّ لَهُ إِلَّا أَنْ يَتَّبِعَنِي**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறுகிறார்கள்: வேதக்காரர்களிடம் நீங்கள் எதையும் கேட்காதீர்கள். அவர்களே வழிகெட்டு இருக்கும்போது நிச்சயமாக அவர்கள் உங்களுக்கு அறவே நேர்வழி காட்ட மாட்டார்கள். (அது முடியாது.) அவர்களிடம் நீங்கள் கேட்டால், ஒன்று ஒரு பொய்யை உண்மை என்று நம்பிவிடுவீர்கள். அல்லது ஓர் உண்மையை பொய்யென்று மறுத்துவிடுவீர்கள். நிச்சயமாக மூஸா உங்களுக்கு மத்தியில் இப்போது உயிரோடு இருந்திருந்தால் அவரும் என்னைப் பின்பற்றுவதைத் தவிர அவருக்கு வேறு அனுமதி இல்லை.

அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ﵄ அவர்கள் அறிவிக்கிறார்கள்:[73]

**عَنْ عَبْدِ اللهِ بْنَ عَبَّاسٍ ﵄ قَالَ يَا مَعْشَرَ الْمُسْلِمِينَ كَيْفَ تَسْأَلُونَ أَهْلَ الكِتَابِ عَنْ شَيْءٍ وَكِتَابُكُمُ الَّذِي أَنْزَلَ اللهُ عَلَى نَبِيِّكُمْ ﷺ أَحْدَثُ الأَخْبَارِ بِاللهِ مَحْضًا لَمْ يُشَبْ وَقَدْ حَدَّثَكُمُ اللهُ أَنَّ أَهْلَ الكِتَابِ قَدْ بَدَّلُوا مِنْ كُتُبِ اللهِ وَغَيَّرُوا فَكَتَبُوا بِأَيْدِيهِمُ الكُتُبَ قَالُوا هُوَ مِنْ عِنْدِ اللهِ لِيَشْتَرُوا بِذَلِكَ ثَمَنًا قَلِيلًا أَوَلاَ يَنْهَاكُمْ مَا جَاءَكُمْ مِنَ العِلْمِ عَنْ مَسْأَلَتِهِمْ فَلاَ وَاللهِ مَا رَأَيْنَا رَجُلًا مِنْهُمْ يَسْأَلُكُمْ عَنِ الَّذِي أُنْزِلَ عَلَيْكُمْ**

73. வாயிலாக இமாம் புகாரி பதிவு செய்கிறார்கள் எண் :7523

முஸ்லிம் மக்களே! உங்கள் நபி ﷺ அவர்களுக்கு அல்லாஹ் அருளியுள்ள வேதம் இறைச் செய்திகளிலேயே புதியதும், கலப்படமில்லாத தூய்மையானதுமாக இருக்கின்ற நிலையில் வேதக்காரர்களிடம் நீங்கள் மார்க்க விஷயங்களில் ஒன்றைப் பற்றி எப்படி கேட்கிறீர்கள்? வேதக்காரர்களோ இறைவேதங்களில் வசனங்களையும் வார்த்தைகளையும் மாற்றி, திரித்து, தம் கரங்களால் எழுதிக்கொண்ட ஏடுகளை, அவை அல்லாஹ்விடமிருந்து வந்தவை என கூறுகின்றனர். அதன் மூலம் அற்ப விலையைப் பெறுகிறார்கள் என்று அல்லாஹ் உங்களுக்கு அறிவித்துள்ளான். உங்களுக்குக் கிடைத்துள்ள கல்வி ஞானம், வேதக்காரர்களிடம் நீங்கள் கேட்டுத் தெரிவதிலிருந்து உங்களைத் தடுக்கவில்லையா? (அதே நேரத்தில்) அல்லாஹ்வின் மீதாணையாக! அந்த வேதக்காரர்களில் ஒருவர் கூட உங்களுக்கு அருளப்பெற்றுள்ள (வேதத்)தைப் பற்றிக் கேட்பதை நாம் கண்டதில்லை.

## இஸ்ரவேலர்களின் அறிவிப்பை எடுத்துக்கொள்வதில் அறிஞர்களின் நிலைப்பாடுகள்

பொதுவாக அறிஞர்களும் குறிப்பாக குர்ஆன் விரிவுரை கூறுகின்ற முஃபஸ்ஸிர்களும் இஸ்ரவேலர்களின் அறிவிப்பை எடுத்துக் கொள்வதில் நான்கு விதமான நிலைப்பாடுகளில் இருக்கின்றனர்.

1). அறிஞர்களில் ஒரு கூட்டம் அறிவிப்பாளர்களின் தொடரோடு இந்த வகை செய்திகளை அதிகமாக கூறுவார்கள். இன்னும், அவர்களின் கருத்தும் நிலைப்பாடும் என்னவென்றால், சனது -அறிவிப்பாளரின் தொடரை கூறிவிடுவதால் தங்கள் பொறுப்பு நீங்கிவிடுகின்றது என்பதாகும். இவர்களில் இமாம் இப்னு ஜரீர் தபரி[74] அவர்களைப் போன்ற அறிஞர்கள் அடங்குவார்கள்.

74. இவர் பெயர் முஹம்மது இப்னு ஜரீர் இப்னு யஸீது இப்னு கஸீர் இப்னு காலிப். பிறப்பு ஹிஜ்ரி 224, இறப்பு ஹிஜ்ரி 310. இவரை இமாமுல் முஃபஸ்ஸிரீன் என்று அழைக்கப்படும். வரலாறு, ஃபிக்ஹு, தஃப்ஸீர் கலையின் பெறும் பேரளிஞராகத் திகழ்ந்தார். துருக்மானிஸ்தானில் ஆமல் நகரத்தில் பிறந்த இவர் பஃக்தாதில் இறப்பெய்தினார். இவர் ஒரு மாபெரும் கல்விக் கடலாகத் திகழ்ந்தவர். அல்லாஹ்

2). சில அறிஞர்கள் அறிவிப்பாளர் தொடர் இல்லாமல் இந்த வகை செய்திகளை கூறுவார்கள். இந்தவகையில் இரவில் சுள்ளி பொறுக்குபவரைப் போல் எல்லா செய்திகளையும் எடுத்து கூறிவிடுவார்கள். இவர்களில் நாம் இமாம் பகவியை[75] குறிப்பிடலாம். ஷைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா அவர்கள் இமாம் பகவியின் தஃப்ஸீரைப் பற்றி குறிப்பிடும்போது அது இமாம் சஅலபி[76] எழுதிய தஃப்ஸீரின் சுருக்கமாகும். ஆனால், பகவி அவர்கள் தங்களது நூலில் பொய்யான ஹதீஸ்களையும் மார்க்கத்தில் இல்லாத கருத்துகளையும் கூறாமல் அதை பாதுகாத்தார் என்று கூறுகிறார்கள். ஆனால், இமாம் சஅலபி அவர்களோ அவர் இரவில் சுள்ளி பொறுக்குபவர். விரிவுரை நூல்களில் கிடைக்கின்ற சரியான, பலவீனமான, பொய்யான எல்லா செய்திகளையும் பதிவு செய்துவிடுவார்.

3). சிலர் வரலாறுகளை கூறி, அதில் உள்ள தவறுகளையும் சுட்டிக்காட்டுவார்கள். அவற்றின் மீதுள்ள விமர்சனங்களையும் முன் வைப்பார்கள். இவர்களில் இமாம் இப்னு கசீர்[77] போன்றோர் அடங்குவார்கள்.

4). சிலர் அவற்றை கூறுவதை முற்றிலும் புறக்கணிப்பார்கள். அத்தகைய செய்திகள் எதையும் தமது தஃப்சீரில் கொண்டு வரமாட்டார்கள். அவர்களில் முஹம்மது ரஷீது ரிழா[78] போன்றோர் அடங்குவார்கள்.

------------------------

அவர்களை பொருந்திக் கொண்டு சொர்க்க இல்லங்களில் அவர்களை தங்க வைப்பானாக!

75. இவர் பெயர் அல்ஹுஸைன் இப்னு மஸ்ஊது முஹம்மது. பிறப்பு ஹிஜ்ரி 436, இறப்பு ஹிஜ்ரி 516. குர்ஆன் மற்றும் ஹதீஸ் கலையின் அறிஞராகத் திகழ்ந்தார்.

76. இவரது பெயர் அஹ்மது இப்னு முஹம்மது இப்னு இப்றாஹீம். குர்ஆன் மற்றும் வரலாற்றுக் கலையின் அறிஞராகத் திகழ்ந்தார். இவர் ஹிஜ்ரி 427 இறப்பெய்தினார்.

77. இவரது பெயர் இஸ்மாயீல் இப்னு உமர் இப்னு கஸீர். ஹிஜ்ரி 701ல் பிறந்து ஹிஜ்ரி 774ல் இறப்பெற்தினார்கள். குர்ஆன், ஹதீஸ், வரலாறு மற்றும் ஃபிக்ஹு கலையின் அறிஞராகத் திகழ்ந்தார்.

78. இவர் கி.பி. 1865ல் பிறந்து கி.பி. 1935ல் இறப்பெய்தினார். குர்ஆன் விரிவுரை அறிஞராகத் திகழ்ந்தார்.

பாடம் 15

# اَلضَّمِيْرُ

# பிரதிப் பெயர்ச்சொல்

அரபி மொழியில் ழமீர் என்றால் மெலிந்தது அல்லது மறைவானது என்று பொருளாகும்.

இலக்கணத்தில் ழமீர் என்றால் வெளிப்படையான ஒன்றை சுட்டிக் காட்டுவதற்குள்ள ஒரு பதமாகும். அல்லது, படர்க்கை அல்லது முன்னிலையில் இருப்பவரை அவருடைய பெயர் அல்லாத வேறு இரு சொல்லால் சுட்டிக்காட்டுவதற்கு என்று வைக்கப்பட்ட பதமாகும்.

இந்த ழமீர்கள் பலவிதம் உள்ளன.

**1). ضَمِيْرُ الْـمُتَكَلِّمْ ழமீருல் முதகல்லிம்:** தன்னிலையை சுட்டிக் காட்டுவதற்காக வைக்கப்பட்ட பதம்.

உதாரணமாக

அல்லாஹுு தஆலா கூறுகின்றான்:

وَأُفَوِّضُ أَمْرِي إِلَى اللّٰهِ

எனது எல்லா காரியங்களையும் அல்லாஹ்விடமே ஒப்படைக்கிறேன் (அல்குர்ஆன் 40 : 44)

**2). ضَمِيْرُ الْـمُخَاطَبْ ழமீருல் முகாதப்:** முன்னிலையில் உள்ளவரை குறிப்பதற்காக வைக்கப்பட்ட பதம்.

உதாரணமாக

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

صِرَاطَ الَّذِينَ أَنْعَمْتَ عَلَيْهِمْ

(அவ்வழி) எவர்களுக்கு நீ அருள் புரிந்தாயோ அவர்கள் (சென்ற) வழி. (அல்குர்ஆன் 1 : 6)

மேற்கூறப்பட்ட இரண்டு வசனங்களிலும் நான் என்று சொல்லும் போதும் நீ என்று சொல்லும்போதும் யாரைப் பற்றி அவை சொல்லப்படுகின்றது என்று குறிப்பதற்கு தனியாக ஏதும் அவசியம் இல்லை. ஏனெனில், நான் என்று சொல்லும்போது பேசுபவர் தன்னைக் குறித்து பேசுகிறார். நீ என்று சொல்லும்போது, பேசுபவர் தனக்கு முன்னால் உள்ளவரை நோக்கி பேசுகிறார் என்பதை விளங்க முடியும்.

**3). ضَمِيْرُ الْغَائِبْ ழமீருல் காயிப்:** பின்னால் உள்ளவரை அல்லது படர்க்கையில் உள்ளவரை குறிப்பதற்காக வைக்கப்பட்ட பதம்.

இந்த வகை ழமீரை பயன்படுத்தும்போது **مَرْجِعُ الضَّمِير** மர்ஜிவுழ் ழமீர் அது யாரை குறித்து பேசுகிறது என்பதை நிர்ணயிக்க வேண்டும். ஆகவே, **هُوَ** ஹுவ, **هي** ஹிய, **هما** ஹுமா, **هم** ஹும், **هن** ஹுன்ன (அவன், அவள் அவர்கள் இருவர், அவர்கள் பலர் அல்லது அது, அவை) என்று கூறும்போது அங்கே அவை குறிக்ககூடிய ஒன்று இருக்க வேண்டும். இதை மர்ஜிவுழ் ழமீர் என்று கூறப்படும். மேலும், இந்தவகை ழமீரை பயன்படுத்துவதற்கு முன்பாக அந்த மர்ஜிஃ வாசகத்தில் **لفظ** லஃப்ள்- சொல்லாலும் **رتبة** ருத்பா -தரத்தாலும் முன்கூட்டி கூறப்பட்டிருக்க வேண்டும். ழமீருடைய பதமும் அது குறிக்கின்ற வஸ்த்துவும் அர்த்தத்திலும் வார்த்தையிலும் ஒத்து இருக்க வேண்டும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَنَادَى نُوحٌ رَبَّهُ

நூஹ் தனது ரப்பை சப்தமாக அழைத்தார். (அல்குர்ஆன் 11 : 45)

அல்லது முன் கூறப்பட்டுள்ள வார்த்தையை வைத்து மர்ஜிஃ புரியும்படியாக இருக்க வேண்டும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

اعْدِلُوا هُوَ أَقْرَبُ لِلتَّقْوَى

நீதி செலுத்துங்கள்! அதுதான் தக்வாவிற்கு மிக நெருக்கமானது. (அல்குர்ஆன் 5 : 8)

இந்த வசனத்தில் ஹுவ -அது என்று சொல்லப்படும்போது அது எது என்பது வாசகத்தில் இல்லை. என்றாலும் அதற்கு முன்னர் கூறப்பட்டுள்ள اعْدِلُوا இஃதிலூ -நீதி செலுத்துங்கள் என்ற வார்த்தையை வைத்து அது என்பது நீதத்தை குறிக்கிறது என்று புரிய முடிகிறது.

**மர்ஜிஃ என்பது சொல்லாலும் தரத்தாலும் ழமீரை முந்தி இருக்க வேண்டும்.**

உதாரணமாக

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَنَادَى نُوحٌ رَبَّهُ

இங்கு நூஹ் என்பது ஹு என்ற ழமீரின் மர்ஜிஃ ஆகும். இன்னும், அரபி இலக்கணத்தின் சட்டப்படி நூஹ் என்பது ஃபாயில் ஆகும். ரப்பஹு என்பது **مفعول** மஃப்ஊல் ஆகும். **فاعل** ஃபாயில், மஃப்ஊலை விட முந்தி இருக்க வேண்டும். இதைத்தான் **رتبة** ருத்பா -தரத்தால் முந்தி இருப்பது என்று கூறப்படும். இந்த வசனத்தில் மர்ஜிஃ சொல்லாலும் தரத்தாலும் முந்தி இருக்கின்றது.

**சில சமயம் மார்ஜிஃ சொல்லால் மட்டும் முந்தி இருக்கும். ருத்பாவால் முந்தியதாக இருக்காது.**

உதாரணமாக

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَإِذِ ابْتَلَى إِبْرَاهِيمَ رَبُّهُ

இப்ராஹீமை அவருடைய ரப்பு சோதித்த சமயத்தை நினைவு கூருங்கள்! (அல்குர்ஆன் 2 : 124)

இங்கு ஹு உடைய மார்ஜிஃ இப்ராஹீம் என்பது சொல்லால் முந்தி இருந்தாலும் அது ருத்பாவால் பிந்தி இருக்க வேண்டிய ஒன்றாகும். ஏனெனில், அது வாசகத்தில் மஃப்வூலாக வந்துள்ளது. மஃப்வூல், ஃபாயிலுக்கு பிந்தி இருக்க வேண்டும் என்பது இலக்கணத்தின் நியதி ஆகும்.

**சில சமயம் மார்ஜிஃ ருத்பாவால் முந்தி இருக்கும். சொல்லால் முந்தி இருக்காது.**

உதாரணமாக

فَأَوْجَسَ فِي نَفْسِهِ خِيفَةً مُوسَى

மூஸா தனது உள்ளத்தில் பயத்தை உணர்ந்தார்.
(அல்குர்ஆன் 20 : 67)

இந்த வசனத்தில் நஃப்ஸிஹி என்பதில் உள்ள ழமீருடைய மார்ஜிஃ மூஸா என்பதாகும். அது சொல்லால் பிந்தி இருக்கின்றது. ஆனால், அது ஃபாயிலாக இருப்பதால் ருத்பாவில் முந்தி இருப்பதாக எடுத்துக் கொள்ளப்படும்.

**சில சமயம் மர்ஜிஃ வாக்கியத்தில் சொல்லப்பட்டிருக்காது. ஆனால், வாக்கியத் தொடரிலிருந்து மர்ஜிஃ புரியப்பட்டதாக இருக்கும்.**

உதாரணமாக

وَلِأَبَوَيْهِ لِكُلِّ وَاحِدٍ مِنْهُمَا السُّدُسُ مِمَّا تَرَكَ إِنْ كَانَ لَهُ وَلَدٌ

அவருடைய பெற்றோருக்கு- அவ்விருவரில் ஒவ்வொருவருக்கும் அவர் விட்டுசென்றதில் ஆறில் ஒன்று கிடைக்கும் அவருக்கு பிள்ளை இருந்தால். (அல்குர்ஆன் 4 : 11)

இந்த வசனத்தில் வலிஅபவைஹி என்பதில் உள்ள ழமீருடைய மர்ஜிஃ வெளிப்படையாக வாக்கியத்தில் கூறப்பட்டிருக்கவில்லை என்றாலும் வாக்கியத்தின் தொடரில் உள்ள தரக என்ற வார்த்தையிலிருந்து அவருடைய என்பதன் பொருள் -இறந்தவருடைய என்று புரிய முடிகிறது.

**சில சமயம் ழமீருக்கும் மர்ஜியிக்கும் ஒற்றுமை இருக்காது.**

உதாரணமாக

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَلَقَدْ خَلَقْنَا الْإِنْسَانَ مِنْ سُلَالَةٍ مِنْ طِينٍ○ ثُمَّ جَعَلْنَاهُ نُطْفَةً فِي قَرَارٍ مَكِينٍ

நிச்சயமாக (ஆரம்பத்தில் முதல்) மனிதரை களிமண்ணின் மூலச் சத்திலிருந்து படைத்தோம். பின்னர், அதனை நாம் இந்திரியமாக்கி ஒரு பத்திரமான இடத்தில் வைத்தோம். (அல்குர்ஆன் 23 : 12, 13)

இங்கு ஜஅல்னாஹு என்பதில் உள்ள ஹு என்பதுடைய மர்ஜிஃ இன்சான் ஆகும். ஆனால், உண்மையில் வைக்கப்படக்கூடியது இந்திரியமாகும். மனிதனல்ல.

மர்ஜிஃ ஆக இருப்பதை ஒருமையிலும் பன்மையிலும் பொருள் கொள்ளும்படி இருந்தால் அதற்குரிய ழமீரை ஒருமையாகவும் வைக்கலாம். அல்லது பன்மையாகவும் வைக்கலாம்.

உதாரணமாக,

அல்லாஹு தஆலா கூறுகின்றான்

**وَمَنْ يُؤْمِنْ بِاللّٰهِ وَيَعْمَلْ صَالِحًا يُدْخِلْهُ جَنَّاتٍ تَجْرِي مِنْ تَحْتِهَا الْأَنْهَارُ خَالِدِينَ فِيهَا أَبَدًا قَدْ أَحْسَنَ اللّٰهُ لَهُ رِزْقًا**

எவர் (மெய்யாகவே) அல்லாஹ்வை நம்பிக்கை கொண்டு நற்செயல்கள் செய்கின்றாரோ, அவரை சுவனபதிகளில் புகச் செய்வான். அதில் தொடர்ந்து நீரருவிகள் ஓடிக்கொண்டிருக்கும். என்றென்றும் அவர்கள் அதில் தங்கிவிடுவார்கள். நிச்சயமாக அல்லாஹ் அவருக்கு அழகான அருளே புரிவான்.

(அல்குர்ஆன் 65 : 11)

இந்த வசனத்தில் **يُدْخِلْهُ** யுத்கில்ஹு என்பதில் ஹு என்று ழமீர் ஒருமையாக உள்ளது. இதை பன்மையாக ஹும் என்று சொல்லப்பட்டிருந்தால் அதுவும் கூடும்.

வாசகத்தின் முதல் பகுதியில் ஒருமையாக கூறப்பட்டு, பிறகு பொருளை கவனித்து ழமீரை பன்மையாக கூறுவதற்கு உதாரணம்

**بَلَى مَنْ أَسْلَمَ وَجْهَهُ لِلّٰهِ وَهُوَ مُحْسِنٌ فَلَهُ أَجْرُهُ عِنْدَ رَبِّهِ وَلَا خَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُونَ**

(உண்மை) அவ்வாறல்ல! எவர் (அல்லாஹ்வுக்காக) நன்மை செய்து தன்னை (முற்றிலும்) அல்லாஹ்வுக்கு அர்ப்பணம் செய்து விடுகிறாரோ அவருக்கே அவர் செய்யும் நன்மையின் கூலி

அவருடைய இறைவனிடம் உண்டு. மேலும், இவர்களுக்கு எத்தகைய பயமுமில்லை; இவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்.
(அல்குர்ஆன் 2 : 112)

இந்த வசனத்தின் ஆரம்பத்தில் وَجْهَهُ வஜ்ஹஹு என்பதில் ஹு என்று ழமீர் ஒருமையில் உள்ளது. வசனத்தின் இறுதி பகுதியில் عَلَيْهِمْ அலைஹிம் என்று பன்மையின் ழமீராக கூறப்பட்டுள்ளது. இவ்வாறு குர்ஆனின் பல இடங்களில் கூறப்பட்டிருப்பதை பார்க்கலாம்.

பல ழமீர்கள் வரும்போது அவற்றின் மர்ஜிஃ ஒன்றாக மட்டும் இருந்தால் அந்த ழமீர்கள் அனைத்தும் ஒரே விதமாக இருக்க வேண்டும்.

உதாரணமாக

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

عَلَّمَهُ شَدِيدُ الْقُوَى ○ ذُو مِرَّةٍ فَاسْتَوَى ○ وَهُوَ بِالْأُفُقِ الْأَعْلَى ○ ثُمَّ دَنَا فَتَدَلَّى ○

(ஜிப்ரயீல் என்னும்) வலுவான ஆற்றலுடையவர் இதை அவருக்குக் கற்றுக் கொடுக்கிறார். அவர் மிக்க ஆத்ம சக்தியுடையவர். அவர் (தன் இயற்கை ரூபத்தில் நபி முன்) தோன்றினார். அவர் உயர்ந்த (வானத்தின்) கடைக்கோடியில் இருந்தார். இன்னும் நெருங்கினார், (அவர் முன்) இறங்கினார். (அல்குர்ஆன் 53 : 5-8)

மேற்கூறப்பட்ட வசனங்களில் கூறப்பட்ட فَاسْتَوَى ஃபஸ்தவா, دَنَا தனா, فَتَدَلَّى ஃபததல்லா ஆகிய வினை சொற்களில் உள்ள ழமீர் அனைத்தும் شَدِيدُ الْقُوَى ஷதீதுல் குவாவை நோக்கி மீள்கிறது. ஆகவே, அந்த வினை சொற்கள் எல்லாம் ஒருமையாகத்தான் இருக்க வேண்டும். காரணம் ஷதீதுல் குவா என்பது ஒருமையாக

இருக்கின்றது. இங்கு ஷதீதுல் குவா என்று ஜிப்ரீல் அலைஹிஸ் ஸலாம் அவர்களை குறிப்பிடப்படுகின்றது.

ழமீர்களுக்கு மர்ஜிஃஐ நிர்ணயம் செய்யும்போது அதற்கு பொருத்தமாக மிக அருகில் உள்ளதைத்தான் நிர்ணயம் செய்ய வேண்டும். ஆனால், **مُضَاف** முழாஃப் மற்றும் **مُضَاف اليه** முழாஃப் இலைஹியை அடுத்து ழமீர் வந்தால் ழமீருக்கு நெருக்கமாக முழாஃப் இலைஹி இருந்தாலும் முழாஃபைத்தான் மர்ஜிஃ ஆக நிர்ணயிக்கப்படும். ஏனெனில், பேச்சில் முழாஃப்தான் நோக்கம் ஆகும்.

உதாரணமாக:

**وَآتَيْنَا مُوسَى الْكِتَابَ وَجَعَلْنَاهُ هُدًى لِبَنِي إِسْرَائِيلَ**

நாம் மூஸாவுக்கு வேதத்தைக் கொடுத்தோம். இஸ்ராயீலின் சந்ததிகளுக்கு அதை ஒரு வழிகாட்டியாக அமைத்தோம்
(அல்குர்ஆன் 17 : 2)

இந்த வசனத்தில் **وَجَعَلْنَاهُ** வஜஅல்னாஹு என்பதில் உள்ள ஹு என்ற ழமீருடைய மர்ஜிஃ அதற்கு மிக அருகில் உள்ள அல்கிதாப் ஆகும்.

**وَإِنْ تَعُدُّوا نِعْمَتَ اللّٰهِ لَا تُحْصُوهَا**

ஆகவே, அல்லாஹ்வுடைய அருட் கொடைகளை நீங்கள் கணக்கிடும் சமயத்தில் அதை உங்களால் எண்ண முடியாது!
(அல்குர்ஆன் 14 : 34)

இந்த வசனத்தில் **لَا تُحْصُوهَا** லா துஹ்ஸூஹா என்பதில் ஹா என்ற ழமீருடைய மர்ஜிஃ, நிஃமத் என்ற பதம் ஆகும். அல்லாஹ் அல்ல. காரணம் அல்லாஹ் என்ற பதம் வசனத்தில் முழாஃப்

இலைஹி ஆக வந்துள்ளது. வசனத்தில் முழாஃபை பற்றித்தான் பேசப்படுவதால் அதைத்தான் மர்ஜிஃ ஆக ஆக்கப்படும்.

மேற்கூறப்பட்ட சட்டவிதிகளுக்கு மாற்றமாகவும் சில நேரங்களில் மர்ஜிஃ வரும் அதற்குரிய ஆதாரம் அங்கு இருந்தால்.

## اَلْإِظْهَارُ فِي مَوْضِعِ الْإِضْمَارِ

## ழமீராக கூறவேண்டிய இடத்தில் வெளிப்படுத்தி கூறுவது

ழமீராக கூறப்பட வேண்டிய இடத்தில் ழமீராகத்தான் கூறவேண்டும். அதுதான் தெளிவான பொருளைத்தரும். அப்போதுதான் வாசகமும் சுருக்கமாக இருக்கும்.

உதாரணமாக

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

إِنَّ الْمُسْلِمِينَ وَالْمُسْلِمَاتِ وَالْمُؤْمِنِينَ وَالْمُؤْمِنَاتِ وَالْقَانِتِينَ وَالْقَانِتَاتِ وَالصَّادِقِينَ وَالصَّادِقَاتِ وَالصَّابِرِينَ وَالصَّابِرَاتِ وَالْخَاشِعِينَ وَالْخَاشِعَاتِ وَالْمُتَصَدِّقِينَ وَالْمُتَصَدِّقَاتِ وَالصَّائِمِينَ وَالصَّائِمَاتِ وَالْحَافِظِينَ فُرُوجَهُمْ وَالْحَافِظَاتِ وَالذَّاكِرِينَ اللَّهَ كَثِيرًا وَالذَّاكِرَاتِ أَعَدَّ اللَّهُ لَهُمْ مَغْفِرَةً وَأَجْرًا عَظِيمًا

நிச்சயமாக முஸ்லிம் ஆண்களும் பெண்களும், நம்பிக்கையுடைய ஆண்களும் பெண்களும், (இறைவனுக்கும் அவனுடைய தூதருக்கும்) கீழ்ப்படியும் ஆண்களும் பெண்களும், உண்மையே கூறும் ஆண்களும் பெண்களும், பொறுமையுள்ள ஆண்களும் பெண்களும், (அல்லாஹ்வுக்குப்) பயந்து நடக்கும் ஆண்களும் பெண்களும், தானம் செய்யும் ஆண்களும் பெண்களும், நோன்பு

நோற்கும் ஆண்களும் பெண்களும், கற்புள்ள ஆண்களும் பெண்களும், அல்லாஹ்வுடைய திருப்பெயரை அதிகமாக நினைவுகூரும் ஆண்களும் பெண்களும் (ஆகிய) இவர்களுக்கு அல்லாஹ் மன்னிப்பையும் மகத்தான கூலியையும் தயார்படுத்தி வைத்திருக்கிறான். (அல்குர்ஆன் 33 : 35)

இந்த வசனத்தில் لَهُمْ லஹும் என்பதில் உள்ள هُمْ ஹும் என்ற ழமீர் அதற்கு முன் கூறப்பட்டுள்ள இருபது சொற்களுக்கு பதிலாக வந்துள்ளது. இந்த வசனத்தில் ழமீராக கூறப்படவில்லை என்றால் மேற்கூறப்பட்ட பெயர் சொற்கள் அனைத்தையும் மீண்டும் கூறவேண்டியதாகி விடும்.

சில நேரங்களில், ழமீருடைய இடத்தில் இஸ்ம் ளாஹிர் -வெளிப்படையான பெயர் சொல்லையே உச்சரிக்கப்படும். இதை அல்இள்ஹார் ஃபீ மவ்ழியில் இழ்மார் என்று கூறப்படும். இந்த அமைப்பில் கூறும்போது பல பிரயோசனங்கள் இருக்கின்றன. அவற்றை வாசகத்தின் தொடரை கவனித்து நாம் புரிந்து கொள்ளலாம்.

அந்த பிரயோசனங்களில்

1). ழமீர் உடைய மர்ஜிஃ ஆக எது இருக்குமோ அதற்கு சொல்லப்பட வேண்டிய மார்க்க சட்டத்தை (-மார்க்க நிலைப்பாட்டை) இந்த இஸ்ம் ளாஹிரை வைத்து முடிவு செய்யப்படும்.

2). அந்த சட்டத்திற்கு என்ன காரணம் என்பதை வெளிப்படுத்தி விவரிப்பது.

3). இஸ்ம் ளாஹிர் சொல்லக்கூடிய கருத்தை அதற்குமுன் கூறப்பட்ட தன்மையில் உள்ள எல்லோருக்கும் பொதுவாக்குவது.

உதாரணமாக

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

مَنْ كَانَ عَدُوًّا لِلَّهِ وَمَلَائِكَتِهِ وَرُسُلِهِ وَجِبْرِيلَ وَمِيكَالَ فَإِنَّ اللَّهَ عَدُوٌّ لِلْكَافِرِينَ

(உங்களில்) எவரேனும் அல்லாஹ்வுக்கும், அவனுடைய வானவர்களுக்கும், அவனுடைய தூதர்களுக்கும், ஜிப்ரீலுக்கும், மீக்காயீலுக்கும் எதிரியாகி (அவர்களை நிராகரித்து) விட்டால் (அந்)நிராகரிப்பவர்களுக்கு நிச்சயமாக அல்லாஹ்வும் எதிரி ஆவான். (அல்குர்ஆன் 2 : 98)

இந்த வசனத்தில் அதுவ்வுன் லஹு என்று சொல்லப்பட வேண்டிய இடத்தில் அதுவ்வுல் லில் காஃபிரீன் என்று சொல்லப்பட்டுள்ளது. இவ்வாறு சொல்லப்பட்டதால் ஏற்படுகின்ற பலன்கள்:

1). அல்லாஹ்விற்கும் மலக்குகளுக்கும் ஜிப்ரீலுக்கும் எதிரியாக இருப்பவன் காஃபிர் - நிராகரிப்பாளனாக ஆகிவிடுவான் என்ற சட்டம் இதன் மூலம் தெளிவுப்படுத்தப்படுகின்றது.

2). வானவர்களை எதிர்ப்பவர்கள், அவர்களை நேசிக்காதவர்கள் காஃபிர் ஆகிவிட்ட காரணத்தால் அல்லாஹ்வும் அவர்களுக்கு எதிரியாக இருப்பான் என்பதும் இதன் மூலம் தெளிவாகின்றது.

3). காஃபிர்கள் எல்லோருக்கும் அல்லாஹ் எதிரியாக இருக்கின்றான் என்பதும் இதன் மூலம் தெளிவாகின்றது.

மற்றுமொரு உதாரணம்

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَالَّذِينَ يُمَسِّكُونَ بِالْكِتَابِ وَأَقَامُوا الصَّلَاةَ إِنَّا لَا نُضِيعُ أَجْرَ الْمُصْلِحِينَ.

எவர்கள் இவ்வேதத்தை(ச் சிறிதும் மாற்றாது) பலமாகப் பற்றிப்

பிடித்துக் கொண்டு தொழுகையையும் கடைப்பிடித்து நிறைவேற்றி வருகிறார்களோ அத்தகைய சீர்திருத்தவாதிகளான நல்லவர்களின் கூலியை நிச்சயமாக நாம் வீணாக்குவதில்லை.

(அல்குர்ஆன் 7 : 170)

இந்த வசனத்தில் **أَجْرَهُمْ** அஜ்ரஹூம் என்று சொல்லப்படாமல் **أَجْرَ الْمُصْلِحِينَ** அஜ்ரல் முஸ்லிஹீன் என்று சொல்லப்பட்டுள்ளது. இதில் மூன்று பிரயோசனங்கள் உள்ளன.

1). அல்லாஹ்வின் வேதத்தை பற்றிப்பிடித்து தொழுகையை முறையாக நிறைவேற்றி வருபவர்கள் சீர்திருத்தவாதிகள் என்று முடிவு செய்யப்படுகின்றது.

2). அவர்கள் சீர்திருத்த வாதிகளாக இருப்பதால் அல்லாஹ் அவர்களுக்கு தகுந்த நற்கூலியை கொடுப்பான்.

3). சீர்திருத்தம் செய்பவர்கள் எல்லோருக்கும் அல்லாஹ்விடம் நற்கூலி உண்டு. அது வீணாகிவிடாது, பாதுகாக்கப்பட்டதாக இருக்கும்.

சில நேரங்களில் ழமீராக கூறும்போது யாரைக் கூறுகிறோம் என்ற நோக்கம் தெளிவாகாமல் ஆகிவிடும் என்று இருந்தால் அப்போதும் இள்ஹார் செய்து (பெயர் சொல்லை வெளிப்படுத்தி) கூறவேண்டும். உதாரணமாக இரண்டு பெயர்கள் முன்னர் கூறப்பட்டு, பிறகு ழமீராக கூறும்போது ழமீரைக் கொண்டு அந்த இரண்டு பெயர்களில் நாம் யாரை நாடுகிறோம் என்பது தெளிவாக இருக்காது. ஆகவே, முன் சென்ற இருபெயர்களில் எதை நாம் நாடுகிறோமோ அதையே மீண்டும் வெளிப்படுத்தி கூறிவிட வேண்டும்.

உதாரணமாக:

اَللّٰهُمَّ أَصْلِحْ وُلَاةَ الْـمُسْلِمِيْنَ وَبِطَانَةَ وُلَاتِهِمْ

அல்லாஹும்ம அஸ்லிஹ் உலாத்தனா வ அஸ்லிஹ் வபிதானத்த உலாத்திஹிம் (பொருள்: அல்லாஹ்வே! முஸ்லிம்களின் ஆட்சியாளர்களையும் அவர்களுடைய ஆட்சியாளர்களின் பரிவாரங்களையும் (-அவர்களைச் சுற்றி அவர்களுக்கு நெருக்கமாக இருக்கக்கூடிய அதிகாரிகளையும்) சீர் செய்வாயாக!

மேற்கூறப்பட்ட வாக்கியத்தில் **وَبِطَانَةَ وُلَاتِهِمْ** அவர்களின் ஆட்சியாளர்களின் பரிவாரங்களையும் என்று கூறுவதற்குப் பதிலாக **وَبِطَانَتَهِمْ** அவர்களுடைய பரிவாரங்களையும் என்று கூறப்பட்டிருந்தால் இந்த இடத்தில் உள்ள அவர்களுடைய என்ற வார்த்தை முஸ்லிம்களை குறிக்றிக்குமோ என சந்தேகம் வரலாம். ஆகவேதான், **وَبِطَانَةَ وُلَاتِهِم** அவர்களுடைய ஆட்சியாளர்களின் பரிவாரங்களையும் என்று தெளிவுபடுத்தி கூறப்பட்டுள்ளதால் இந்த சந்தேசம் நீங்கி விடுகிறது.

## ضَمِيْرُ الْفَصْل ழமீருல் ஃபஸ்ல்

அரபி இலக்கணத்தில் **مبتدأ** முப்ததா மற்றும் **خبر** கபர் **معرفة** மஅரிஃபாவாக இருக்கும்போது அவை இரண்டிற்கும் நடுவில் **ضمير الرفع** ழமீர் ரஃப்ஃ உடைய அமைப்பில் உள்ள ஒரு வார்த்தை கொண்டு வரப்படும். அல்லது **إنَّ** இன்ன மற்றும் அதன் சகோதரி எழுத்துக்களின் **اسم** இஸ்ம் மற்றும் **خبر** கபருக்கு நடுவில் இந்த வகை ழமீர் வரும். அல்லது **كان** கான மற்றும் அதன் சகோதரி ஃபிஅலுகளுடைய இஸ்ம் மற்றும் கபருக்கு நடுவில் இந்த வகை ழமீர் வரும்.

அந்த ழமீர் இடத்திற்கு ஏற்ப அமைந்திருக்கும்.

முதகல்லிம் - தன்னிலையுடைய ஒருமை ழமீராக இருப்பதற்கு உதாரணம்.

உதாரணமாக:

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

إِنَّنِي أَنَا اللّٰهُ لَا إِلَٰهَ إِلَّا أَنَا

நிச்சயமாக நான்தான் அல்லாஹ். என்னைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் அறவே இல்லை. (அல்குர்ஆன் 20 : 14)

இந்த வசனத்தில் إِنَّنِي اللّٰهُ என்று இருக்கக்கூடிய இடத்தில் இன்ன உடைய இஸ்மாகிய யாவிற்கும் அதனுடைய கபர் ஆகிய அல்லாஹ்விற்கும் நடுவில் அன என்ற ழமீர் ரஃஃபஃ கொண்டு வரப்பட்டுள்ளது.

முதகல்லிம் - தன்னிலையுடைய பன்மை ழமீராக இருப்பதற்கு உதாரணம்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَإِنَّا لَنَحْنُ الصَّافُّونَ

நிச்சயமாக நாங்கள் (கட்டளையை நிறைவேற்ற அல்லாஹ்வின் உத்தரவை எதிர்பார்த்து) அணிவகுத்து நின்ற வண்ணமாகவே இருக்கிறோம். (அல்குர்ஆன் 37 : 165)

இங்கு نَحْنُ என்பது ழமீருல் ஃபஸ்ல் ஆகும்.

**முகாத்தப் - முன்னிலை உடைய ழமீராக இருக்கும்.**

உதாரணமாக:

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

فَلَمَّا تَوَفَّيْتَنِي كُنْتَ أَنْتَ الرَّقِيبَ عَلَيْهِمْ

நான் அவர்களுடன் இருந்த வரை அவர்களின் செயலை நான் பார்த்துக்கொண்டிருந்தேன். (அல்குர்ஆன் 5 : 117)

إِنَّكَ أَنْتَ الْعَلِيمُ الْحَكِيمُ

நிச்சயமாக நீதான் மிக அறிந்தவன், ஞானம் உடையவன் (அல்குர்ஆன் 2 : 32)

إِنَّكَ أَنْتَ السَّمِيعُ الْعَلِيمُ

நிச்சயமாக நீதான் (எங்கள் பிரார்த்தனையை) நன்கு செவியுறுபவன், நன்கு அறிந்தவன். (அல்குர்ஆன் 2 : 127)

மேற்கூறப்பட்ட மூன்று வசனங்களில் أَنْتَ என்பது ழமீருல் ஃபஸ்ல் ஆகும்.

**காயிப் - படர்க்கை உடைய ழமீராக இருக்கும்.**

உதாரணமாக:

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَأُولَئِكَ هُمُ الْمُفْلِحُونَ

இவர்கள்தான் நிச்சயமாக வெற்றி பெற்றவர்கள். (அல்குர்ஆன் 2:5)

أَلَا إِنَّهُمْ هُمُ الْمُفْسِدُونَ

நிச்சயமாக அவர்கள் விஷமிகளே! (அல்குர்ஆன் 2:12)

أَلَا إِنَّهُمْ هُمُ السُّفَهَاءُ

நிச்சயமாக அவர்கள்தான் முற்றிலும் அறிவீனர்கள். (அல்குர்ஆன் 2:13)

மேற்கூறப்பட்ட வசனங்களில் هُمُ ஹும் என்பது ழமீருல் ஃபஸ்ல் ஆகும்.

**ழமீருல் ஃபஸ்லை கொண்டு வருவதில் பல பிரயோசனங்கள் உள்ளன.**

1). வாசகத்தின் கருத்தை நன்கு உறுதிப்பட சொல்வது.

زَيْدٌ هُوَ أَخُوكَ

ஸைதுதான் உனது சகோதரன்.

இந்த வாக்கியம்,

زَيْدٌ أَخُوكَ

ஸைது உனது சகோதரன் என்று கூறுவதைவிட உறுதியானதாகும்.

2). வாசகத்தின் கருத்தை حصر ஹஸ்ர் செய்து. அதாவது, கபரில் சொல்லப்பட்டுள்ள பொருள் முப்ததா அல்லது இஸ்முக்கு மட்டும் சொந்தமானது என்று வரையறுத்து சொல்வது.

உதாரணமாக

اَلْـمُجْتَهِدُ هُوَ النَّاجِحُ

பொருள்: முயற்சி செய்பவர்தான் வெற்றியாளர்.

3). முப்ததாவும் கபரும் மஅரிஃபாவாக இருக்கும்போது கபரை முப்ததாவுடைய ஸிஃபத் என்று புரிந்துகொள்வதற்கும் வாய்ப்பு இருக்கும். ஆகவே, இந்த ழமீருல் ஃபஸ்லை கொண்டு வரும்போது அது ஸிஃபத் அல்ல கபர்தான் என்று குழப்பம் இல்லாமல் புரிந்து கொள்ள முடியும்.

உதாரணமாக

زَيْدٌ الْفَاضِلُ என்று கூறும்போது ஸைது (ஆகிறவன்) சிறப்பானவன் (ஆவான்) என்று புரிவதற்கு பதிலாக சிறப்பான ஸைது என்று

புரிவதற்கும் சாத்தியம் உண்டு. இரண்டாவது கூறப்பட்டதைப் போன்று புரிந்தால் வாசகம் பூரணமாகாமல் இருக்கும். ஆகவே, زَيْدٌ هُوَ الْفَاضِلُ என்று கூறிவிட்டால் அல்ஃபாழில் என்பது கபர்தான் என்று உறுதியாகிவிடும்.

-----------------------------

பாடம் 16

# اَلْاِلْتِفَاتُ
# இல்திஃபாத்

இல்திஃபாத் என்றால் அரபிமொழியில் திரும்புதல் என்று பொருள். இலக்கியத்தில் இல்திஃபாத் என்றால் பேச்சின் அமைப்பை ஒரு முறையிலிருந்து வேறு ஒரு முறைக்கு திருப்புவதற்கு கூறப்படும். இதற்கு பல தோற்றங்கள் உள்ளன.

## 1). படர்க்கையிலிருந்து முன்னிலைக்கு திரும்புதல்.

உதாரணமாக

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

الْحَمْدُ لِلَّهِ رَبِّ الْعَالَمِينَ ○ الرَّحْمَنِ الرَّحِيمِ ○ مَالِكِ يَوْمِ الدِّينِ ○ إِيَّاكَ نَعْبُدُ وَإِيَّاكَ نَسْتَعِينُ ○ اهْدِنَا الصِّرَاطَ الْمُسْتَقِيمَ ○

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! (அவன்தான்) அகிலத்தார் அனைவரையும் படைத்து வளர்த்து தகுந்த முறையில் பக்குவப்படுத்துபவன். (அவன்தான்) அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையவன், தீர்ப்பு நாளின் அதிபதி(யும் அவனே). (அல்லாஹ்வே!) நாங்கள் உன்னையே வணங்குகிறோம்; உன்னிடமே உதவி தேடுகிறோம். நீ எங்களை நேரான வழியில் நடத்துவாயாக! (அல்குர்ஆன் 1 : 1-6)

இங்கு முதலாவதாக அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும் என்று படர்க்கையாக அல்லாஹ்வை கூறினோம். பிறகு, உன்னையே

வணங்குகிறோம் என்று அல்லாஹ்வை முன்னிலையாக்கி பேசுகிறோம்.

**2). முன்னிலையிலிருந்து படர்க்கைக்கு திரும்புதல்.**

உதாரணமாக

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

هُوَ الَّذِي يُسَيِّرُكُمْ فِي الْبَرِّ وَالْبَحْرِ حَتَّى إِذَا كُنْتُمْ فِي الْفُلْكِ وَجَرَيْنَ بِهِمْ بِرِيحٍ طَيِّبَةٍ وَفَرِحُوا بِهَا جَاءَتْهَا رِيحٌ عَاصِفٌ

நீரிலும் நிலத்திலும் அவனே உங்களை அழைத்துச் செல்கிறான். நீங்கள் கப்பலில் ஏறிய பின்னர் (கப்பலில் உள்ள) அவர்களை நல்ல காற்று நடத்திச் செல்வதால் அவர்கள் மகிழ்ச்சியடைந்திருக்கும் சமயத்தில், அந்த கப்பலை நோக்கி புயல் காற்று அடிக்க ஆரம்பித்தது (அல்குர்ஆன் 10 : 22)

இந்த வசனத்தின் ஆரம்பத்தில் நீங்கள் என்று அல்லாஹ் முன்னிலையாக்கி பேசினான். வசனத்தின் பிற்பகுதியில் அவர்கள் என்று படர்க்கையாக்கி பேசுகிறான்.

**3). படர்க்கையிலிருந்து தன்னிலைக்கு திரும்புதல்.**

உதாரணமாக

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَلَقَدْ أَخَذَ اللَّهُ مِيثَاقَ بَنِي إِسْرَائِيلَ وَبَعَثْنَا مِنْهُمُ اثْنَيْ عَشَرَ نَقِيبًا

நிச்சயமாக இஸ்ராயீலின் சந்ததிகளிடம் அல்லாஹ் உறுதிமொழி வாங்கியிருக்கிறான். இன்னும், அவர்களிலிருந்தே பன்னிரண்டு தலைவர்களை (அப்போஸ்தலர்களை) நாம் அனுப்பி இருக்கிறோம். (அல்குர்ஆன் 5 : 12)

## 4). தன்னிலையிலிருந்து படர்க்கைக்கு திரும்புதல்.

உதாரணமாக

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

إِنَّا أَعْطَيْنَاكَ الْكَوْثَرَ فَصَلِّ لِرَبِّكَ وَانْحَرْ

(நபியே!) நிச்சயமாக நாம் உங்களுக்கு கவ்ஸர் என்னும் (சொர்க்கத்தின்) தடாகத்தை கொடுத்திருக்கின்றோம் (அவற்றுக்கு நன்றி செலுத்துவதற்காக) நீங்கள் உங்களது இறைவனைத் தொழுது, குர்பானி (செய்து) கொடுத்து வாருங்கள். (அல்குர்ஆன் 108 : 1-3)

இவ்வாறு பேச்சில் இல்திஃபாத் என்ற இலக்கிய சட்டத்தால் பல பலன்கள் உள்ளன.

1). பேச்சின் முறை மாறுகின்ற காரணத்தால் முன்னிலையில் இருப்பவர் பேச்சை கவனமாக செவியுற்று அதை புரிவதற்கு அவரைத் தூண்டுவது இதன் நோக்கங்களில் ஒன்றாகும்.

2). பேச்சை செவியுறுவதில் சடைவு, அலுப்பு ஏற்படாமல் தடுப்பதும் இதன் நோக்கங்களில் ஒன்றாகும். ஒரே பாணியில் நான், நான் என்று அல்லது அவன் அவன் என்று பேசிக்கொண்டே செல்வது அதை கேட்பவர்களுக்கு அலுப்பையும் சடைவையும் ஏற்படுத்தும்.

மேற்கூறப்பட்ட பலன்கள் இல்திஃபாத்துடைய எல்லா இடங்களிலும் பொதுவாக இருக்கும்.

இவைத் தவிர ஒவ்வொரு இடத்திற்கு ஏற்ப தனிப்பட்ட விசேஷமான வேறு பலன்களும் இருக்கும்.

அல்லாஹ் மிக அறிந்தவன்.

அல்லாஹ்வின் ஸலவாத்தும் ஸலாமும் நமது நபி முஹம்மது ﷺ

அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தார் மற்றும் அவர்களின் தோழர்கள் மீதும் நிலவட்டும்.

இந்நூல் நிறைவுற்றது!

அகிலங்களின் இறைவன் அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும்!

## திறமைமிக்க மார்க்க அறிஞர்கள் தொகுத்த சட்ட நூல்கள்

தூய்மை

நோன்பு

ஸகாத்

ஹஜ்

தொழுகை

எல்லோரும் அறிய வேண்டிய மார்க்க சட்டங்கள்.

சரியான ஆதாரங்கள்.

எளிய நடை.

இல்லங்கள், மஸ்ஜிகள் மற்றும் மத்ரஸாக்களில் இருக்கவேண்டிய தொகுப்பு.

அல்ஹம்து லில்லாஹ்! படியுங்கள்! பரப்புங்கள்!!

BOOK SIZE: H 21.5 X W 15 CM | 70 GSM PAPER | 5 VOLUMES | 668 PAGES | 44 CHAPTERS





DARUL HUDA

QUALITY ISLAMIC BOOK PUBLISHER

# 211 (102), 1st Floor, Linghi Street, Mannady, Chennai-1.

Phone : +91-44-25247866, | darulhuda.chennai@gmail.com

Mobile : +91-98401 74121 | www.darulhuda.net

DH-TML 2063